

# இந்திய வன விலங்குகள்

# (WILD LIFE IN INDIA)

ப. சி. சுப்பையன்





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 574

# இந்திய வனவிலங்குகள்

ஆசிரியர்
ப. சி. சுப்பையயன், எம்.எஸ்ஸி.,
துணைப் பேராசிரியர், விலங்கியல் துறை,
அரசினர் கலைக்கல்லூரி,
கோயம்புத்தூர்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினுன் காண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித்தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன 'இந்திய வனவிலங்குகள்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 574ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 609 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

## பாகம் I

## நம்நாட்டு வனவிலங்குகள்



## பாகம் II

## பாலூட்டிகள்

## பாகம் III

## பறவைகள்

## WILD LIFE CONSERVATION PLEDGE

" Convinced of the fundamental importance of conserving the natural environment, upon which rests the foundation of human civilisation, I solemnly pledge that I will spare no effort to preserve our vanishing Wild Life and our dwindling forest areas which our generation holds in trust for posterity".



## வனவிலங்குப் பாதுகாப்பு உறுதிமொழி

மனித நாகரிகத்தின் அடித்தளமான இயற்கைச் சூழ்நிலையைக் காப்பதன் அடிப்படை இன்றியமையாமையை நன்கு உணர்ந்து, இன்றைய தலைமுறையினரின் நாளைய வளங்காணும் நம்பிக்கைக் குரிய, குறைந்துவரும் காட்டுப் பகுதிகளையும், மறைந்துவரும் விலங்கினங்களையும் பேணிக்காப்பதில் நான் முனைந்து பணியாற்றுவேன் என முழு மனத்தோடு உறுதி கூறுகின்றேன்.

# 1. நம் நாட்டு வனவிலங்குகள்

ஒரு நாட்டின் வளத்திற்கு விலங்குகளும் மற்றச் செல்வங்களைப் போலவே மிகச் சிறப்பு உடையனவாகும். நீர் வளம், நில வளம், கனி வளங்கள் போன்ற வளங்களுக்கு ஒப்பாகும் அந் நாட்டு விலங்குகளும். இத்தகைய சிறப்புமிக்க வளம் உலகெங்கும் வெகுவாகக் குறைந்துவருகிறது. இன்று இந்திய வன விலங்குகள் பல மிகக் குறைந்தும், சில மறைந்தும் (extinct) விட்டன. இந் நிலை நீடிக்குமாயின் பல விலங்குகள் வெகுவிரைவில் மறைந்துவிடும். அவைகளைப் பற்றிய செய்திகளைப் புத்தகங்களிலும், படங் களிலுமே தெரிந்துகொள்ள நேரிடும். இன்று டோடா (Dodo) (மொரீசியஸ் தீவு), பேசஞ்சர் புறு (Passenger Pigeon) (அமெரிக்கா), இந்திய வேங்கை (சீடா—Cheetah) போன்றவை மறைந்துவிட்டன. இனியும் நம் நாட்டு விலங்குகளும், ஏன் மற்ற நாட்டிலுள்ள விலங்குகளும் அழிந்துவிடாமல் பாதுகாப்பது நம் ஒவ்வொருவருடைய கடமையாகும். கடந்த 2000 ஆண்டு களில் சுமார் 200 இனப் பாலூட்டிகளும் பறவைகளும் மறைந்து விட்டன. இவற்றில் மூன்றில் ஒரு பங்கு கடந்த 50 ஆண்டுகளில் மட்டும் மறைந்துள்ளன.

இயற்கைச் சூழ்நிலையில் வன விலங்குகளைக் காண்பது நம் உள்ளத்திற்கு மகிழ்ச்சியையும், புத்துணர்வையும் தருகின்றது. பெரியவர்களும், முதியவர்களும் இவ் விலங்குகளைக் கண்டு களிப்புற்று, குழந்தைகளைப் போன்று குதூகலம் அடைகின்றனர். விலங்குகளைக் கண்டுகளிப்பது மனச்சோர்வையும், மன நோயையும் தீர்க்கக்கூடிய ஓர் அரிய இயற்கை மருந்தும் ஆகும். இதனால் உள்நாட்டவர்களும், வெளிநாட்டவர்களும் இன்று பெருவாரியாக, நம் நாட்டு வன விலங்குகளைக் காணவருகின்றனர். ஒரு நாட்டின் அரிய செல்வங்களான கோவில்கள், கலைப் பொருள்கள், பண்டைய சின்னங்கள் முதலியவைகளைப் போலவே அந் நாட்டு வன விலங்குகளும் உல்லாசப் பயணியர் மூலம் தற்காலத்தில் ஓரளவிற்கு வருவாயைத் தேடித் தருகின்றன. நேரிடையாக வருகின்ற வருவாய் கணிசமாக இல்லாவிடினும், பிரயாணக் கட்டணம், தங்கும்விடுதிக் கட்டணம் இன்னும் மற்றப்

பொருள்களை விற்பனை செய்தல் போன்றவற்றால் கிடைக்கும் மறைமுக (indirect) வருவாய் கணிசமாக இருப்பதை நாம் அறிதல் வேண்டும். 1968-ல் கென்யாவில் உல்லாசப் பயணியர் மூலம் சுமார் 50 மில்லியன் டாலரும், ஐக்கிய அமெரிக்காவில் அத் தேசத்தின் வருவாயில் 16 சதவீதமும் வருவாயாகக் கிடைத்துள்ளன. நம் நாட்டிலும், வன விலங்குகளை நன்கு பாதுகாத்துச் சிறப்பாகப் பராமரித்துவரின் கணிசமான வருவாய் கிடைக்கும் என்பதில் ஐயம் இல்லை.

இத்தகைய அரும்பெரும் செல்வம் இன்று நம் நாட்டில் மறைந்துவிடும் நிலையிலுள்ளது. இதனையுணர்ந்த நம் மத்திய, மாநில அரசுகள் தக்கமுறையில் போதுமான அளவிற்கு ஆவன செய்து வருகின்றன என்பது நமக்கு மனநிறைவைத் தருகின்றது. இந்தியா, விலங்குச் செல்வத்தில் ஈடு இணையற்றது. நம் நாடு, மானினங்களின் கருவூலமாகவும் பல்வேறு பூனை வகைகளின் முக்கிய இருப்பிடமாகவும் திகழ்கிறது, உலகத்தில் எங்குமே காண இயலாத இரலைமான் (கருமான்—Black Buck), புள்ளிமான் (Chital), கஸ்தூரி மான் (Musk Deer) போன்ற மான் வகைகளும், காட்டுக் கழுதை (Wild Ass), குள்ளம் பன்றி (Pigmy Hog), ஆசிய சிங்கம், இந்திய பெரிய ஒற்றைக் கொம்புக் காண்டா மிருகம் போன்ற மற்ற விலங்குகளும் நம் நாட்டிற்கே உரித்தாக உள்ளன. பூனை வகையில் சிறப்பாக ஆசிய சிங்கம், பனிப் புலி, புலி போன்றவைகள் நம் நாட்டில் உள்ளன. பறவை இனத்தில் வரகு கோழி (இந்திய பெரிய பஸ்டார்டு—The Great Indian Bustard), இமயமலைக் காடை (Himalayas Quail), கறுப்புக் கவுதாரி (Black Patridge) போன்ற பறவைகள் இந்தியாவில் மட்டுமே உள்ளன. ஆனால், இவைகளெல்லாம் இன்று மிகக் குறைந்துவருகின்றன. இவைகளைத் தக்கபடி பாதுகாக்காவிடின் இன்னும் சில ஆண்டுகளில் மறைந்துவிடும்.

நம் நாட்டில் விலங்கு வகைகள் நிறைந்து உள்ளமைக்குக் காரணம் அதன் புவியமைப்பே ஆகும். நம் நாட்டிலுள்ள பனி மூடிய இமயமும், வெப்பம் மிகுந்த தென் மத்தியப் பகுதிகளும், மழை மிகுந்த இமயமலைச் சாரலும், மேற்குத்தொடர்ச்சி மலையும், உயர்ந்து அடர்ந்த வெப்பக் காடுகளும், பரந்த புல்வெளிகளும், தாங்கொண்ணாப் பாலையும், நீண்ட கடற்கரையும், ஆங்காங்கேயுள்ள ஆறு, குளம், ஏரி போன்ற அனைத்தும் பல்வகைப்பட்ட விலங்குகளின் தேவைக்கேற்ற சூழ்நிலைகளையும் வாழ்விடங்களையும் தருகின்றன. உலகத்துப் பல்வேறு பகுதிகளில் காணப்படும் தட்பவெப்பமும் சூழ்நிலையும், வாழ்விடங்களும் பெரும்பாலும் நம் நாட்டிலிருப்பதால், பல்வகைப்பட்ட விலங்குகள்

இங்குக் காணப்படுகின்றன. இங்குள்ள விலங்குகளில் பல மற்ற நாடுகளிலுள்ள விலங்குகளிலிருந்து வெகுவாக வேறுபட்டும் உள்ளன. இதனுலேயே இந்தியாவையும், அதனைச் சார்ந்துள்ள கிழக்கிந்தியத் தீவுகளையும் உயிரினப் புவிப்பரவல்படி (=உயிர்ப் புவியியல் = உயிர் நிலவியல் = Biogeography) ஓரியன்டல் மண்டலம் (Oriental Region) எனத் தனியாகப் பிரித்துள்ளனர்.

நம் நாட்டின் மொத்த நிலப்பரப்பில் சுமார் 21.8% காட்டுப் பகுதியாகும். வன விலங்குகள் உள்ள தேசிய வனங்கள், புகலரண்கள் போன்றவைகள் அனைத்தும் சேர்த்து நம் நாட்டு வனப் பரப்பில் சுமார் 2·3% இருக்கின்றது. அதாவது வன விலங்குகள் வாழுமிடம் நம் நாட்டு மொத்த நிலப்பரப்பில் சுமார் 0·535% ஆகும். இந்திய தேசிய வனங்கள், புகலரண்கள் அனைத்தும் சேர்ந்து சுமார் 18,500 ச.கி.மீ. பரப்பளவாகும். இது கனடா நாட்டில் 44,807 ச.கி.மீ. பரப்புள்ள உட்-பஃபலோ (Woodbuffalo) தேசிய வனத்தில் பாதியளவு கூட இல்லை! இத்தகைய பெரிய தேசிய வனங்கள் கனடாவில் 18 உள்ளன. ஐக்கிய அமெரிக்காவில் சுமார் 55,952 ச.கி.மீ. பரப்பில் தேசிய வனங்களும் புகலரண்களுமுள்ளன. நம் நாட்டில் காடுகள் உள்ள பரப்பளவும், வனவிலங்குகள் உள்ள பரப்பளவும் மிகக் குறைவு என்பது இதனுல் நன்கு புலப்படுகிறது.. இதனையுணர்ந்த நம் நாட்டு வனவிலங்கு வாரியத்தின் வல்லுநர் குழு (Expert committee of the Indian Board of Wild Life) தேசிய வனவிலங்குகள் வாழுமிடங்களின் பரப்பையும், புகலரண்களின் பரப்பையும் மொத்த நிலப்பரப்பில் 4 சதவிகிதத்திற்கு உயர்த்த வேண்டுமென மத்திய அரசுக்குப் பரிந்துரைத்திருக்கிறது.

இந்திய வனவிலங்குகளுக்குத் தற்போது பாதுகாப்பு அளிக்கப் பட்டுவரினும், அவைகளில் பெரும் பகுதி மறைந்துவிடும் நிலையி லுள்ளது. புலி, சிறுத்தை, பனிச் சிறுத்தை, சிங்கம், காட்டுக் கழுதை, கௌர், ரைனே, புள்ளிமான் (Spotted Deer), இரலை (கருமான்—Black Buck), கஸ்தூரிமான் (Musk Deer), சருகுமான் (Mouse Deer), குள்ளம் பன்றி (Pigmy Hog), முள் முயல் (Hispid Hare), லங்கூர் (மந்திகள்=Langurs), வரகு கோழி (இந்தியப் பெரிய பஸ்டார்டு-The Great Indian Bustard) இமயமலைக் காடை, கறுப்புக் கவுதாரி போன்ற விலங்கினங்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைந்து வருகின்றன. (மறையும் நிலையிலுள்ள விலங்கு களின் பட்டியல் தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளது.) இவ் விலங்குகள் எண்ணிக்கையில் குறைந்ததற்குக் காரணங்கள் யாதென அறிந்தால் அக் குறைகளை நீக்கி, வனவிலங்குகளைப் பாதுகாக்க ஆவன செய்தல் இயலும் அன்றே?

# 2. வனவிலங்குகளின் குறைவிற்குக் காரணங்கள்

## (Causes for the Depletion of Wild Life)

மனிதன் தோன்றியதிலிருந்து வனவிலங்குகளைக் கொன்று அழித்து வந்திருக்கின்றான். ஆதியில் தன் பாதுகாப்பிற்காகவும், உணவிற்காகவும் வனவிலங்குகளைக் கொன்றான். இன்று நாகரிக உலகில் வேடிக்கைக்காகவும், விளையாட்டிற்காகவும் வேட்டை என்ற பெயரால் எண்ணற்ற வனவிலங்குகள் அழிக்கப்படுகின்றன. சரித்திரம் தோன்றிய நாளிலிருந்து மனிதன் விலங்குகளைக் கொன்றுவருவது நன்கு புலப்படுகிறது. மனிதனின் தேவைகள் அதிகரிக்க அதிகரிக்க, இயற்கையில் கிடைக்கும் அனைத்தையும் தன் தேவைக்கும், மகிழ்ச்சிக்கும் பயன்படுத்துவதில் ஈடுபடுகின்றான். இதனால் இயற்கையில் ஏற்படும் மாற்றங்களையும் அதனால் ஏற்படும் தீய விளைவுகளையும் புறக்கணிக்கின்றான்; இப்படி நிகழ்ந்ததுதான் வனவிலங்குகளின் குறைவும் மறைவும். நம் நாட்டு வனவிலங்குகள் பல குறைந்ததற்கும், சில மறைந்ததற்கும் பல காரணங்கள் உள்ளன. அவற்றை ஈண்டுக் காண்போம்.

### 1. வாழ்நிலத்தின் மாற்றம்

மக்கள்தொகை அதிகரிப்பினால் நாட்டில் உறைவிட நெருக்கடியும், உணவுப் பற்றாக்குறையும், வேலையில்லாத் திண்டாட்டமும் மிகுந்துள்ளன. இதனால் காடுகள் அழிக்கப்பட்டு, கிராமங்களாகவும் நகரங்களாகவும் விளைநிலங்களாகவும் தொழிற்சாலைகளாகவும் மாற்றப்பட்டு வருகின்றன. புதிய அணைகளைக் கட்டி நீர் தேக்கப்படுவதால் வனவிலங்குகளின் வாழ்விடங்களின் பரப்புக் குறைந்து சூழ்நிலையில் மாற்றம் ஏற்பட்டு அவற்றின் இயற்கையான நிலை பாதிக்கப்படுகிறது. நிலம், நீர், காற்று யாவும் மாசுபட்டு விலங்குகளின் நலன்களைப் பாதிக்கச் செய்கின்றன. பல விலங்குகள் இம் மாற்றங்களைத் தாங்காது இறக்கின்றன. இன்னும் சில விலங்குகள் தங்கள் வாழ்விடங்களை

விட்டு வேறு இடங்களுக்குச் செல்கின்றன. புது இடங்கள் வாழ்க்கைக்கு ஏற்ப இல்லாமையால் அவைகளும் அழிய நேரிடுகின்றன.

2. நோய்கொல்லிகள்

அதிக உணவு உற்பத்தி செய்தல் வேண்டி, பயிர்களுக்கு ஏற்படும் நோய்களைத் தீர்க்கப் பூச்சி கொல்லிகளும், கிருமி கொல்லிகளும் தூவப்படுகின்றன. இதனால் இறக்கும் பூச்சிகளை உண்ணும் சில வனவிலங்குகளும் இறக்க நேரிடுகின்றன. ஃபாலிடால் (Folidol), டெமாக்ரின் (Demacren) போன்ற நோய்கொல்லிகள் மிகக் கொடூரமானவை. இவைகளினால் பெரும்பான்மையான வன விலங்குகள் அழிந்துவிட்டன. 'ஃபாலிடால்' தெளிக்கப்பட்ட பயிர்களைத் தின்னும் வனவிலங்குகள் விரைவில் இறந்து விடுகின்றன. கால்நடைகளைப் பிடித்துத் தின்னும் புலி, சிறுத்தை, நரி போன்றவைகளைக் கொல்ல வேண்டி, இறந்த கால்நடையின் உடலில் 'ஃபாலிடால்' சிறிது ஊற்றி விடுவார்கள். இதைத் தின்னும் ஊன் உண்ணி இறந்துவிடுகிறது. இதனால் தற்போது பெரும் அளவிற்கு புலி, சிறுத்தை, நரி போன்றவை அழிந்து விட்டன. இன்னும் வருந்தத் தக்கது என்னவென்றால் இறந்த கால்நடையைத் தின்னும் கழுகுகளும், மற்ற ஊன் உண்ணிப் பறவைகளும் வெகுவாக அழிந்துவிட்டதாகும்.

3. தொழிற்சாலைகளின் நிறுவனம்

நம் நாட்டில் தொழில்வளத்தைப் பெருக்கப் பல புதிய தொழிற்சாலைகள் பல இடங்களிலும் நிறுவப்படுகின்றன. இவ்வாறு சூழ்நிலைகளின் தன்மையை ஆராயாது பல இடங்களில் காடுகளை அழித்துப் புதிய தொழிற்சாலைகள் நிறுவப்படுவதால் சூழ்நிலை மாசுபடுத்தப்படுகிறது. தாவரங்களும் வனவிலங்குகளும் அழிகின்றன. இந் நிலை நீடிப்பின் காடுகள், புல்வெளிகள், ஏரி, குளம் போன்றவைகள் நிலைத்து நிற்க மாட்டா.

4. வாணிகம் செய்தல்

நம் நாட்டில் வனவிலங்குகளைப் பிடித்து வியாபாரம் செய்வது பெருவாரியாக நடைபெறுகிறது. தந்தங்களுக்காக யானைகளைக் கொல்வதும், கொம்புகளுக்காக மான்களையும் ரைனோசரஸ்களைக் (காண்டாமிருகம்) கொல்வதும், தோலுக்காகப் புலி, சிறுத்தை, உடும்பு, பாம்பு போன்றவற்றைக் கொல்வதும், வாசனைப் பொருள்களுக்காகக் கஸ்தூரிமானைக் கொல்வதும், புனுகுக்காகப் புனுகு பூனையை வளர்ப்பதும், இறகுகளுக்காகப் பல்வகை வண்ணப் பறவைகளைப் பிடிப்பதும், வளர்ப்பதற்காக

மான், புலி, சிறுத்தை போன்றவைகளின் குட்டிகளைப் பிடிப்பதும் சாதாரணமாக நிகழ்வதாகும். இதனுல் பெரும்பான்மையான வனவிலங்குகள் அழிந்துவிட்டன. பல்வகை வனவிலங்குகளைப் பிடித்து அவற்றின் தன்மைகளையும், பழக்க வழக்கங்களையும் அறியாது வளர்ப்பதால், சூழ்நிலை மாற்றத்தினுல் நாளடைவில் அவைகள் இறந்துவிடுகின்றன. புலிக் குட்டி, சிறுத்தைக் குட்டி, குரங்கு, தேவாங்கு போன்றவைகளைப் பிடித்து மேலைநாடுகளுக்கு அனுப்பிப் பெரும் பணம் திரட்டுவதும் உண்டு. பொதுவாகத் தனிப்பட்டவர்களின் தேவையின் பொருட்டுப் பல விலங்குகள் வணிகப் பொருள்களாகக் கையாளப்படுவதால் அவைகள் பெருவாரியாகக் குறைந்துவிட்டன.

5. இயற்கைச் சமநிலைச் சீர்குலைவு

ஒவ்வோர் இனத் தாவரங்களின் எண்ணிக்கையும், விலங்குகளின் எண்ணிக்கையும் ஒரே சீராக இருக்கும்படி இயற்கை பார்த்துக் கொள்கிறது. இவற்றில் ஒன்று மிகுந்தாலும் அல்லது குறைந்தாலும் மற்றொன்று பாதிக்கப்பட்டு இயற்கையின் சமநிலை குலையும். எடுத்துக்காட்டாக, ஊன் உண்ணிகளே இல்லாத காட்டில் மான் இனங்கள் இருப்பின் அவைகள் பெருகி, புற்களையெல்லாம் மேய்ந்து தீர்த்துவிடும். இவ்வாறு உணவுப் பற்றுக் குறை ஏற்படின், அவைகள் விளைநிலங்களிலுள்ள பயிர்களை அழிக்கும். ஆனுல், ஊன் உண்ணிகள் இருப்பின் மான்களைப் பிடித்துத் தின்று அவ்வற்றின் அளவைக் கட்டுப்படுத்திவிடும். மாருக, மான்கள் இல்லாத இடத்தில் புலி, சிறுத்தை போன்ற ஊன் உண்ணிகள் இருப்பின், உணவின்மையால் அவைகள் கால் நடைகளைப் பிடித்துத் தின்னும். இந் நிலை ஏற்படாவண்ணம் இயற்கை கட்டுப்படுத்துவதைத்தான் இயற்கையின் சமநிலை (Balance of Nature) என்கிருேம். ஆனுல், மனிதனின் தலையீட்டினுல் பல விலங்குகளின் அளவு குறைந்தும் அழிந்தும் இயற்கைச் சமநிலை சீர்குலைந்திருக்கிறது.

6. பிற வெளிநாட்டு விலங்குகளை வளர்த்தல்

ஒருநாட்டுத் தாவரங்களைத் வேருெருநாட்டில் பயிர்செய்வதோ, ஒரு நாட்டு விலங்குகளை வளர்ப்பதோ மிகக் கவனமாகச் செய்ய வேண்டியதொன்று. புகுத்தப்படும் விலங்குகளுக்கேற்ற வாழ்விடங்கள் உள்நாட்டிலும் மாருது இருத்தல் வேண்டும். ஆப்பிரிக்கச் சீட்டாவையும், நீர் யானையையும் (Hippopotamus) நம் நாட்டில் வளர்க்கலாம் எனக் கூறப்படுகிறது. ஆனுல், இது வெற்றி பெறுமா என்று கூறுவதற்கில்லை. கிர் காட்டில் (Gir forest) வாழும் சிங்கங்கள் சிலவற்றை உத்தரப் பிரதேசத்திலுள்ள சந்திர பிரபா புகலரணில் புகுத்தி வளர்க்க முடியாது தோல்வி அடைந்தது அறிந்ததே. அதே போல் பெரியாற்றுப் புகலரணில்

புகுத்தப்பட்ட புள்ளிமான்களும் நிலைக்கவில்லை என்பதை அறிதல் வேண்டும்.

7. வாழ்விடங்களை ஆக்கிரமித்தல்

வனவிலங்குகள் வாழுமிடங்களில் பாதை அமைத்தல், கால் நடைகள் மேய்வதற்கு அனுமதித்தல் போன்ற செயல்களும் வன விலங்குகளின் அழிவிற்குக் காரணங்களாகும். மேலும், மரங்களை வெட்டுவதற்கும், விறகு எடுப்பதற்கும் மற்றும் சில காட்டுப் பொருள்களைச் சேகரிக்கவும் மனிதன் அடிக்கடி வனவிலங்குகள் உள்ள இடங்களில் அலைந்து திரிந்து வருவது அவைகளின் வாழ்வைப் பாதிக்கின்றன.

8. திருட்டு வேட்டை

இறைச்சி, தந்தம், கொம்பு, தோல், இறகு போன்ற பொருள் களைச் சேகரிப்பதற்காகத் திருட்டுத்தனமாக வேட்டையாடி (Poaching) விலங்குகளைக் கொல்பவர்கள் பலர் உள்ளனர்.இவ்வாறு வேட்டையாடுபவர்களில் அனுமதி பெற்றவர்களும், அனுமதி பெறாதவர்களும் உள்ளனர். மேலும், இவர்களின் மோட்டார் கார், ஒளிமிக்க டார்ச் லைட் போன்றவற்றால் பல விலங்குகளின் நல்வாழ்வு பாதிக்கப்படுகின்றது. துப்பாக்கியாலன்றிக் கண்ணி வைத்துப் பிடிப்பவர்களும், நஞ்சு வைத்துக் கொல்பவர்களும் உண்டு.

9. மேய்ச்சல்

வனவிலங்குகள் வாழும் இடங்களில் கால்நடைகளை மேய்ப்ப தால், தாவர உண்ணிகளுக்கு உணவும் நீரும் கிடைக்காமல் போகின்றன. மேலும் கால்நடைகளுக்கு வரும் வாய் நோய், கால் நோய் இவ் வனவிலங்குகளையும் தொத்திக் கொள்கின்றன. கால்நடைகள் மேய்வதை அனுமதித்ததனால்தான் முதுமலை, பண்டிபூர் புகலரண்களிலுள்ள பல கௌர் (இந்தியக் காட்டெருமை) கால் நோய், வாய் நோயால் பீடிக்கப்பட்டு இறந்துவிட்டன.

10. அறியாமை

வனவிலங்குகளின் சிறப்பினைப் பொதுமக்களுக்குச் சரிவர எடுத்துக் கூறாததும், அவைகளின் அழிவிற்குக் காரணமாகும். அரசு மட்டுமன்றி, பொதுமக்களும் வனவிலங்குகளைக் காப்பாற்றும் பொறுப்புள்ளவர்கள் என்ற உணர்வு நம் மக்களுக்கு இல்லாதது ஒரு பெரும் குறையாகும். வனவிலங்குகளின் பாதுகாப்பிற்கான சட்ட திட்டங்களை மக்கள் உணர்ந்து கடைப்பிடிப்பதில்லை. சட்டங்களை மீறுவதும் அவற்றிலுள்ள சாதகமான சந்தர்ப் பங்களைப் பயன்படுத்திக் கொள்வதில் ஈடுபடுவதும் வருந்தத்தக்க தாகும்.

# 3. வனவிலங்குப் பாதுகாப்பு

## (Conservation of Wild Life)

மனிதனும் மற்ற விலங்குகளைப்போலவே இயற்கையிலுள்ள மூலப்பொருள்களை நம்பி வாழ்கின்றான். இதனால், இவன் தன் உறைவிடத்திற்காகவும், பயிர்த் தொழிலுக்காகவும், தொழிற் சாலைகளுக்காகவும் வனவிலங்குகளின் வாழ்விடங்களை ஆக்கிர மித்துச் சூழ்நிலையையே மாற்றுகிறான். இச் செயலால், மற்ற விலங்குகளைப் போலவே மனித சமுதாயமும் இன்று மிகப் பாதிக் கப்பட்டுள்ளது. இதனை உணர்ந்து இனியாவது சூழ்நிலைகளில் எவ்வித மாறுபாடுகளும் நிகழாவண்ணம் பாதுகாப்பது அவன் கடமையாகும்.

நம்மைச் சூழ்ந்துள்ள நிலம், நீர், காற்று, தட்ப வெப்பம், தாவரங்கள், விலங்குகள் அனைத்தும் நம் சூழ்நிலைகளாகும் (Environments). உயிரினங்கள் உயிரற்ற சூழ்நிலையுடன் இணைந்து இயங்கி ஒன்றுக்கொன்று தொடர்புள்ள பெரும்பாலும் நிலைத்த சூழ்நிலையை உண்டாக்குகின்றன.

இப் பூமிக்குத் தேவையான சக்தி அனைத்தும் சூரியனிட மிருந்து கிடைக்கிறது. சூரிய ஒளியின் துணைகொண்டு ஒளிச் சேர்க்கையின் மூலம் தாவரங்கள் உணவைத் தயாரிக்கின்றன. இவ் வுணவுகளைத் தாவரஉண்ணி விலங்குகள் (Herbivors) உட் கொள்ளுகின்றன. தாவர உண்ணி விலங்குகளை ஊன்உண்ணி விலங்குகள் (Carnivors) உண்கின்றன. விலங்குகளின் கழிவும், இறந்த உடல்களும், அழிந்த தாவரங்களும் நிலத்தில் கலந்து மீண்டும் தாவரங்களுக்குத் தேவையான ஊட்டமாகின்றன. (Nutrients). இவ் வாழ்க்கைச் சுழல் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக இவ்வுலகில் நடைபெறுகின்றது. இவ் வாழ்க்கைச் சுழலில் (Life Cycle) மனிதன் தலையிடுவது, உயிர்களின் முறை யான வாழ்க்கையில் தலையிட்டு, அவற்றின் வாழ்வைப் பாதிப்ப தாகும். இன்று உலகனைத்திலும் மரங்கள் வெட்டப்பட்டுக் காடுகள் அழிக்கப்படுவதால் பெரும்பகுதிகள் அநேகமாகப் பாலையாக மாறி

விட்டன. இவ்வாறே நம் நாட்டிலும் காடுகள் அழிக்கப்பட்டதால் மழையின்றி வறட்சி ஏற்படுகிறது. இதனுல் வனவிலங்குகளின் வாழ்விடங்கள் குறைந்தும், பாதிக்கப்பட்டும், வன விலங்குகள் வெகுவாகக் குறைந்தும், மறைந்தும் உள்ளன.

பல்லாயிரக் கணக்கான வருடங்களாகத் தட்பவெப்ப நிலையிலும், புவியமைப்பிலும் ஏற்படும் சூழ்நிலை மாற்றங்களுக்கேற்ப, உயிரினங்கள் தழுவி (Adopt) வாழ்கின்றன. ஆனுல், மனிதனுல் ஏற்படும் திடீர் மாற்றங்களால், உயிரினங்கள் சூழ்நிலைக்கேற்ப வாழ முடிவதில்லை. இதனுல் இயற்கைச் சமன்பாடு பாதிக்கப்பட்டுப் பல இனங்கள் அழிகின்றன.

வனவிலங்குகள் பல்வகைப் பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்தவை. வனவிலங்குகள் உணவாகவும், விற்பனைப் பொருள்களாகவும் இருப்பதால் அவைகள் மனிதனுக்கு மிக இன்றியமையாததாக உள்ளன. நம் நாட்டின் மொத்த நிலப்பரப்பில் 46% சாகுபடி நிலமாகவும், 13% மேய்ச்சல் நிலமாகவும் உள்ளன. நாம் தற்போது சாகுபடி செய்யும் நிலம், நமக்குத் தேவையான உணவை உற்பத்தி செய்வதற்கான நிலப்பரப்பைவிட அதிகம். இந் நிலத்தில் தீவிர சாகுபடி முறையில் விவசாயம் செய்தால், நம் உணவுப் பற்றுக்குறையை எளிதில் தீர்த்துக்கொள்ளலாம். தரிசாக உள்ள நிலங்களை விவசாயத்திற்குப் பயன்படுத்தாமல் வனவிலங்குகளின் வாழ்விடங்களாக வைத்துப் பராமரித்தல் நலம். இத் தரிசு நிலங்களை விவசாயத்திற்குப் பயன்படுத்துவதோ கால்நடைகளின் மேய்ச்சல் நிலமாகப் பயன்படுத்துவதோ வருவாய் தருவதாக இல்லை. ஒரு குறிப்பிட்ட அளவு தரிசு நிலத்தை விளைநிலமாக மாற்றி அதிலிருந்துகிடைக்கும் பலனையோ, மேய்ச்சல் நிலமாக மாற்றிக் கால்நடைகளைப் பராமரிப்பதிலிருந்து கிடைக்கும் பலனையோ காட்டிலும், அந் நிலத்தில் வனவிலங்குகளைப் பாதுகாத்து வளர்ப்பதால் கிடைக்கும் வருவாய் அதிகமாக உள்ளது. கால்நடைகளால் மேய்ச்சல் நிலம் வெகுவாகப் பாதிக்கப்படுகிறது. வனவிலங்குகளால் அந் நிலம் அதிகம் பாதிக்கப்படுவதில்லை. மேலும், வனவிலங்குகளுக்கு அதிகக் குடிநீர் தேவையில்லை. தேவையானுல் அவ்வப்பொழுது வன விலங்குகளை அளவோடு வேட்டையாடிக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட அளவு தரிசு நிலத்தில் வாழும் வனவிலங்குகளிலிருந்து கிடைக்கும் புரதம், அதே அளவு நிலத்தில் பராமரிக்கப்படும் கால் நடைகளிலிருந்து கிடைப்பதில்லை. கால்நடைகள் வாழவியலாத நிலங்களிலும் வனவிலங்குகள் நன்கு வளமாக வாழ்கின்றன.

சதுப்பு நிலங்களை விளைநிலங்களாக மாற்றினுல் கிடைக்கும் வருவாயைக் காட்டிலும், அவற்றில் வாழும் பல்வேறு

வனவிலங்குகளைப் பாதுகாத்து அவற்றிலிருந்து கிடைக்கப்பெறும் வருவாய் மிகுதியாக உள்ளது. இந் நிலங்களில் மீன் பண்ணைகள் வைத்துப் பராமரிப்பது மிக்க வருவாய் தருகிறது. மேலும், இந் நிலங்கள் மழைக்காலத்தில் நீரை உறிஞ்சி, கோடையில் வெளிவிடுவதால், வெள்ளத்தைத் தடுக்கவும், வறட்சியைத் தவிர்க்கவும் உதவுகின்றன.

வனவிலங்குகளை இயற்கைச் சூழ்நிலைகளில் கண்டு மகிழ் வதற்காக வரும் உல்லாசப் பயணிகள் பலர். வனவிலங்குகளைப் பற்றிய புத்தகங்களும், படங்களும், திரைப்படங்களும் மக்களை மிகக் கவர்ந்து மகிழ்ச்சியடையச் செய்கின்றன. இவற்றைக் காண்போர் மனம் உவகையால் துள்ளுகிறது. புலவர்களும், கலைஞர்களும் இவைகளைக் கண்டு களிப்புற்றுக் கவிதைகள், சித்திரங்கள், சிற்பங்கள் போன்றவைகளைப் படைத்து, மற்ற வர்களை மகிழ்வடையச் செய்கின்றனர். வனவிலங்குகளால் நாம் அனுபவிக்கும் இன்பத்தினை நம் சந்ததியினரும் அனுபவித்து மகிழும் வண்ணம் அவற்றைக் காப்பாற்றுவது நம் கடமை யாகும். வனவிலங்குகளை நம் சுயநலத்தின் அடிப்படையில் காப்பாற்றுமல், அவற்றைக் காப்பது மனிதனுடைய தலையாய கடமைகளில் ஒன்று என்ற உணர்வால் அவற்றை நாம் காக்க வேண்டும். அவற்றைக் காப்பாற்றுதுவிடின், நாம் நமது கடமையிலிருந்து வழுவியர்களாவோம்.

வனவிலங்குகளை நாம் கீழ்க்கண்ட முறையில் பாதுகாக்க முடியும். அவைகளாவன: வனவிலங்குகளின் வாழ்விடங் களிலுள்ள நிலம், நீர், காற்று, தாவரங்கள் ஆகிய அனைத்தையும் பாதுகாக்க வேண்டும். காடுகள் அழிக்கப்பட்டதற்குக் காரணம் மக்கட் பெருக்கமே ஆகும். இதனை அறிந்து, நாம் மக்கட் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தல் (Limit) வேண்டும். வன விலங்குகளைக் காப்பாற்ற வேண்டியதன் அவசியத்தையும் காரணங்களையும் நாம் மக்கட்கு எடுத்துக் கூறி, அவர்கள் அதனை உணர்ந்து நடக்கும்படி செய்தல் வேண்டும். வனவிலங்குகளின் வாழ்க்கை முறை, சூழ்நிலை ஆகியவற்றை அறிந்து, அறிவியல் முறையில் அவற்றைப் பராமரித்துக் காப்பாற்ற வேண்டும்.

வனவிலங்குகளின் வாழ்விடங்கள் பாதுகாக்கப்படுவதால் இயற்கையின் ஊட்டச் சுழற்சி (Cycle of Nutrients) முறையாக நடைபெறுகிறது. இதனுல் தாவரங்களுக்கும் விலங்குகளுக்கும், தாவரஉண்ணி விலங்குகளுக்கும், ஊன்உண்ணி விலங்குகளுக்கும், உயிரினங்களுக்கும் சூழ்நிலைக்கும் உள்ள சமநிலை (Balance) நிலை நிறுத்தப்படுகிறது. வனவிலங்குகளின் சூழ்நிலை இயலை (Ecology)

அறிவியல் முறையில் ஆராய்ந்து அறிந்து வனவிலங்குகளைக் காப்பாற்ற வேண்டும்.

தற்காலப் பாதுகாப்பு முறைப்படி, வனவிலங்குகளின் பாதிக்கப்பட்ட வாழுமிடங்கள் மீட்கப்பட்டு, புதிதாக மரங்களை வளர்த்துக் காடுகளை உண்டாக்கி, நீர்நிலைகள் மாசுபடாதவாறு பாதுகாத்து, வனவிலங்குகள் வாழ்வதற்கேற்ப அவ் வாழ்விடங்களைப் புதுப்பிக்கலாம். நம் நாட்டில் தற்போது வனவிலங்குகளுள்ள பலவிடங்கள் புகலரண்களாகவும், தேசிய வனங்களாகவும் மாற்றப்பட்டு, அவற்றிலுள்ள வனவிலங்குகள் பாதுகாக்கப்படுகின்றன. மறைந்துவிட்டதாகக் கருதப்பட்ட வனவிலங்குகளைத் தேடிக் கண்டுபிடித்துக் காப்பாற்றும் நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அதன்படி முள் முயலும் (Hispid Hare), குள்ளம் பன்றியும் (Pygmy Hog) சமீபத்தில் அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களில் இருப்பதாக உலக வனவிலங்கு நிதிக்குழுவின் (The World Wild Life Fund) நற்செயலால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. நம் நாட்டுக் காட்டுக் கழுதைகள் குறைந்து வருவதை அறிந்து, அவற்றைக் காப்பாற்ற வேண்டிய நடவடிக்கை எடுக்கவும் இக் குழு பரிந்துரைத்திருக்கிறது. ‘புலியைக் காப்போம்’—Project Tiger திட்டத்திற்கு நிதி யுதவியும் மற்ற உதவிகளும் கொடுக்க இக் குழு முன்வந்துள்ளது.

வனவிலங்குப் பாதுகாப்பு முறைப்படி, வனவிலங்குகளின் எண்ணிக்கை, அவைகள் வாழுமிடங்களின் அளவிற்குத் தக்கபடி இருக்கவேண்டும். வனவிலங்குகளின் எண்ணிக்கை அதிகரித்தால் அவைகளினிடையே உணவு, நீர், இருப்பிடம் ஆகியவற்றிற்காகப் போட்டிகள் ஏற்பட்டு அவைகள் அழிய நேரிடும். இதனால் வனவிலங்குத் துறையினரால் அல்லது அவர்களால் அனுமதிக்கப்பட்டவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட விலங்குகள் வேட்டையாடப்பட்டு அவ் விலங்குகளின் எண்ணிக்கை வாழிடங்களுக்கேற்பக் கட்டுப்படுத்தப்படுகின்றது (Regulated).

சில விலங்குகள் அழியும் நிலையில் இருப்பின் அவைகளைப் பாதுகாக்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. நம் நாட்டில் சிங்கங்கள் கிர் புகலரணில் மட்டும் உள்ளன. இவையும் மிகச் சிலவாகவே உள்ளன. சிங்கங்களை அதிகரிக்கச் செய்யவேண்டி 1957—58-ல் ஓர் ஆண் சிங்கமும் இரண்டு பெண் சிங்கங்களும் மத்தியப் பிரதேசத்திலுள்ள சந்திரபிரபா புகலரணில் விடப்பட்டன. சில ஆண்டுகளுக்குப் பின் அவைகள் இருந்த இடமே தெரியாமல் மறைந்துவிட்டன! எனவே, வனவிலங்குகளைப் பாதுகாப்பதில் நாம் மிகுந்த கருத்துச் செலுத்துதல் வேண்டும்.

# 4. இந்திய உயிரினப் புவிப்பரவல்

## (Biogeography of India)

இந்தியாவையும், அதனையடுத்துள்ள கிழக்கிந்தியத் தீவுகளையும் சேர்த்து உயிரினப் புவிப்பரவல் (உயிர் நிலவியல் — Biogeographycal) அடிப்படையில் ஓரியண்டல் பிராந்தியம் (Oriental Region) எனப் பிரிக்கப்பட்டுள்ளது என்பதை முன்பு கண்டோம். இனி இந்தியா எவ்வாறு உயிரினப் புவிப்பரவல் அடிப்படையில் பல்வேறு மண்டலங்களாய்ப் (Zones) பிரிக்கப்பட்டுள்ளது என்பதை ஈண்டுக் காண்போம். இந்தியா ஒரு துணைக் கண்டம் (Sub-continent). இது பல மண்டலங்களாகப் (Zones) பிரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு மண்டலத்திலும் அதற்குரிய வனவிலங்குகள் உள்ளன. இம் மண்டலங்களுக்கிடையில் திட்ட வட்டமான பிரிவு வேறுபாடுகள் கிடையா. ஒரு மண்டலத்திற்குட் பட்ட விலங்குகள், மற்ற மண்டலத்திலும் காணப்படுகின்றன. சில விலங்குகள் ஒன்றுக்கு மேற்பட்ட மண்டலங்களில் வாழ்கின்றன. பொதுவாக ஒரு மண்டலத்திலுள்ள வனவிலங்குகள் மற்ற மண்டலத்து வனவிலங்குகளிலிருந்து வேறுபட்டிருப்பதை எளிதில் உணரலாம்.

### இமயமலை உட்பிராந்தியங்கள் (The Himalayan Sub-regions)

இமயமலை உட்பிராந்தியங்களிலுள்ள வனவிலங்குகள் இந்தியாவின் மற்றப் பகுதிகளிலுள்ள வனவிலங்கினங்களிலிருந்து வேறுபட்டுள்ளன. இமயமலையிலுள்ள தாவரங்களின் வேறுபாடு களும், விலங்குகளின் வேறுபாடுகளும் இம் மலையின் உயரத்தால் தோன்றியவை. இம் மலைப் பகுதியை நான்கு மண்டலங்களாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு மண்டலத்திலும் அதற்குரிய விலங் கினங்கள் உள்ளன. அந் நான்கு மண்டலங்களாவன;

1. காட்டு மண்டலம் (The Forest Zone)

காஷ்மீரின் கிழக்கு எல்லையிலிருந்து பூடான் வரையிலுள்ள இமயமலைக் காட்டுச் சரிவுகளாகும்.

2. மேற்கு மண்டலம் (The Western Zone)

இது காஷ்மீர், லடாக்கின் கிழக்குப் பகுதி முதல் சித்ரல் (Chitral) வரை உள்ள பகுதியாகும்.

3. திபெத் மண்டலம் (The Tibetan Zone)

இதில் வறண்ட கிழக்கு லடாக்கும், திபெத் பீடபூமியும் அடங்கியுள்ளன.

4. மாறுதல் மண்டலம் (The Transitional Zone)

மேலே கூறப்பட்ட மூன்று மண்டலங்களைத் தவிர, இமய மலையின் உச்சிப் பகுதியும், இமயமலைக்கும் திபெத்திற்கும் இடையிலுள்ள புல்வெளிப் பீடபூமியையும் சேர்த்து மாறுதல் மண்டலம் எனப் பிரிக்கலாம். இம் மண்டலத்திலுள்ள விலங்குகளுக்கு, இமயமலையின் காட்டு மண்டலத்திலுள்ள விலங்குகளின் குணங்களும், ஐரோப்பா, மத்திய ஆசியா ஆகிய பகுதிகளிலுள்ள விலங்குகளின் குணங்களும் காணப்படுகின்றன.

1. காட்டு மண்டலம் (The Forest Zone): இமய மலையின் அடிப் பகுதியிலும், பள்ளத்தாக்கின் கீழ்ப் பகுதியிலும் அடர்ந்த வெப்பக் காடுகள் (Tropical Forests) உள்ளன. இவற்றிலுள்ள விலங்குகள் தீபகற்ப இந்தியக் காடுகளில் காணப்படும் விலங்குகளைப் போல உள்ளன. இப் பகுதியில் புலி, யானை, கௌர் (Gour), கடமை (சாம்பர்), கும் மான் குரைக்கும் மான் (Barking deer) போன்றவைகள் உள்ளன. சதுப்பு நிலப் பகுதிகளிலும், குன்றுகளின் இடையிலுள்ள தாழ்ந்த பகுதிகளிலும், காட்டெருமை (Wild buffalo), புள்ளிமான், பன்றி மான் (Hog deer), சதுப்பு மான் (Swamp deer) போன்றவை உள்ளன.

1525—1830 மீட்டர் உயரமுள்ள பகுதிகளில் தாவரங்கள் மாறுபடுகின்றன. இதில் உள்ள காடுகள் கறுப்பாகவும், இருண்டும் (Gloomy) உள்ளன. இதில் ஓக் (Oaks), மக்னோலியாஸ் (Magnolias), பிர்ச்சஸ் (Birches) போன்ற மரங்களும், மாஸ் (Moss), பெரணி (Ferns) போன்ற தாவரங்களும் உள்ளன.

2745—3660 மீ. உயரமுள்ள பகுதிகளில் பைன் (Pine), ஃபிர் (Fir) மரங்களும், யூ (Yew), ஜம்பர் (Jumper), குள்ள மூங்கில்களும், ரோடோடென்ரான்களும் (Rhododenrons) உள்ளன. இது மித வெப்ப மண்டலம் (Temperate Zone) ஆகும். ஆனால் மலையின் அடிவாரத்திலுள்ள வெப்ப மண்டலத்தையும் (Tropical Zone), மிதவெப்ப மண்டலத்தையும் (Temperate Zone) பிரித்துக் காட்டக் கூடிய எல்லை இடையில் இல்லை. ஒன்று மற்றொன்றுடன் படிப் படியாக ஒன்றி இணைந்திருக்கிறது. இமய மலையின் கிழக்குப் பகுதியில், மிகுந்த மழை பெய்வதால், அங்குள்ள வெப்பக்காடு சற்று உயர்ந்த பகுதி வரையிலும் பரவியிருக்கிறது. குளிர்ச்சியும், வறட்சியும் உள்ள மேற்குப் பகுதியில், இக் காடு அவ்வளவு உயரம் வரையில் பரவியில்லை. தீபகற்ப இந்தியாவில் காணப்படும் பல்வகை விலங்குகள், இம் மித வெப்பப் பிரதேசத்தில் காணப் படுவதில்லை. இந்தோ–சீனாவில் (Indo China) காணப்படும் விலங்கினங்களும், அஸ்ஸாம், பர்மா, தென் சீனப் பகுதிகளில் காணப்படும் விலங்கினங்களும் இம் மித வெப்பப் பிரதேசத்தில் காணப்படுகின்றன. இவ் விலங்குகள் தீபகற்ப இந்தியாவில் காணப்படுவதில்லை. பண்டா (Panda), பன்றி-பேட்ஜர் (Hog-Badger), ஃபெரட்-பேட்ஜர் (Ferret-Badger), பிடரியற்ற முள்ளம் பன்றி (Crestless Porcupine), ஆன்டிலோப் (Antelope), கொரல் (Goral), சிரோ (Serow) ஆகியவைகள் இம் மித வெப்பப் பிரதேசத்தில் உள்ள ஒரு சில பாலூட்டிகளாகும். இவைகள் அஸ்ஸாம் மாநில மித வெப்பக் காட்டைத் தவிர, இந்தியாவில் வேறெங்கும் இல்லை. இமய மலையின் கிழக்குப் பகுதியில், இந்தோ—சீனாவிலுள்ள விலங்கினங்களை யொத்தவைகள் மிகுந்துள்ளதையும், அவைகள் மேற்கே செல்லச் செல்லக் குறைந்து, காஷ்மீர் பகுதியில் முற்றிலும் இல்லாமல் அற்று விடுவதையும் காணலாம்.

2. மேற்கு மண்டலம் (The Western Zone): இம் மண்டலம் காஷ்மீர், மேற்கு லடாக் ஆகியவற்றிலிருந்து சித்ரல் (Chitral) வரையுள்ள பகுதியாகும். கிழக்கு, மத்திய இமயமலைப் பகுதி களில் காணப்படும், இந்தோ-சீனப் பாலூட்டிகள் இங்குக் காணப்படுவதில்லை. இம் மண்டலத்தில் இந்தியாவில் காணப் படும் விலங்கினங்களும் (Indian Species) ஐரோப்பா, வடக்கு ஆசியாப் பகுதிகளிலுள்ள விலங்கினங்களை யொத்த விலங்கு களும் உள்ளன. இந்தியச் சம வெளிகளில் காணப்படும் குரைக்கும் மான் (Barking Deer), இரலை மான் (Black Buck), சின்காரா (Chinkara) போன்றவைகள் இம் மண்டலத்தில் காணப் படுகின்றன. இங்குக் கடமை (சாம்பர் = கடம்பை மான்) காணப்

படுவதில்லை. இங்கு மிகவும் சிறப்பாகக் காணப்படுவது காஷ்மீர் மான் (Kashmir Stag) ஆகும். இந்தியாவிற்கு வடக்கில் காணப் படும் ஐபெக்ஸ் (Ibex), மர்கோர் (Markhore) போன்ற விலங்குகள் இம் மேற்கு மண்டலத்தில் மட்டும் காணப்படுகின்றன. இவைகள் இமய மலையின் கிழக்கு மண்டலத்தில் காணப்படுவதில்லை. உரியல் அல்லது சாபு (Urial or Shapu) காஷ்மீரத்திலும், மேற்கில் பலுசிஸ்தான் (Baluchistan), ஆஃப்கானிஸ்தான் (Afganistan), பெர்சியா (Persia) ஆகியவற்றிலும் இருக்கிறது, இதிலிருந்து தீபகற்ப இந்தியாவிலுள்ள விலங்குகளும் இந்தியாவிற்கு வடக்கு, மேற்குப் பகுதிகளிலுள்ள விலங்குகளும் இம் மேற்கு மண்டலத் திற்குப் பரவியுள்ளன என்பது நன்கு புலப்படுகிறது.

3. திபெத் மண்டலம் (The Tibetan Zone) : திபெத் பீட பூமியிலும், கிழக்கு லடாக்கிலும் உள்ள விலங்குகள் மற்ற மண்டல விலங்குகளிலிருந்து மாறுபட்டுக் காணப்படுகின்றன. உயர்ந்த மலைப் பகுதிகளும், வெறுமைப் பகுதிகளும் (Baren) இம் மண்டலத்தில் அடங்கும். இம் மண்டலம் காஷ்மீரி லிருந்து பூடான் வரையிலுள்ள இந்திய வட எல்லைப் பகுதியில் உள்ளது. இங்குப் பாலையின் நிலையும், ஆர்டிக் பகுதியின் நிலையும் இணைந்துள்ளன. உயர்ந்த மட்டம், பலத்த காற்று, குறைந்த மழை, கடுங் குளிர் ஆகியவைகளே இம் மண்டலத்தின் குணங்களாகும். இங்குக் காட்டுக் கழுதை, அடர்ந்த கம்பள முயல் (Wooly Hare), திபெத்துச் செம்மறி ஆடு (Tibetan Sheep), பாரல் (Bharal), யாக் (Yak) போன்ற பாலூட்டிகள் உள்ளன.

4. மாறுதல் மண்டலம் (The Transistional Zone) : காடுகள் முற்றுப்பெற்ற வெறுமை (Bare) உயர் மலை உச்சியும் மலைகளுக்கிடையில் உள்ள வளமான புல் வெளிகளும் (Luscious Grass Land) வறண்ட திபெத் பீட பூமியும் மாறுதல் மண்டலத்தில் அடங்கும். ஓரியன்டல் பிராந்திய (Oriental Region) விலங்குகளும் பேலியார்டிக் (பழைய ஆர்டிக்—Palaeartic Region) பிராந்திய விலங்குகளும் கலந்து காணப்படுகின்றன. இமயமலையின் உயரமும், அகலமும் ஊடு தடைகளாக அமைந்து (Barries) விலங்குகள் பரவுவதைத் (Dispersal) தடுத்துவிட்டன. இதன் தட்பவெப்பம் வடக்கு, தெற்கு மண்டலங்களின் தட்பவெப்பத் திலிருந்து மிக மாறுபட்டுள்ளது. இவைகளும் விலங்குகளுக்கு ஊடு தடையாக உள்ளன. சுமார் 28° வட அட்சக் கோடு, ஓரியன்டல் வனவிலங்குகளையும் பேலியார்டிக் வனவிலங்கு

களையும் பிரிக்கும் எல்லையாக உள்ளது. இக்கோட்டிற்கு வடக்கில் துன்னெலி (மோல்—Mole), நீர் மூஞ்சூறு (Water Shrew), சுண்டெலி முயல் (Mouse-Hare), மார்-மூட் (Mar Mot), கஸ்தூரி மான் (Musk-Deer), பாரல் (Bharal) போன்ற விலங்குகள் உள்ளன. இவைகள் பேலியார்டிக் விலங்குகளை ஒத்துள்ளன. இக்கோட்டிற்குத் தெற்கில், ஓரியன்டல் பிராந்திய விலங்குகளான 'பறக்கும் நரி' (Flying Fox), பழந்தின்னி வெளவால், மர மூஞ்சூறு (Tree Shrew), புனுகு பூனை (Civet), கீரி, அணில் ஆகியவைகள் உள்ளன.

அஸ்ஸாம்—பர்மா மண்டலம்

இப் பகுதி இமயமலைப் பிராந்தியத்திற்குட்பட்டது. இது வெப்பக்காடு முதல் மித வெப்பக்காடு வரை உள்ளது. உயர் மலைப்பகுதியில் ஆல்பைன் காடுகள் காணப்படுவதில்லை. அஸ்ஸாம் மலைப்பகுதிகளில் மலேசியாவிலுள்ள விலங்குகளை யொத்தவைகள் உள்ளன. பர்மாவில் காணப்படும் கௌர் இந்தியக் கௌரை ஒத்துள்ளது. பர்மாவிலுள்ள கடமை (Sambar), தாமின் (Thamin) போன்றவைகள் இந்திய விலங்கினங்களைச் சேர்ந்தவைகளே.

தீபகற்ப இந்திய உட்பிராந்தியம் (The Indian Peninsular Sub-Region)

மேற்குக் கடற்கரை நீங்கலாக இமயமலை அடிவாரத்திலிருந்து கன்னியா குமரிமுனை வரையிலுள்ள பரந்த பகுதி, தீபகற்ப இந்திய உட் பிராந்தியமாகும். இதன் வடக்குப் பகுதி சிந்து, கங்கையிலிருந்து பிரம்மபுத்திரா வரையிலும் உள்ள வண்டல்மண் (Alluvial) சமவெளியாகும். இதில் அஸ்ஸாம், கிழக்கு—மேற்கு வங்காளம், பீகார், உத்தரப் பிரதேசம், கிழக்கு—மேற்குப் பஞ்சாப், சிந்து ஆகிய மாநிலங்களின் பெரும் பகுதிகள் அடங்கியுள்ளன. இப் பரந்த நிலம் 145—485 கி.மீ. அகலமும், மேற்குக் கரையிலிருந்து கிழக்குக்கரை வரை 2255 கி.மீ. நீளமும் உள்ளது. இது தீபகற்பப் பகுதியையும் இமயமலையையும் பிரிக்கிறது.

தெற்கிலுள்ள தீபகற்பப் பகுதி முக்கோண வடிவில் உள்ளது. இது சுமார் 305 முதல் 915 மீட்டர் வரை உயரத்தில் இருக்கிறது. இதனிடையே பல ஆறுகள் ஓடுகின்றன. இதன் வடக்கு எல்லை விந்திய மலையாகும். இதன் மேற்கிலும், கிழக்கிலும் மேற்குத் தொடர்ச்சி மலையும் கிழக்குத் தொடர்ச்சி மலையும் எல்லைகளாக உள்ளன. மேற்குத் தொடர்ச்சி மலை தொடர்ந்துள்ளது. கிழக்குத் தொடர்ச்சி மலை ஆங்காங்கே விட்டுவிட்டுள்ளது. இவைகளுக்

கிடைப்பட்ட நிலப் பகுதியில் மலைகளும், குன்றுகளும், கணவாய்களும் ஆங்காங்கே காணப்படுகின்றன. தென்னிந்தியாவிலுள்ள நீலகிரி, ஆனைமலை, பழநி மலைகள் குறிப்பிடத்தக்கவைகள்.

இதில் காணப்படும் விலங்குகள் இந்தியாவிற்கே உரிய விலங்குகளாகும். இது, புள்ளி மான், நில்கை (Nilgai) தேன் உண்ணும் கரடி (Sloth Bear), இரலை (கருமான்), நான்கு கொம்பு மான் (Four Horned Antelope) ஆகிய பாலூட்டிகளின் இருப்பிடமாகும். இவ் விலங்குகள் வேறு எங்கும் காணப்படுவதில்லை. இங்குள்ள கௌர், கடமை (கடம்பை மான் = சாம்பர்), குரைக்கும் மான் இந்தியாவின் மற்றப் பகுதிகளிலும் மலேசியாவிலும் உள்ளன.

பாலைப் பிராந்தியம் (The Desert Region)

பஞ்சாப் மாநிலத்தின் சிந்துநதி பாயும் மாவட்டங்கள், மேற்கு சிந்து மாநிலம், பலுஜிஸ்தான் (Baluchistan) ஆகியவைகள் பாலைவனத்தின் கிழக்கு எல்லைகளாக உள்ளன. இப்பாலைப் பகுதி பெர்சியா (Persia) விலிருந்து ஆப்பிரிக்காவின் வடக்குக் கடற்கரை வரையிலும் பரவியுள்ளது. இவற்றின் இடையிலுள்ள அரேபியாவும் (Arabia) பாலைப் பகுதியாகும். இந்தியப் பாலை மண்டலங்களிலுள்ள விலங்குகளான பாலைப் பூனை (Desert Cat), பாலை நரி (Desert Fox), பாலை முயல், ஜெர்பில்லி (Gerbille = மறிமான் எலி) போன்றவை குறிப்பிடத்தக்கவை. இவ்விலங்குகள் மற்ற மண்டலத்திலுள்ள விலங்குகளிலிருந்து குறிப்பிடத்தக்க வகையில் வேறுபடுகின்றன. இவ்வறண்ட பகுதியிலுள்ள விலங்குகள் இதனையடுத்துள்ள பாலைப் பகுதியிலிருந்து வந்தவைகளாகும். பாலையின் சூழ்நிலையில் வாழும் திறன்கொண்ட தீபகற்ப இந்திய விலங்குகளும் இங்குள்ளன.

கங்கைச் சமவெளி (The Gangetic Plain)

இவ்வுட் பிராந்தியத்தில் காணப்படும் விலங்குகள் அதிலுள்ள தாவரங்களைப் பொருத்துள்ளன. இத்தாவரங்கள் அப்பகுதியில் உள்ள மண்ணையும், தட்பவெட்ப நிலையையும் பொருத்துள்ளன. இங்கு மிதமான மழையும், குளிர்காலத்தில் தாழ்ந்த வெப்ப நிலையும் உள்ளன. வடமேற்குப் பகுதியில் மேற்கு—கிழக்குப் பஞ்சாப், மேற்கு இராஜஸ்தான் மாநிலங்களிலுள்ள தாவரங்கள் படிப்படியாக மாறி, மேற்குப் பகுதியிலுள்ள பாலைவனத்துடன் கலந்துவிடுகின்றன. இப்பாலைப் பகுதியிலிருந்து கிழக்கு நோக்கிச் சென்று ஈரப்பதன் (Humid) சமவெளியை அடையும்பொழுது பாலை விலங்குகள் காணப்படுவதில்லை. வறண்ட கங்கைச்

சமவெளிகளில் ஆண்டிலோப்புகளும் (Antelopes) கெஸல்லிகளும் (Gazelle) கூட்டம் கூட்டமாக முன்பு வாழ்ந்தன. கிழக்கு, மேற்கு வங்கப்பகுதியில் மா, ஆல், அத்தி, அரசு, பனை, தென்னை போன்ற தோப்புக்கள் வளமாக உள்ளன. இது தீபகற்ப இந்தியாவின் கடற்கரைப் பகுதிகளைப் போல உள்ளது. இங்குள்ள வன விலங்குகள் தீபகற்ப இந்தியாவின் ஈரமுள்ள (Moisture) காடுகளிலும், விளை நிலங்களிலும் காணப்படுபவைகளை யொத்துள்ளன. இன்னும் கங்கையின் முகத்துவாரத்தில் பரந்த சதுப்பு நிலமும், சதுப்பு நில சுந்தரவனக் காடுகளும் உள்ளன. இங்கே பரந்த புல்வெளிகளும், அடர்ந்த பசுமை மாறாக் காடுகளும் (Ever Green Forests), மாங்ரூவ் காடுகளும் (Mangrove Forest) உள்ள சிறுசிறுத் தீவுகள் உள்ளன. இக்காடுகளில் தீபகற்ப இந்தியாவில் காணப்படும் பெரிய விலங்குகளும் சதுப்பு மான்களும் (Swamp deer) காணப்படுகின்றன.

## தீபகற்பப் பிராந்தியம் (The Main Peninsula)

இம்மண்டலத்தில் ஆறுகளும், பள்ளங்களும் மிகுதியாகவுள்ளன. இவற்றைச் சார்ந்துள்ளப் பகுதிகளில் அடர்ந்த காடுகளும், விலை நிலங்களும் உள்ளன. மற்றப்பரந்த சமவெளிப் பகுதிகள், ஏற்றத் தாழ்வுகளுடனும் ஆங்காங்கே தட்டையாக நிலப்பரப்புள்ள மலைகளுடனும் உள்ளன. மேற்குத் தொடர்ச்சி மலை வடக்கில் உயர்ந்து இருப்பதால் மத்திய இந்தியா, குஜராத், தக்காணம் ஆகிய பகுதிகளுக்குப் போதிய மழை கிடைப்பதில்லை. இப்பகுதி மித மழையுடன் வறண்டுள்ளது. இவ்வறண்ட நிலை, கர்னாடகத்தின் தாழ்ந்தப் பகுதிகளிலும், தென்னிந்தியாவின் சமவெளிகளிலும் நிலவுகிறது. மேலும் இச் சமவெளிகளுக்கு மழையில்லாமல், தென்னிந்திய மலைகள் தடுத்துவிடுகின்றன. இதிலுள்ள தாவரங்கள் மண் தன்மைக்கும், தட்பவெப்பத்திற்கும் ஏற்ப மாறுபட்டுள்ளன. பம்பாயிலிருந்து நாகபுரி (Nagpur) வரையிலும், பெல்காமிலிருந்து மத்திய இந்தியாவின் கூனு (Goona) வரையிலும் பரவியுள்ள சுமார் 518,000 ச.கி.மீ. (200,000 ச. மைல்) பரப்பு, பருத்தி விளையும் கரிசல் நிலமாக உள்ளது. இம்மண் எரிமலையினால் தோன்றியது. இம்மண்ணுள்ள இடங்களில் முள் மரங்களான கருவேலம், இலந்தை இனங்கள், இலைகளற்ற அல்லது சிறிய இலைகள் உள்ள சிறிய மரங்கள், செடிகள் உள்ளன. இந்நிலத்திலுள்ள காடுகள் இலையுதிர்க் காடுகளாகும். இதில் குட்டையான தேக்கு, மூங்கில் மற்றும் பல்வகை மரங்கள் உள்ளன. இப்பகுதியில், பருத்தி, தானியங்கள் (Millets), பயறு வகைகள் (Pulses) ஆகியவைகள் சாகுபடி செய்யப்

படுகின்றன. புல்வெளிகளிலும், முட்புதர்களிலும் முன்பு கெஸெல்லிகளும், ஆன்டிலோப்களும் வாழ்ந்தன. இம் மண்டலத்தின் திறந்த வெளிகளில் காட்டுப் பூனை (Jungle Cat), குள்ள நரி, கீரி (The Common Mongoose), இந்திய ஓநாய் (The Indian Wolf), பனை அணில் (The Palm Squirrels), முயல், மற்றும் பல்வேறு எலி இனங்கள் காணப்படுகின்றன. கௌர் (Gaur = "இந்தியக் காட்டெருமை") கடமை (கடம்பை மான்) புள்ளி மான், தேன் உண்ணும் கரடி (Sloth Bear), செந்நாய் (Wild Dog) போன்றவைகள் இலையுதிர்க் காடுகளில் உள்ளன. இக்கரிசல் நிலப்பரப்பை (Trap Country) விட்டு, நாகபுரிக்கு வடக்கிலும் கிழக்கிலும் உள்ள பகுதிக்குச் சென்றால், அப்பகுதி ஈரப்பதனுடன் (Humid) இருப்பதைக் காணலாம். இது மேற்கு, கிழக்கு வங்காள தட்பவெப்பத்தை யொத்துள்ளது. இங்குள்ள மண்ணின் தன்மையும் தாவரங்களின் தன்மையும் மாறியுள்ளன. தேக்கு மரங்கள் குறைந்து ஸால் மரங்கள் (Sal) அதிகமாகவுள்ளன. இப்பகுதியில் நெல்லும் கரும்பும் பயிரிடப்படுகின்றன. இந்நீர்ப்பதன் உள்ள மண்டலத்தில் காட்டு யானை, காட்டெருமை (Wild buffalo), சதுப்பு மான் (Swamp deer) ஆகியவைகள் காணப் படுகின்றன.

மலையாளக் கடற்கரை (The Malabar Coast)

இம்மண்டலத்தில் மழை மிகுந்தும், நீர்ப்பதன் (Humid) அதிகமாகவும் உள்ளது. மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள மேற்குச் சரிவிலுள்ள காடுகளில் அடர்ந்த உயர்ந்த மரங்கள் உள்ளன. இவற்றினிடையே பல்வகைப் படர்க்கொடிகள் (Creepers) நிறைந்து காணப்படுகின்றன. காடுகளில் ஆங்காங்கே பரந்த இடைவெளிகளும், ஆறுகளும் காணப்படுகின்றன. இவ்விடைவெளிகளில் வாசனைப் பொருட்களும் வெற்றிலையும் பயிர் செய்யப் படுகின்றன.

மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு கிளையாக நீலகிரி மலை அமைந்துள்ளது. இம்மலையில் ஆங்காங்கே பரந்த புல்வெளிகளும் உயர் மட்டங்களில் அடர்ந்த காடுகளும் உள்ளன. இக்காடுகள் சோலைகள் (Sholas) எனப்படும். இச்சோலைகளில் உயர்ந்த பசுமை மாறா (ever green) மரங்களும் அவற்றினடியில் அடர்ந்த தாவரங்களும் வளர்ந்துள்ளன. இத்தகைய சோலைகள் ஆனை மலை, பழநி மலை, மற்றும் வேறு உயர்மலைகளில் உள்ளன. இச் சோலைகளில் யானை, கௌர், இன்னும் மற்ற பெரிய விலங்குகள் வாழ்கின்றன. நீலகிரி மலையின் உயர்மட்டத்திலுள்ள காடுகள் அஸ்ஸாம் மாநில உயர்மட்டக் காடுகளைப் போல் உள்ளன.

இவ்வுயர் காடுகளில் காணப்படும் பல மரங்களும் சில விலங்கு களும் அஸ்ஸாம் மாநிலக் காடுகளில் காணப்படுகின்றன. இத் தீபகற்பப் பிராந்தியத்தில், மற்ற இடங்களில் காணப்படுவதைக் காட்டிலும் மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதியிலும், தென்னிந்திய மலைப்பகுதிகளிலும் அதிகமான வன விலங்குகள் காணப்படு கின்றன. நீலகிரி மந்தி (The Nilgiri Langur), சிங்கவால் குரங்கு (The Lion Tailed Macague), வரிக் கழுத்துக் கீரி (The Striped Necked Mongoose), மலபார் புனுகுப் பூனை (Malabar Civet), முள் எலி (Spiny Mouse) ஆகியவைகள் இக்காடுகளில் மட்டிலுமே உள்ளன. இமயமலைகளில் காணப்படும் தார் (Tahr) பைன்-மார்டின் (Pine Marten), ஐரோப்பிய ஆட்டர் (European Otter) போன்ற விலங்குகள் நீலகிரி, ஆனை மலை உயர்ப்பகுதிகளிலும் உள்ளன.

# 5. தேசிய வனங்கள், புகலரண்கள் ......... நிர்மாணித்தல்

நம்நாட்டு வனவிலங்குகள் இரண்டாம் உலகப்போர் துவங்கிய காலத்திலிருந்து, வெகுவாக அழிக்கப்பட்டு வருகின்றன. அதுவும், நாடு சுதந்திரம் அடைந்தபின் மிக அதிகமாக அழிக்கப் படுகின்றன. பயிர்ப் பாதுகாப்பு, தற்காப்பு என்ற பெயரால் மிகுதியாக விலங்குகள் கொல்லப்படுகின்றன. மேலும் முறையற்ற வகையில் வேட்டையாடுதலாலும், முழுமையாக நிறைவேற்றப்படாத பாதுகாப்புச் சட்ட திட்டங்களாலும், வன விலங்குகள் விரைந்து அழிந்து வருகின்றன. அந்நியச் செலாவணி என்ற பெயரால் தோல்களும் மற்ற விலங்குப் பொருட்களும் ஏற்றுமதி செய்யவேண்டி, வன விலங்குகள் கொல்லப்படுகின்றன. ''தற்போதுள்ள ஒரு சில வனவிலங்குகள், மத உணர்வாலும், மற்றும் எளிதில் அவைகளைக் கண்டு அவற்றின் இருப்பிடத்தை அடையமுடியாத நிலையினாலும் உயிர்தப்பி வாழ்கின்றன'' என இந்திய வன விலங்கு வாரியத்தின் வல்லுநர் குழு கூறுகிறது.

ஒரு சமயம் மத்தியப்பிரதேசத்திலுள்ள கன்ஹா (Kanha) என்ற பகுதியில் சுமார் 1200-க்கும் அதிகமான சதுப்பு மான்கள் (Swamp Deers) இருந்தன. ஆனால் தற்போது சுமார் 100 மட்டுமே உள்ளன. ஒரு காலத்தில் வட இந்திய சமவெளி முழுவதும் ரைனோசரஸ்கள் (Rhinoceros = காண்டா மிருகம்) பரவியிருந்தன. ஆனால் சில காலத்திற்குமுன் இவைகள் முற்றிலும் அழிந்துவிடுமோ என்ற நிலை ஏற்பட்டிருந்தது. எவ்வாறோ காப்பாற்றப்பட்டு இன்று சுமார் 700 ரைனோக்கள் (காண்டா மிருகங்கள்) அஸ்ஸாம், வங்காளம் ஆகிய மாநிலங் களில் மட்டுமே உள்ளன. ஒரு காலத்தில் நாடு முழுவதும் பரவியிருந்த ஆசிய சிங்கங்கள் இன்று குஜராத் மாநிலத்து கிர்

காட்டில் (Gir forest) மட்டும் சுமார் 170 உள்ளன. ஒரு காலத்தில் சுமார் 40,000 எண்ணிக்கை இருந்த புலிகள், இருந்த சுவடு தெரியாமல் பூண்டோடு அழிந்துவிடுமோ என்ற வேதனைக்குரிய நிலையில் உள்ளன. சிறுத்தை, பனிச் சிறுத்தை, மேகச் சிறுத்தை (Clouded Leopard), பளிங்குப் பூனை (Marbled Cat), சிறுத்தைப் பூனை (Leopard Cat), காரகல் (Caracol), முதலை, கேரியல் (Gharial), நான்கு கொம்புமான், இரலைமான், சின்னகாரா (Chinkara) காஷ்மீர் மான் (Kashmir Stag), கஸ்தூரி மான், ஐபெக்ஸ், காட்டுக் கழுதை மற்றும் பல விலங்குகளும் நாளுக்கு நாள் குறைந்துவிடும் நிலையிலுள்ளன. மத்தியப் பிரதேசம், மைசூர், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் மட்டுமே கௌர்கள் உள்ளன. அவைகளும் கணிசமாகக் குறைந்துவிட்டன. கடமை (கடம்பை மான்=சாம்பர்) பல காடுகளில் மறைந்து விட்டது.

வேட்டைப் பறவைகளில் சிறப்பாக வரகு கோழி (இந்திய பெரிய பஸ்டார்டு = The Great Indian Bustard) விரைவில் மறைந்துவிடும் நிலையில் இருக்கிறது. மற்றப் பறவைகளும் வேட்டையாடப்படுவதால் விரைவில் மறைந்துவிடும் நிலையிலுள்ளன. நம் நாட்டிலுள்ள விலங்குகளில் ஓரளவு பாதுகாப்பிலேயே நன்கு பெருகுவது புள்ளிமானும், காட்டுப் பன்றியும் ஆகும்.

நம் நாட்டு வன விலங்குகள் அழிந்துவிடாமலிருக்க மத்திய அரசும், மாநில அரசுகளும் வனவிலங்குத் துறையினை நிறுவி ஆவனசெய்து வருகின்றன. இயற்கை உயிரினங்களைப் பாதுகாத்து அவற்றின் சிறப்புக்களை அனுபவிக்கும் வண்ணம் "அனைத்து நாட்டு இயற்கை வள பாதுகாப்புச் சங்கப் பொதுக்கூட்டம்" (International union for Conservation of Nature and Natural Resources) 1909-ல் பல திட்டங்களை வரையறுத்து, எல்லா நாடுகளும் கடைப்பிடிக்கும்படி கூறியிருக்கிறது. 1962-ல் வாஷிங்டனில் உலகநாடுகள் ஒன்றுகூடி தேசிய வனங்களைப் பற்றிய கூட்டம் நடத்தின. நம் நாட்டில் 1957-ல் இந்திய வன விலங்கு வாரியம் (Indian Board of Wild Life) ஒன்று நிறுவப்பட்டு, அதன் ஆலோசனைப்படி, வன விலங்குகளைப் பாதுகாக்கும் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

வன விலங்குகளை நன்முறையில் பாதுகாக்கும் வண்ணம் அவற்றின் வாழ்விடங்களைப் பல பகுதிகளாகப் பிரித்து அவற்றிற்குத் தக்கபடிப் பராமறித்து வரவேண்டும், என்ற

கருத்தினை ''அனைத்து நாட்டு இயற்கைவளப் பாதுகாப்புச் சங்கம்'' உலக நாடுகள் அனைத்திற்கும் கூறியிருக்கிறது. அதன்படி வன விலங்குகள் உள்ள பகுதிகள் 1. தேசியவனம், 2. புகலரண், 3. இயற்கைக் காப்பு (Nature Preserves), 4. வேட்டை நிலங்கள் (Game Reserves), 5. பிற விலங்கு வாழ்விடங்கள்—எனப் பிரிக்கப்படுகின்றன.

இனி, இப்பல்வேறு வன விலங்குப் பகுதிகளை அவைகளின் அளவு, தன்மை, சூழ்நிலை போன்றவற்றின் அடிப்படையில் எவ்வாறு அமைக்கப்படவேண்டும் என்றும், அவைகளை எப்படிப் பராமரிக்கவேண்டும் என்றும் காண்போம்.

1. தேசிய வனம் (National Park)

ஒரு தேசிய வனம், சிறந்த இயற்கை வளத்துடன் வன விலங்குகள் மிகுந்து அதன் புவியமைப்பில் தனித்தன்மை பெற்றிருத்தல் வேண்டும். இதனை நாட்டின் இன்றியமையாத செல்வமாகப் பாதுகாத்தல் வேண்டும்.

ஒரு தேசிய வனத்தின் சூழ்நிலைப் பண்புகள் மனிதனுடைய குடியேற்றத்தினாலோ மற்ற செயல்களினாலோ பாதிக்கப்படாமல் இருத்தல் வேண்டும். இவ்வனத்தின் விலங்குகள், தாவரங்கள், நிலை அமைப்பு யாவும் தனிப்பண்புடன் இருத்தல் வேண்டும். இவைகள் கல்வி, அறிவியல், மன மகிழ்வு (Recreation) போன்றவற்றிற்குப் பயன்படவேண்டும்.

இத்தகைய தேசிய வனங்களை மனிதர்களின் குடியிருப்பு, பயிர்த் தொழில் செய்தல், தொழிற் கூடங்கள் அமைத்தல் போன்றவற்றிற்குப் பயன்படுத்துவதைத் தடுத்தல் வேண்டும்.

ஒரு தேசிய வனத்தில் 1. வன விலங்குகள் உள்ள பரந்த மண்டலம் (Wilderness Zone) 2. இதைச் சுற்றி ஒரு இடைமாறு பாட்டுக்குறிய மண்டலம் (Transitional Zone) இருக்கும். பரந்த மண்டலத்தில் வனவிலங்குகள் வசிக்கும். இதில் மரங்கள், புல் வெளிகள், நீர் நிலைகள், உப்பு மண் இடங்கள் போன்ற அனைத்தும் இருக்கும். விலங்குகளைக் காண்பதற்காகச் செல்லும் ஒற்றையடிப் பாதைகள், எளிமையான சூழ்நிலைக்கேற்ற தங்கும் குடிசைகளைத் தவிர வேறு எதுவும் இதில் இருத்தல்கூடாது. இடைமாறு பாட்டுக்குறிய மண்டலத்தில் பாதை, தங்கும் விடுதி, மனமகிழ் கூடங்கள், நிர்வாக அலுவலகம் போன்றவைகள் அமைந்திருக்கும். ஆனால் இவைகள் பகட்டான தோற்றத்தில் இல்லாமல் சூழ்

நிலையின் அமைப்புடன் கலந்து, மாறுபடாத வகையில் இடையில், தாங்கல் மண்டலம் (Buffer Zone = இடை மண்டலம்) ஒன்றும் இருக்கும்.

தேசிய வனங்கள் மனிதனுல் ஏற்படுத்தப்பட்டவை. அவற்றை மிகக் கவனமாகக் கீழ்க்கண்ட முறையில் பாதுகாத்தல் வேண்டும்.

தேசிய வனங்களின் சூழ்நிலை மாருமல் பாதுகாத்தல் வேண்டும். இவைகள் மக்களின் கல்வி, மகிழ்ச்சி ஆகிய வற்றிற்கே பயன்படவேண்டும். இவற்றின் இயற்கை அமைப்பைப் பாதிக்கும்படி மாற்றம் செய்வதோ, செயற்கை முறையில் அழகுப்படுத்துவதோ கூடாது.

தங்கும் விடுதிகள், மனமகிழ் கூடங்கள், தங்கும் கூடாரங்கள் அமைப்பது போன்றவை வனத்தின் சிறப்புக் குணத்தை மாற்றி விடக்கூடாது. அலுவலர்களின் குடியிருப்புக்கள் சூழ்நிலையோடு ஒன்றியும், ஆனல் கவர்ச்சியாகவும் இருத்தல் வேண்டும். கட்டடங்கள் நீண்ட அமைப்பிலும், பகட்டான வண்ணத்திலும் இருத்தல் கூடாது.

தேசிய வனங்களின் புவியமைப்பு மாருது பாதுகாக்கப்பட வேண்டும். இவற்றின் சூழ்நிலையியல்பு மாருமல் வருடம் முழுவதும் விலங்குகளின் தேவைக்கேற்ப இருத்தல் வேண்டும். வலசை வரும் விலங்குகளின் (Migratory Animals) தேவைக் கேற்பவும் இருத்தல் வேண்டும். அவ்வப்பொழுது தேவை நேரிடின் நீர், உணவு, உப்பு மண் போன்றவைகளை விலங்குகளுக்குக் கிடைக்கும்படி ஆவன செய்தல் வேண்டும்.

கால்நடைகள் மேய்வதைத் தேசிய வனங்களிலும், புகலரண் களிலும் அனுமதிக்கக் கூடாது. நீர், நிலம், காற்று மாசுபடுதல் கூடாது. தேசிய வனங்களினுள் அணைக்கட்டி நீர் தேக்குதல், நீர் மின் நிலையங்கள் அமைத்தல், நீரோட்டத்தை மாற்றிவிடுதல், சுரங்கம் தோண்டுதல், ஆலைகளுக்குத் தேவையான காட்டுப் பொருட்கள் சேகரித்தல், நிறுவனப் பொருட்கள் சேகரித்தல் போன்றவற்றைச் செய்தல்கூடாது. மேலும், தேசியவனத்தினுள் நெடும்பாதை அமைத்தல், மின் கம்பிகளும் மற்ற கம்பிகளும் செல்லுதல், வேலியிடுதல் போன்றவைகளைப் பெரும்பாலும் செயல்படுத்தாமல் இருத்தல் வேண்டும்.

பார்வையாளர்களின் மகிழ்ச்சிக்காக, தேசிய வனத்தின் இயற்கைச் சூழ்நிலையை மாற்றக்கூடிய எதையும் செய்தல்கூடாது.

ஏதாவது செய்வதாய் இருப்பின், அது மனிதர்களின் பாதுகாப்பிற் காகவோ அல்லது செய்யப்படும் மாற்றம் வனத்தின் இயற்கை யமைப்பையும் சூழ்நிலையையும் பாதிக்காது என்ற நிலையிலும் அம் மாற்றங்களைச் செயல்படுத்த வேண்டும்.

தேசிய வனங்களிலுள்ள வன விலங்குகளின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தல் வேண்டும். ஒவ்வொரு இன விலங்குகளின் எண்ணிக்கையும் குறிப்பிட்ட அளவிற்கு அதிகம் போகாதபடி வைத்துக்கொள்வது சிறந்தது. உகாண்டாவில் யானைகளின் எண்ணிக்கை அதிகமாகிவிட்டதால் அவைகள் வசிக்கும் காடு களிலுள்ள மரங்கள் அழிக்கப்பட்டு வருகின்றன. நாளடைவில் காடே அழிந்துவிடும் என்ற நிலையிலுள்ளது. மிகுதியாகவுள்ள யானைகளைக்கொன்று அவற்றின் எண்ணிக்கையைக்கட்டுப்படுத்தும் நடவடிக்கையை அந்நாடு மேற்கொள்ளவிருக்கிறது. இதே நிலை அந்நாட்டில் பல ஆண்டுகளுக்குமுன் ரைஞேசிரஸினுல் ஏற்பட்டது. அந்தமான் தீவில் மான்கள் விடப்பட்டு சில ஆண்டுகளில் அவை களின் எண்ணிக்கை மிக அதிகரித்துவிட்டது. ஊன் உண்ணி களான ஓநாய், சிறுத்தை போன்றவைகளை அங்குப் புகுத்தி, மான் களின் எண்ணிக்கை கட்டுப்படுத்தப்பட்டது.

தேசிய வனங்களினுள் விலங்குகளைப் பார்ப்பதற்காக நடந்தோ, அல்லது குதிரை, யானை போன்றவற்றின் மீதோ போகலாம்; படகுகளிலும் செல்லலாம். மற்றபடி ஜீப், வேன் (Van) போன்ற மோட்டார் வாகனங்களிலோ 'ஹெலிகேப்டர்' போன்ற விமானங்களிலோ பார்வையாளர்கள் செல்வதை அனுமதிக்கக்கூடாது. இரவில் ஒளிமிக்க விளக்குகளை விலங்கு களின்மீது பாய்ச்சுவதோ, ஒலி எழுப்புவதோ (Horn) கூடாது. விலங்குகள் மிகுதியாகக் காணப்படும் இடங்களில் பரண்கள் அமைத்தோ சூழ்நிலைக்கேற்ற உயர்மாடங்கள் அமைத்தோ பார்வையாளர்கள் கண்டுமகிழும் வண்ணம் ஏற்பாடு செய்யலாம். தேசிய வனங்களிலுள்ள விலங்குகளைக் காணவரும் பார்வையாளர் களுக்காக விலங்குகளைப் பற்றிய உரையாடல், படக்காட்சி போன்றவற்றை ஏற்பாடு செய்யலாம். வனங்களில் தங்கி மகிழும் அனுபவம் பெறும் வண்ணம் விலங்குகளின் நலம் பாதிக்கப்படாத வகையில் எல்லா வசதிகளையும் ஏற்படுத்தலாம்.

வனவிலங்குகளை எந்தப் பருவகாலத்தில் (Season) நன்கு கண்டு மகிழ முடியுமோ அந்தக் காலத்தில்தான் பார்வையாளர்கள் (Visitors) அனுமதிக்கப்பட வேண்டும். மற்றக் காலங்களில் பார்வையாளர்கள் அனுமதிக்கப்படக்கூடாது. அதிக அளவு

பார்வையாளர்கள் வனத்திற்கு வந்து வனத்தின் அமைதியையும் சூழ்நிலையையும் பாதிக்கும் நிலையை உண்டாக்கக்கூடாது.

2. புகலரண் (Sanctury)

தேசிய வனங்களாகக் கருதப்படாத, பரப்பில் குறைந்த ஆனால் வன விலங்குகள் நிறைந்துள்ள பகுதியைப் புகலரண் களாகக் கொள்ளலாம்.

தேசிய வனத்தை நிர்வகிக்க உதவும் எல்லாவித நடவடிக்கை களும் இவற்றிற்கும் மேற்கொள்ளப் படவேண்டும். இருப்பினும், நீர்மின் திட்டங்கள் செயல்படுத்துதல், ஆலைகளின் தேவைக்காக நீர்த்தேக்குதல், தேவையான மரங்களை அளவோடு வெட்டுதல் போன்றவைகள் புகலரண்களில் அனுமதிக்கப்படுகின்றன. மேலும் கால்நடைகள் மேய்தல் அளவோடு அனுமதிக்கப்படும். கால்நடை மேய்ச்சலுக்காகக் கட்டணம் வசூலிக்கப்படும். வன விலங்குகளுக்கு நீர், உணவு போன்றவற்றில் பற்றாக்குறை ஏற்படின், கால்நடைகள் மேய்வது அனுமதிக்கப்பட மாட்டா. கால்நடைகள் பகலில் மட்டும் மேய்வது அனுமதிக்கப்படும். புகலரண்களினுள் மேயும் கால்நடைகளுக்கு நோய்த் தடுப்புஊசி போடப்பட்டே அனுமதிக்கப்படும். புகலரண்களினுள் மனிதர் களின் நடமாட்டமும், பெரிய வாகனங்களின் போக்குவரத்தும் இருத்தல் கூடாது.

ஒவ்வொரு புகலரணைச் சுற்றியும் ஒரு தாங்கல் மண்டலம் (Buffer Zone) இருக்கவேண்டும்.

3. இயற்கைக் காப்பு (Nature Preserve)

சில இடங்களில் வனவிலங்குகள் மிகுதியாகவும் காணப் படுகின்றன. இத்தகைய இடங்கள் தேசிய வனங்களிலோ அல்லது மற்ற இடங்களில் தனித்தோ இருக்கலாம். பறவைகள் கூடு கட்டுமிடங்கள் பறவைகள் சேர்ந்து வாழும் இடங்கள் ஃபிளமிங்கோ (Flamingo), பெலிகன்கள் (Pelicans) கூடு கட்டும் இடங்கள் இதற்கு எடுத்துக் காட்டுகளாகும். இவற்றைக் கண்டு பிடித்து, பாதுகாத்து வளப்படுத்தும் ஆக்கப்பணியில் ஈடுபடுதல் வேண்டும்.

இத்தகைய இயற்கைக் காப்பிடங்களை அறிவியல் ஆய்விற் காகப் பயன்படுத்தலாம். ஆயினும் இந்த ஆய்வு அவ்விலங்கு களின் நன்மைக்காக மட்டுமே இருத்தல் வேண்டும்; வேறு ஆய்விற்கு அனுமதிக்கக்கூடாது.

4. வேட்டை நிலங்கள் (Game Reserves)

சில இடங்களில் வேட்டை வன விலங்குகள் பாதுகாக்கப்பட்டு அளவோடு முறையாக வேட்டையாடப்படுவது அனுமதிக்கப் படுகிறது.

நம் நாட்டில் வேட்டை விலங்குகளைச் சிறப்பாக நிர்வாகம் செய்ய 1970, ஆகஸ்டு மாதம் கூடிய இந்திய வனவிலங்கு வாரியத்தின் வல்லுநர் குழு சில பரிந்துறைகளை (சிபாரிசுகளை) அரசிற்கு எடுத்துக் கூறியிருக்கிறது. அதன் திரண்ட கருத்துக் களைக் காண்போம்.

1. வன விலங்குகள் எங்கிருப்பினும் அவைகள் அரசுடமை யெனப் பிரகடனப் படுத்துதல் வேண்டும்.
2. வனவிலங்குகளை வேட்டையாடுதல், கண்ணி வைத்தல், வலை வைத்தல், விற்பனை செய்தல் போன்றவற்றைத் தடுக்கும் சட்டங்களை நிறைவேற்றி அமுல் படுத்த வேண்டும்.
3. வனவிலங்குகளை ஒரு சில குறிப்பிட்ட காலங்களில்தான் வேட்டையாட வேண்டும்.
4. வேட்டை நிலங்களுக்குப் பெரிய வாகனங்களில் சென்று துப்பாக்கியால் சுடுதல் கூடாது.
5. வேட்டை விலங்குகளின் எண்ணிக்கையை அவ்வப்போது கணக்கெடுத்து எத்தனை விலங்குகளை வேட்டையாடலாம் என்பதனைத் தீர்மானிக்க வேண்டும்.
6. வேட்டையாடுவதற்குக் கட்டணம் விதிக்க வேண்டும். விலங்கின் தரம், அது விலைபோகும் நிலை போன்றவற்றைக் கருத்திற் கொண்டு வேட்டையாடும் கட்டணத்தை அவ்வப்போது நிர்ணயிக்க வேண்டும்.
7. உரிய துறையின் அனுமதியின்றி வன விலங்குகளை எந்த இடத்திலும் எந்தக் காரணத்திற்காகவும் சுடுவதோ, பிடிப்பதோ கூடாது. தற்காப்பிற்காகவும் பயிர் பாதுகாப்பிற்காகவும் கொல்லப்பட்ட விலங்குகளை அதற் குரிய துறையினரிடம் உடனே ஒப்படைக்க வேண்டும்.
8. சட்ட திட்டங்களுக்குப் புறம்பாகவும் வேறு எந்த காரணத்திற்காகவும் வேட்டையாட யாருக்கும் எவ்வகைச் சலுகைகளும் அளிக்கக் கூடாது. வேட்டை

யாடிய குற்றவாளிகளுக்கு எவ்விதச் சலுகையும் தரக் கூடாது.

9. அழியும் நிலையிலுள்ள விலங்குகளைப், "பாதுகாப்பிற் குட்பட்டது" என அரசு அறிவித்து, அவற்றைக் கொன்றவர்களைத் தேசத்தின் நன்மைக்கே தீங்கிழைத் தவர்களாகக் கருதி அவர்கள் மீது தக்க நடவடிக்கைகள் எடுத்தல் வேண்டும்.

10. உணவு, நீர் போன்றவைகள் கிடைக்காத நெருக்கடிச் சமயங்களில் வேட்டை விலங்குகளுக்கு அவைகள் கிடைக்கும்படி ஆவன செய்தல் வேண்டும். கால்நடைகள் இவற்றை அனுபவிக்க அனுமதிக்கக் கூடாது.

11. வேட்டையாடப்பட வேண்டிய விலங்குகள் எவை யென்பது அது சம்பந்தப்பட்ட துறையினர்அன்றி வேறு யாரும் தீர்மானிக்கக்கூடாது.

5. பிற வாழ்விடங்கள் (Other Areas)

பொதுவாக நம் நாட்டில் வனவிலங்குகள் காடுகளில் இருப்பதால் அவைகள், மாநில அரசின் காட்டிலாக்கா பொறுப்பி லுள்ளன. இருப்பினும் மற்ற அரசுத்துறைக்குச் சொந்தமான இடங்களிலும் தனியார் இடங்களிலும் வன விலங்குகள் இருப்பதை நாமறிவோம். பல வனவிலங்குகளும் பறவைகளும் ரெவின்யூ தரிசு நிலங்களில் உள்ளன. இவ் விலங்குகள், வெகுவாக வேட்டை யாடப்படுகின்றன. இவ் விலங்குகள் வேட்டையாடப்படுவதைத் தடுத்து நடவடிக்கை எடுக்கும் உரிமை, ரெவின்யூ துறையினருக்கும் (உள்ளாட்சித்துறையினருக்கும், கிராம அதிகாரிகளுக்கும் இல்லை.) இதனை அறிந்த நம் நாட்டு வன விலங்கு வாரியத்தின் வல்லுநர் குழு இவ் வனவிலங்குகளைப் பாதுகாக்க வேண்டி சில சிபாரிசுகளை அரசுக்குக் கூறியிருக்கிறது. அதன்படி,

1. வனவிலங்குகள் வேட்டையாடப்படுவதைத் தடுக்கும் உரிமையைக் கிராம அதிகாரிகளுக்கு அளித்தல்வேண்டும்.

2. வனவிலங்குகளைப் பாதுகாக்கும் உரிமையைக் கிராமப் பஞ்சாயத்திற்கு ஒப்படைக்க வேண்டும். இதனால் காட்டிலாக்காவுடனும் ரெவின்யூ இலாக்காவுடனும் ஒத்துழைத்து வன விலங்குகளைப் பாதுகாக்க வியலும்.

3. வனவிலங்குகளைப் பாதுகாக்கும் உணர்வினை ஒவ்வொரு குடிமகனும் உணரும்படி ஆவன செய்தல் வேண்டும். இது ஒரு சமூகக் கடமையென ஒவ்வொருவரும் உணர்ந்து செயல்பட வேண்டும்.

## இந்தியா

# தேசியவனங்கள், புகலரண்கள்

ஜம்மு காஷ்மீர்

இமாச்சல பிரதேசம்

பஞ்சாப்

மே. பாகிஸ்தான்

நந்தா தேவி

ஹரியானா

கார்பெட்

நேபாளம்

பூடான்

பாரத்பூர்

உத்தரப்பிரதேசம்

இராஜஸ்தான்

சிவ்புரி

சந்திர பிரபா

பீஹார்

ரேவா

கிழ. வங்காளம்

திரிபுரா

மணிப்பூர்

மத்தியப் பிரதேசம்

மே. வங்காளம்

கிர் காடு

ஒரிஸ்ஸா

மஹாராஷ்டிரா

கொலமுரு

ஆந்திர பிரதேசம்

மைசூர்

ரங்கன் திட்டு

சென்னை

வேடந்தாங்கல்

பண்டிபூர்

முதுமலை

தமிழ்நாடு

கேரளம்

பெரியாறு

இலங்கை



படம் I—6.1. நம் நாட்டிலுள்ள சில முக்கிய தேசிய வனங்களும் புகலரண்களும்

# 6. தேசிய வனங்கள், புகலரண்கள் ......... பட்டியல்

முன் அத்தியாயத்தில் நம் நாட்டு வனவிலங்குகள் வாழும் பகுதிகளை எப்படி யெப்படியெல்லாம் பிரித்து அவற்றைப் பாது காத்தல் வேண்டுமெனக் கண்டோம். நம் மாநிலங்களிலுள்ள சில முக்கிய தேசிய வனங்கள், புகலரண்கள், பறவைகள் முகாம் (Birds Refuge) படம் I–6·1· போன்றவற்றின் விவரங்களும், அவற்றில் காணப்படும் முக்கிய விலங்குகளைப்பற்றிய விவரங்களும் பட்டியல் முறையில் இந்த அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. 1970, ஆகஸ்டில் இந்திய வனவிலங்கு வாரியத்தின் வல்லுநர் குழு தயாரித்த பட்டியலையும், முன்னுள் தமிழ்நாடு வனவிலங்கு அலுவலர் திரு. M. A. பாஷா I.F.S., தயாரித்துள்ள பட்டியலையும் தழுவி இப்பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளது.

## I. அரியானு—Hariyana

| பெயர் | பரப்பு | காணப்படும் விலங்குகள் |
|---|---|---|
| 1. ப்ரஸ்சன் Brasson (1964) | 5 ச.கி.மீ | நீல்கை (Nilgai) முயல் (Hare) சின்காரா (Chinkara) இரலை—கருமான் (Black Buck) பழுப்பு கவுதாரி (Gray Patridge) மயில் |
| 2. தார்புர் Dharpur (1964) | 38 ச.கி.மீ | நீல்கை முயல், சின்காரா, இரலை, பழுப்புக்கவுதாரி, மயில் |
| 3. கலிஸார் Kalesar (1964) | 45 ச.கி.மீ | நீல்கை, சின்காரா, இரலை, கழுதைப் புலி, சிறுத்தை |

| | | | |
|---|---|---|---|
| 4. | கோலி கேரி பிர்<br>Kholi Kheri Bir<br>(1964) | 6 ச.கி.மீ | நீல்கை, சின்காரா, இரலை, முயல் |
| 5. | ஷினுர்கர்<br>Shihnargarh | | நீல்கை, சின்காரா, இரலை, முயல் |
| 6. | சுல்தான்புர் ஜீல்<br>Sultanpur jeel<br>(தீர்மானிக்கப் பட்டிருக்கிறது) | | நீர்ப்பறவைகள், ஃப்ளமிங்கோ, மற்றும் வலசைப் பறவைகள், (Migratory birds) |
| 7. | தெஹ் மஜிபுல்லா பிர்<br>Theh Majipulla Bir<br>(1964) | 3 ச.கி.மீ | நீல்கை, சின்காரா, இரலை |

## II. அஸ்ஸாம்

| | | | |
|---|---|---|---|
| 8. | கரம்பாணி<br>Garampani<br>(1952) | 6 ச.கி.மீ | யானை. காட்டெருமை, சிறுத்தை, லங்குர் (Langur) ஹூலாக் (Hoolock) புலி. |
| 9. | கஜிரங்கா<br>Kagiranga<br>(1908)<br>தேசீய வனமாக்கும் திட்டம் உள்ளது. | 430 ச.கி.மீ | ரைனோசரஸ் (காண்டா மிருகம்) காட்டெருமை, யானை, சிறுத்தைப் பூனை, கீரி, நீர் நாய், புனுகுப் பூனை, காட்டுப்பன்றி, சதுப்பு மான், பன்றிமான், கடமை(கடமான் = சாம்பர்) லங்குர், புலி, மலைப்பாம்பு, பெலிகன், கவுதாரி. |
| 10. | லோகாவா<br>Laokhawa | 70 ச.கி.மீ | ரைனோசரஸ் (காண்டா மிருகம்) காட்டெருமை, சதுப்புமான், பன்றிமான், நீர் வாத்து-' (Water duck), கார் மொரண்ட் - (Cormorant) |
| 11. | மானுஸ்<br>(Manas)<br>(1928) | 580 ச.கி.மீ | காட்டு நாய் — செந்நாய், யானை, கௌர்—Gaur, காட்டெருமை, ரைனோசரஸ், |

| | | |
|---|---|---|
| | கௌஹாதியிலிருந்து 200 கி.மீ. பார்வைக் காலம்; டிசம்பர் முதல் மார்ச் முடிய | (காண்டாமிருகம்) லங்குர், தங்கநிற லங்குர், புனுகுப் பூனை, நீர் நாய், சதுப்பு மான், பன்றி மான், கடமான், குள்ளம் பன்றி, உடும்பு, காட்டுப்பன்றி, சிறுத்தை, புலி, மலைமொங்கன் (Great-pied Horn bill) |
| 12. ஆரங் Orang (1915) | 65 ச.கி.மீ | ரைனோசரஸ் (காண்டா மிருகம்) யானை, சிறுத்தை, கடமான் (சாம்பர்) குரைக்கும் மான்—(barking deer) சதுப்பு மான், புலி, நீர்ப்பறவைகள், பச்சைப்புறா, ஃப்ளோரிகன்-(Florican) காடை-guai. சீட்டியடிக்கும் டீல், (Whistling teal), வாத்துக்கள்-geese, பருந்துகள் Hawks. |
| 13. பபா—Pabha (1941) | 45 ச.கி.மீ | காட்டெருமை, குரைக்கும் மான், (barking deer,) |
| 14. சோனை-ரூபா Sonai-Rupa (1934) | 195 ச.கி.மீ | ரைனோசரஸ் (காண்டா மிருகம்) யானை, காட்டெருமை, தேனுண்ணும் கரடி (Sloth bear). காட்டு நாய்-செந்நாய், காட்டுப் பன்றி, கடமை (கடமான் – சாம்பர், குரைக்கும் மான், சதுப்புமான், சிறுத்தை, புலி, மலைமொங்கன்-(Hornbill) இம்பீரியல் புறா—(imperial pigeon). |

## III. ஆந்திரப் பிரதேசம் (Andhra pradesh)

| | | |
|---|---|---|
| 15. இடூர் நகரம் Eturnagaram (1975) | 815 ச.கி.மீ | கரடி, காட்டுப்பன்றி, புலி, கௌர்—gaur. கடமான்—சாம்பர், நில்கை–nilgai, புள்ளி |

| | | |
|---|---|---|
| | | மான்—சிடால், சின்காரா—சிறுத்தை, பல்வகைப் பறவைகள். |
| 16. கொல்லிரு பெலிகேனரி பறவைப் புகலரண் (1963) | 3265 ச.கி.மீ | பெலிகன்கள், |
| 17. பாகல்—Pakhal (1952) | 880 ச.கி.மீ | தேனுண்ணும் கரடி, புள்ளி மான், நில்கை, கின்காரா, காட்டுப்பன்றி, சிறுத்தை, புலி, முதலை, கடமை கடமான்—-சாம்பர், மற்றும் பல்வகைப் பறவைகள். |
| 18. போசரம்—Pocharam (1952) | 130 ச.கி.மீ | காட்டுப்பன்றி, கரடி, புள்ளி மான், சிறுத்தை, பல்வகைப் பறவைகள். |
| 19. க்யூவால்—Quwal (1952) | 1295 ச.கி.மீ | காட்டுப்பன்றி, கௌர், நில்கை, புலி, கடமான், புள்ளிமான், இரலை (Black—buck) குரைக்கும் மான், சிறுத்தை, கரடி, பல்வகைப் பறவைகள். |

## IV. இமாசலப் பிரதேசம்

| | | |
|---|---|---|
| 20. பண்டலி | 35 ச.கி.மீ | இமயக் கருப்புக்கரடி, (Himalayan black bear) சிவப்புக் காட்டுக்கோழி (Red jungle fowl) சுகோர்கௌதாரி—(Chukor patridge) |
| 21. டாரங்டி Daranghti (1962) | 45 ச.கி.மீ | கொரால்—(goral) கஸ்தூரி மான்—(Musk deer) சிரோ—(Serow), பனிச்சிறுத்தை—(Snow leopard), மோனல் ஃபெஸன்ட்—(Monal pheasant). |

| | | |
|---|---|---|
| 22. டார்ல காட் (Darlaghat) (1964) | 50 ச.கி.மீ | கொரால் (goral), குரைக்கும் மான், கடமான் (கடமை—சாம்பர்) சுகோர் கௌதாரி (chukor patridge), சீர் பெஸ்ன்ட் (cheer pheasant), காட்டுக் கோழி (jnngle fowl). |
| 23. காமுகுல் (Gamugul) (1967) | 40 ச.கி.மீ | காஷ்மீர் மான், (Kashmir stag), தார் (tahr), பழுப்புக் கரடி (Brown bear), கஸ்தூரி மான், கொரால், குரைக்கும் மான், மோனல் (Monal), பனிச்சேவல் (Snow cock), சுகோர் கௌதாரி (Chukor patridge). |
| 24. கோவிந்சாகர் (Govind sagar) (1962) | 30 ச.கி.மீ | நீர் நாய், நீர்ப் பறவைகள். |
| 25. கலாடோப் கஜியர் (Kalatop and khajiar) (1958) | 50 ச.கி.மீ | கலிஜ் (Kalij), மோனல் (Monal) கொக்லாஸ் ஃபெஸ்ன்ட் (Koklas pheasant), கொரல், சிரோ serow), இமயக் கருப்புக் கரடி, பறக்கும் அணில் (flying squirrel). |
| 26. குக்டி (Kugti) (1957) | 15 ச.கி.மீ | இபெக்ஸ் (ibex), பழுப்புக் கரடி, தார் (tahr), கஸ்தூரி மான், பனிச்சிறுத்தை, கொரால், கொக்லா ஃபெஸ்ன்ட், கவுதாரிகள், மொனல் (Monal). |
| 27. லிப்பா (Lippa) (1962) | 30 ச.கி.மீ | இபெக்ஸ் (ibex), பழுப்புக் கரடி, இமாலயக் கருப்புக் கரடி, கஸ்தூரி மான், பாரல் (bharal), பனிச்சிறுத்தை, வீசில் (Weasel), பனிச்சேவல், மோனல் ஃபெஸ்ன்ட், சுகுர் கௌதாரி (Chukor patridge), |

| | | |
|---|---|---|
| | | கொக்லஸ் ஃபெஸன்ட் (Koklas pheasant), பனிப்புறு (Snow pigeon). |
| 28. நர்கு (Nargu) (1962) | 55 ச.கி.மீ | கஸ்தூரி மான், சுகுர் கௌதாரி, மோனல், தார். |
| 29. ராகோ அம் (Rakohum) | 25 ச.கி.மீ | பாரல் (bharal), கொரால், பழுப்புக்கரடி, இமயக்கருப்புக் கரடி, பனிச்சிறுத்தை, கஸ்தூரி மான், இபெக்ஸ் (ibex), வீசில் (Weasel), பனிச்சேவல் (snow cock), மோனல் ஃபெஸன்ட் கலிஸ் ஃபெஸன்ட் (Kaliz pheasant), கொக்லாஸ் ஃபெஸன்ட், பனிப்புறு. |
| 30. ரேனுகா (Renuka) (1964) | 15 ச.கி.மீ | கொரால், கடமான்—சாம்பர், கலிஸ் ஃபெஸன்ட், (Kaliz pheasant), சிவப்புக் காட்டுக் கோழி, கவுதாரி. குரைக்கும் மான், முதலை. |
| 31. ஸசுதுன் நீலா (Sachutun nela) (1967) | 10 ச.கி.மீ | இபெக்ஸ் (ibex), தார் (tahr), பழுப்புக் கரடி, குரைக்கும் மான், பனிச் சேவல், மோனல் ஃபெஸன்ட், ஃரகோபன் ஃபெஸன்ட், (tragopan pheasant), சுகுர் கவுதாரி, (chukor patridge). |
| 32. சிகரிதேவி (Shikaridevi) (1962) | 75 ச.கி.மீ | இமயக் கருப்புக்கரடி, குரைக்கும் மான், கொக்லஸ், கலிஸ் ஃபெஸன்ட். |
| 33. சில்லி (Shilli) (1964) | 2 ச.கி.மீ | கொரல் (goral), குரைக்கும் மான், கலிஸ் kaliz, சுகுர், கருப்புக் கவுதாரி (black patridge). |

| | | | |
|---|---|---|---|
| 34. | சிம்பல்பாரா (Simbalbara) (1958) | 55 ச.கி.மீ | கடமான் — சாம்பர், புள்ளி மான், குரைக்கும் மான், கொரல், புலி, சிவப்புக் காட்டுக் கோழி, கலிஸ், கவுதாரி. |
| 35. | ஸ்ரீநைஞதேவி (Shrinainadevi) (1962) | 30 ச.கி.மீ | குரைக்கும் மான், சிவப்புக் காட்டுக் கோழி, கவுதாரி, காட்டு நாய், நீர்ப்பறவைகள். |
| 36. | சிம்லா (Simla) (1958) | 50 ச.கி.மீ | கொரல் (Goral), குரைக்கும் மான், கொக்லஸ் (Koklas), கலிஸ் (Kaliz). |
| 37. | டாரியா (Taria) (1962) | 25 ச.கி.மீ | இமாலயக் கருப்புக் கரடி, புனுகுப் பூனை, கஸ்தூரி மான், மோனல் ஃபெஸன்ட், கொக்லஸ் (Koklas), கலிஸ் (Kaliz), கடமான்—சாம்பர், கொரல், பறக்கும் அணில், சுகுர் கௌதாரி, பனிப்புறு. |
| 38. | மஜ்ஹல்ஹல் (Majhalhal) (1962) | 35 ச.கி மீ | கொரல் (goral), குரைக்கும் மான், கடமான், சுகுர், காட்டுக்கோழி. |
| 39. | டுண்டா (Tunda) (1962) | 35 ச.கி.மீ | தார் பழுப்புக்கரடி, இமயக் கரடி, கஸ்தூரி மான், ஃரகோபன், கவுதாரி, பனிச் சேவல், மோனல். |

## V. உத்தரப் பிரதேசம் (Uttar pradesh)

| | | | |
|---|---|---|---|
| 40. | பகட்வா (Bhakatwa) (1960) | 115 ச.கி.மீ | கடமான் — கடமை, புள்ளி மான், குரைக்கும் மான், காட்டுப்பன்றி, நில்கை, சிறுத்தை, புலி, கரடி. |
| 41. | சந்திரபிரபா (Chandraprabha) (1957) | 80 ச.கி.மீ | நில்கை, கடமான் (கடமை), புள்ளிமான், கரடி, காட்டுப் பன்றி, சின்காரா, கிறுத்தை. |

| | | |
|---|---|---|
| 42. கோவிந் வல்லப பந்த் பஷு விஹார் (Govind vallabh pant pashu vihar) (1955) | 955 ச.கி.மீ | இமாலயக் கருப்புக் கரடி, கஸ்தூரி மான், பரல் (Bharal), கொரல் (Goral), செரோ (Serow), பனிச்சிறுத்தை, பழுப் புக்கரடி, மொனல், சுகார் (Chukar), கவுதாரிகள். |
| 43. ஜுலாசல் (Jaulasal) (1953) | 55 கி.மீ | யானை, கரடி, கடமை, சதுப்பு மான், புள்ளி மான், பன்றி மான். காட்டுப்பன்றி, செந்நாய், சிறுத்தை, புலி, முள்ளம்பன்றி. |
| 44. மலான் (Malan) (1957) | 85 ச.கி.மீ | புள்ளிமான், கடமை, குரைக் கும் மான், முள்ளம்பன்றி, கலிஸ் (Kaliz), காட்டுக்கோழி. |
| 45. மால்தன் (Maldhan) (1953) | 20 ச.கி.மீ | கரடி, கடமை, சதுப்பு மான், பன்றி மான், குரைக்கும் மான், சிறுத்தை, புலி. |
| 46. மோடிகர் (Motichur) (1938) | — | கடமை, பன்றி மான், யானை, சிறுத்தை, புலி. |
| 47. நந்ததேவி (Nandadevi) | 325 ச.கி.மீ | இமயக் கருப்புக்கரடி, பழுப் புக்கரடி, கொரல் (Goral), கஸ்தூரி மான், சிரோ, தார், பனிச்சிறுத்தை, மோனல் (Monal). |
| 48. கோர்பெட் தேசீய வனம் (Corbett National park) டில்லியிலிருந்து 320 ச.கி.மீ பார்வைக்கு ஏற்ற காலம் டிசம்பர் முதல் மார்ச் முடிய. | 325 ச.கி.மீ | புள்ளிமான், பன்றிமான், காட்டுப்பன்றி, கடமை, குரைக்கும் மான், மலைப் பாம்பு, முதலை, சிறுத்தை, புலி, கொரல், இரலை—கருப்பு மான், மலை மொங்கன் (Horn bill). |
| 49. ராஜாஜி புகலரண் | 455 ச.கி.மீ | யானை, கரடி, குரைக்கும் மான், சிறுத்தை, புலி, காட் |

| | | |
|---|---|---|
| (Rajaji Sanctuary) | | டுப்பன்றி, முள்ளம்பன்றி, நில்கை (Nilgai), காட்டுக் கோழி, மயில், கவுதாரி, வேறு பல்வகைப் பறவைகள். |
| 50. சோனரிபுர் (Sonaripur) | 65 ச.கி.மீ | கரடி, கடமை (கடமான்), சதுப்பு நிலமான், பன்றிமான், குரைக்கும் மான், காட்டுப் பன்றி, நீல்கை, சிறுத்தை, புலி. |
| 51. தண்டா (Tanda) (1958) | 16 ச.கி.மீ | கரடி, கடமை, சதுப்பு மான், பன்றிமான், குரைக்கும் மான், காட்டுப்பன்றி, சிறுத்தை, புலி. |

## VI. ஒரிசா (Orissa)

| | | |
|---|---|---|
| 52. பலுகண்ட் (Balukhant) (1935) | 15 க.கி.மீ | இரலை — கருமான் (black buck) |
| 53. சந்தகா (Chandaka) (1935) | 35 ச.கி.மீ | புள்ளிமான், குரைக்கும்மான், யானை, .கரடி, கடமை, சிறுத்தை, புலி. |
| 54. டிப்ரிகார் (Dibrigarh) (1932) | 115 ச.கி.மீ | கடமை, கௌர் (gaur), சிறுத்தை, புலி. |
| 55. கலாசன்னி (Khalasunni) (1962) | 115 ச.கி.மீ | யானை, கௌர், புள்ளிமான், கடமை, கரடி, நீல்கை, குரைக்கும் மான், சிறுத்தை, புலி, பல்வகைப் பறவைகள். |
| 56. மஹாநதி பைசி—பல்லி (Mahanadi and) Baisipalli (1962) | 260 ச.கி.மீ | யானை, கௌர், கடமை, புள்ளிமான், புலி, சிறுத்தை, சுண்டெலி மான்—(சருகுமான் (Mouse deer), நான்கு கொம்பு மான். |
| 57. பத்மதலா Padmatala (1962) | 50 ச.கி.மீ | யானை, கௌர், பைசன், (Bisan — காட்டெருமை) கடமை, புன்ளிமான், சருகு மான் — சுண்டெலி மான், |

| | | |
|---|---|---|
| | | நீல்கை, புலி, சிறுத்தை, நான்கு கொம்பு மான் (four horned antelope). |
| 58. ரெய்கொடா Raigoda (1938) | 45 ச.கி.மீ | யானை, கௌர், கடமை, புள்ளிமான், சிறுத்தை, சருகு மான்—சுண்டெலி மான், புலி. |
| 59. சிம்லிபால் (Simlipal) | | |
| தேசிய வனமாக்கத் தீர்மானிக்கப் பட்டுள்ளது. | | யானை, கடமை, புள்ளிமான், சிறுத்தை, புலி. |
| 60. உஷாகோதி (Ushakothi) (1962) | 165 ச.கி.மீ | யானை, கௌர், கடமை, புலி, சிறுத்தை. |

## VII. குஜராத் (Gujarath)

| | | |
|---|---|---|
| 61. கிர் (Gir) (1965) | 1295 ச.கி.மீ | சிங்கம், (Panthera leo,) சிறுத்தை, கழுதைப்புலி, கடமை, காட்டுப்பன்றி, புள்ளிமான், நில்கை, நான்கு கொம்பு மான், (four horned antelope). |
| 62. புராணு— (Purana) (*1969*) | 300 ச.கி.மீ | புள்ளிமான், நான்கு கொம்பு மான், கடமை, காட்டுப்பன்றி. |
| 63. நால்சரோவார் (Nalsarowar) (*1969*) | | நீர்க்கோழி (water foul), ஃப்ளமிங்கோ (flamingo). |
| 64. வெலவடார் (Velavadar) | 8 ச.கி.மீ. | இரலே—கருமான் (black buck) |

## VIII. கேரளா (Kerala)

| | | |
|---|---|---|
| 65. நெய்யாறு (Neyyar) (*1958*) | 130 ச.கி.மீ. | யானை, காட்டுப் பன்றி, கடமை-சாம்பர், புள்ளிமான், நீல்கை (Nilgai). |
| 66. பரம்பிகுளம் (Parambikulam) | 80 ச.கி.மீ. | யானை, கௌர், சிறுத்தை, புலி, நீல்கை, புள்ளிமான், கடமை. |

| | | |
|---|---|---|
| 67. பீச்சி (Peechi) *(1958)* | 95 ச.கி.மீ. | யானை, கௌர், கடமை, காட்டுப்பன்றி, நிலப் பறவைகள், |
| 68. பெரியாறு (Periyar) *(1950)* | 780 ச.கி.மீ. | யானை, புலி, சிறுத்தை, காட்டு நாய், கரடி, காட்டுப் பன்றி, நீல்கை. |

## IX கோவா (Goa)

| | | |
|---|---|---|
| 69. பண்ட்லா (Bandla) *(1969)* | 8 ச.கி.மீ. | கடமை, கௌர், சிறுத்தை, மலபார் அணில் (Malabar squirrel) |
| 70. கோடிகோ (Gotigao) *(1967)* | 105 ச.கி.மீ. | புள்ளிமான், கடமை, காட்டுப் பன்றி, சிறுத்தை. |
| 71. மொல்லெம் (Mollem) *(1967)* | 240 ச.கி.மீ. | புள்ளிமான், கடமை, கௌர், மலபார் அணில், சிறுத்தை. |

## X. தமிழ்நாடு (Tamilnadu)

| | | |
|---|---|---|
| 72. முதுமலை (Mudumalai)<br>உதகமண்டலத்திலிருந்து 67 கி.மீ. பார்வைக் காலம் பிப்ரவரி மாதம் முதல் மே மாதம் முடிய. | 320 ச.கி.மீ. | கொரல், (Goral) யானை, கடமை, குரைக்கும் மான், கௌர், நான்கு கொம்பு மான் (Four horned antelope) சருகு மான் — சுண்டெலிமான், நீலகிரிதார் (Nilgiri tahr), பரட்டைத்தலைக் குரங்கு, (Bonnet monkey) லங்குர், மலபார் அணில், பறக்கும் அணில், புலி, சிறுத்தை, செந்நாய், காட்டுநாய், செந்நாய், புனுகுப் பூனை, ரேடில் (Ratel), மெல்லிவோரா கரடி, (Mellivora Caperois Indica) முள்ளம் பன்றி, கரடி, காட்டுப் பன்றி, மலைப்பாம்பு, உடும்பு (Monitor lizard) |
| 73. கிண்டி குழந்தைகள் | 375 ச.கி.மீ. | புள்ளிமான், இரலை, பரட்டைத்தலை குரங்கு, (Bonnet |

| | | |
|---|---|---|
| வனம். (Guindy Children's park) (1958) | | monkey) புனுகுப் பூனை, ஓநாய், கீரி, காட்டுப் பூனை, பல்வகை உள்நாட்டுப் பறவைகளும், வலசைப் பறவைகளும். |
| 74. முண்டன் துறை (Mundan Thurai) (1952) இது புலியைப் பாதுகாக்க என்றே ஏற்படுத்தப்பட்டது. | 520 ச.கி.மீ. | புலி, சிறுத்தை, கடமை, (கடமான்) புள்ளிமான், நீலகிரிதார், சருகுமான்—சுண்டெலிமான், பறவைகள். |
| 75. வேடந்தாங்கல் (Vedanthangal) நீர் பறவைப் புகலரண் சென்னையிலிருந்து 82 கி.மீ. பார்வைக்காலம் : நவம்பர் மாதம் முதல் மார்ச் மாதம் முடிய. | 50 ச.கி.மீ. | 27 வகை நீர்ப்பறவைகளின் சிறப்பினங்கள் உள்ளன. இவற்றில் பல வலசைப் பறவைகளும் உள்ளன. |
| 76. கோடிக்கரை (Point Calimere) | | இரலை, புள்ளிமான், காட்டுப் பன்றி, வலசைப் பறவையான ஃப்ளமிங்கோ, ஆயிரக்கணக்கில் காணப்படும் மற்றும் பச்சைப் புறு, மைனா, இன்னும் பழம் தின்னும் பறவைகள் குளிர்காலத்தில் பூச்சி தின்னும் பறவைகளும், மற்ற வலசைப் பறவைகளும், நிறைந்து ; காணப்படும். |

## தமிழ்நாட்டில் மற்ற நீர்ப் பறவைகள் முகாம் (Water fowl Refuge)

| மாவட்டங்கள் | முகாமின் பெயர் | காணப்படும் பறவை |
|---|---|---|
| 1. இராமநாதபுரம் | நென்மேனி ஏரி (Nenmeni lake) | டீல், (Teal), கூட் (Coot), இந்தியன் மூர்ஹென் ஸ்டார்க் (Stork), க்ரெப்ஸ் (Grebes), சீட்டியடிக்கும் டீல் (Whistling teal), புள்ளி அலகு—வாத்து, (Spot billed duck) |

| | | | |
|---|---|---|---|
| 2. | செங்கல்பட்டு | அரப்பாக்கம் (Arapakkam) | வெங்கல இறக்கை ஜெகனு, bronzet wingedjacana) திறந்த அலகு ஸ்டார்க் (Open billed stork). கார்கேனி டீல் (garganey teal). டார்ட்டர் (darter). இந்தியன் மூர்ஹென் (Indian Moorhen), ஃடேப்சிக். (dabchick), வெள்ளை இபிஸ் (White ibis), எக்ரட் (egret), நாரை (heron), |
| 3. | தஞ்சாவூர் | முத்துப்பேட்டை தலைஞாயர் (Talanayar) | ஸோவெலர்ஸ் ( Shovellers ), கார்கேனி டீல் (garganey teal), சீட்டியடிக்கும் டீல் (Whistling teal). |
| 4. | திருச்சிராப் பள்ளி | தேவராயன் ஏரி | நீள்த்தலை வாத்து (barhead geese), வண்ண மடையான் (painted stork), புள்ளி அலகு வாத்து (spot billed duck). |
| 5. | திருநெல் வேலி | குண்டகுளம் (Kundakulam) | வண்ண மடையான் (painted stork), பெலிகன், எக்ரட் (egret), கார்மொரண்ட், (cormoront), |
| 6. | தென் ஆற்காடு | கஷ்வேலி சதுப்பு நிலம் (Kazveli swamp) | திறந்த அலகு மடையான், (open billed stork), டெர்ன் (Tern), ஃகல் (gull), எக்ரட் (egret), மணல் பைப்பர்—(sand piper.) |
| | | தென்னகரம் ஏரி (Thennagaram lake) | கூட் (Coot), கார்மொராண்ட் டீல், ஸ்னைப் (snipe), மணல் பைப்பர், மடையான் (stork), நாரை heron, எக்ரட் (egreat). |
| | | வீராணம் ஏரி | கூட் (coot), கார்மொராண்ட், டார்டர் (darter), மணல் பைப்பர், (sand piper). திறந்த அலகு மடையான் open billed stork), எக்ரட் (egret), நாரை, (heron), |

| | | |
|---|---|---|
| 7. மதுரை | வைகை அணை (Vaigai Dam) | ஊசிவால் (pin tail) பொசார்டு (pochard), பெலிகன், டீல், மணல் பைப்பர், எக்ரட், நாரை (heron). |
| 8. வட ஆற்காடு | காவிரிப் பாக்கம் | இந்திய மூர்ஹென் (Indian Moorhen), திறந்த அலகு மடையான், (Open billed stork), ஃரெப்ஸ்(grebs), எக்ரட் (egret), ஷெல்ட்ராக் (sheld-rake). |

## XI. பஞ்சாப் (Punjab)

| | | |
|---|---|---|
| 77. புபீந்தர் சாகர் (Bhupinder sagar) (1952) | — | பல்வகை வாத்துக்கள் (ducks). |
| 78. பிர் (Bir) (1959) | | நீர்ப்பறவைகள், பன்றிமான், புள்ளிமான், நில்கை, காட்டுப் பன்றி, |
| 79. கூகியானு (Ghugiana) (1964) | 30 ச.கி.மீ. | காட்டு முயல் (hare) இரலே, காட்டுப் பன்றி, நில்கை, சின்காரா, கவுதாரிகள். |
| 80. மோடிபாக் (Moti bagh) (1939) | 5 ச.கி.மீ. | நில்கை, இரலே, புள்ளிமான். காட்டுப்பன்றி, காட்டு முயல், கவுதாரி. |

## XII. பீகார் (Bihar)

| | | |
|---|---|---|
| 81. பாமியபுரு (Bamiaburu) (1934) | 130 ச.கி.மீ. | கடமை, சிறுத்தை, புலி. |
| 82. பாரசண்ட் (Barasand) (1946) | 60 ச.கி.மீ | கடமை, யானை, கௌர், காட்டுப்பன்றி, புள்ளிமான், சிறுத்தை, புலி. |
| 83. டும்கா டாமின் (Dumka Damin) (1938) | 90 ச.கி.மீ. | காட்டுப்பன்றி, புள்ளிமான், சிறுத்தை, புலி, |

| | | |
|---|---|---|
| 84. ஹசாரிபாக் தேசியவனம் (Hazaribagh National park) (1954) ராஞ்சி (Ranchi)யிலிருந்து 113 கி.மீ. பார்வைக் காலம்: பிப்ரவரி முதல் மே மாதம் முடிய. | 195 ச.கி.மீ | கழுதைப்புலி, கரடி, காட்டுப் பன்றி, கடமை (கடமான்), புள்ளிமான், குரைக்கும் மான், நில்கை, சிறுத்தை, புலி. |
| 85. கைமுர் (Kaimur) (1959) | 1365 ச.கி.மீ | கடமான், ஃசின்காரா, சிறுத்தை, புலி, கரடி. |
| 86. கெர் (Kerh) (1946) | 110 ச.கி.மீ | கௌர், கரடி, புள்ளிமான், கடமை, புலி, சிறுத்தை. |
| 87. கொடர்மா (Koderma) | 180 ச.கி.மீ | கரடி, கடமை, குரைக்கும் மான், புள்ளிமான், சிறுத்தை, புலி. |
| 88. லாட் (Lat) (1946) | 95 ச.கி.மீ | கௌர், கரடி, கடமை, புள்ளி மான், சிறுத்தை, புலி. |
| 89. பலமு தேசிய வனம் (Palamu National park) (1959) | 230 ச.கி.மீ | லங்குர், ரிஸஸ் குரங்கு, (Rhesus monkey) புலி, சிறுத்தை, கடமை, புள்ளி மான், யானை, கௌர், பன்றி. |
| 90. ராஜ்கிர் (Rajgir) (1959) | 50 ச.கி.மீ. | புள்ளிமான், கடமை, சிறுத்தை. |
| 91. டபோ (Tabo) (1932) | 145 ச.கி மீ | கடமை, சிறுத்தை, புலி. |

## XII. மத்திய பிரதேசம் (Madhya Pradesh)

| | | |
|---|---|---|
| 92. பன்தோகர் (Bandhogarh) (1968) | 100 ச.கி.மீ | கடமை, குரைக்கும் மான், புள்ளிமான், சின்காரா, காட்டுப்பன்றி, கௌர், கரடி, சிறுத்தை, புலி. |
| 93. போரி கியோனி (Bori Kheoni) (1955) | 50 ச.கி.மீ | புள்ளிமான், கடமை, கரடி, புலி, சிறுத்தை. |

| | | |
|---|---|---|
| 94. டுப்ரி (Dubri) (1953) | 260 ச.கி.மீ | கடமை, கரடி, புள்ளிமான், நில்கை, சிறுத்தை, புலி. |
| 95. பன்னு (Panna) (1953) | 815 ச.கி.மீ | கழுதைப்புலி, கடமை, புள்ளி மான், நில்கை, புலி, சிறுத்தை. |
| 96. கன்ஹா தேசிய வனம் (Kanha National park) (1955) நாக்பூரிலிருந்து 320 கி.மீ பார்வைக் காலம்: பிப்ரவரி மாதம் முதல் மே மாதம் முடிய. | 250 ச.கி.மீ | புள்ளிமான், கடமை, சதுப்பு மான், கௌர், இரலை, சிறுத்தை, புலி. |
| 97. மௌஜ்ஹர் சிகார்கஞ்ச் (Maujhar Shikarganj) | 40 ச.கி.மீ | புள்ளிமான், கடமை, நில்கை, பன்றி, புலி, சிறுத்தை. |
| 98. சிகார்கஞ்ச் (Shikarganj) | 105 ச.கி.மீ | கடமை, புள்ளிமான், நில்கை, பன்றி, புலி, சிறுத்தை. |
| 99. சிகார்கஞ்ச்-B நௌரியா (Shikarganj Naurhiya) (1956) | 20 ச.கி.மீ | கடமை, புள்ளிமான், நில்கை, கரடி, புலி, சிறுத்தை. |
| 100. சிகார்கஞ்ச் C (Shikarganj) (1956) | 15 ச.கி.மீ | கடமை, புள்ளிமான், நில்கை, சிறுத்தை, புலி. |
| 101. சிவ்புரி தேசிய வனம் (Shivpuri National park) (1958) | 160 ச.கி.மீ | கடமை, புள்ளிமான், நில்கை, நான்குக் கொம்பு மான் (four horned antelope) கெஸெல்—(gazalle). முட்கால் கோழி (spur fowl), சிறுத்தை புலி. |
| 102 சிரி (Siri) (1953) | 15 ச.கி.மீ | கடமை, கரடி, புள்ளிமான், கழுதைப் புலி, நில்கை, புலி, சிறுத்தை. |

## XIII. மணிபுரி (Manipuri)

| | | |
|---|---|---|
| 103. கெய்புல் (Keibul) (1954) | 25 ச.கி.மீ | நெற்றிக் கொம்புமான் Brow antlered deer cervus eldi. காட்டுவெள்ளாடு (wild goat), நீர்ப்பறவைகள். |

## XIV. மேற்கு வங்காளம் (West Bengal)

| | | |
|---|---|---|
| 104. சப்ரமரி (Chapramari) (1963) | 10 ச.கி.மீ | இந்திய ஒற்றைக் கொம்பு ரைனோ சரஸ், (Indian one horned rhinoceros) யானை, கௌர், காட்டெருமை, மான், புலி. |
| 105. கொருமரு (Korumara) (1941) | 10 ச.கி.மீ | இந்திய ஒற்றைக் கொம்பு ரைனோசரஸ், (The great Indian one horned rhinoceros) காண்டா மிருகம் யானை, புலி, இமயக் கருப்புக் கரடி, சதுப்பு மான், பன்றிமான், காட்டுப் பன்றி, கௌர். |
| 106. லோதியன் தீவு (Lothian island) (1943) | 40 ச.கி.மீ | காட்டுப்பன்றி, புள்ளிமான், புலி. |
| 107. மகாநதி (Mahanadi) (1955) | 130 ச.கி.மீ | யானை, கௌர், குரைக்கும் மான், கடமை, சதுப்புமான், பன்றிமான், புலி. |
| 108. சென்சால் (Senchal) (1963) | 40 ச.கி.மீ | இமயக் கருப்புக் கரடி, செரோ (Serow), கொரால் (Goral). |

## XV. மைசூர் (Mysore)
## (கர்நாடகம்—Karnataka)

| | | |
|---|---|---|
| 109. பண்டிபூர் (Bandipur) (1941) மைசூரிலிருந்து 25 கி.மீ. பார்வைக்காலம். ஏப்ரல் மாதம் முதல் மே மாதம் முடிய | 60 ச.கி.மீ | யானை, கௌர், புள்ளிமான், காட்டெருமை, குரைக்கும் மான், கடமை, புலி, சிறுத்தை, கரடி, காட்டுக் கோழி, முட்கால் கோழி, (spur fowl), Galloperdix lumilata. |
| 110. தண்டள்ளி (Dandeli) (1949) | 200 ச.கி.மீ | யானை, கௌர், கடமை, சுண்டெலிமான் (mouse deer), நீர்ப்பறவைகள், காட்டுக் கோழி, காட்டு வாத்து (wild duck), மலை மொங்கன் Horn bill). |

| | | |
|---|---|---|
| 111. மோதொடி ஜாகர் பள்ளத் தாக்கு (Mothodi gagar valley) (1941) | 160 ச.கி.மீ | கௌர், கடமை, புள்ளிமான். குரைக்கும்மான், சருகுமான்–சுண்டெலிமான், புலி, சிறுத்தை, கரடி, நீர்ப்பறவைகள், முட்கால் கோழி (spur fowl) |
| 112. நகர்ஒளே (Nagarhole) (1955) | 290 ச.கி.மீ. | யானை, கௌர், புலி, சிறுத்தை, கரடி, காட்டுக் கோழி, புள்ளிமான், குரைக்கும் நாய், சருகு மான்—சுண்டெலி மான், கடமான். |
| 113. ரங்கண்ணதிட்டு (Ranganathito) (1936) | 5 ச.கி.மீ. | புள்ளிமான், காட்டுக் கோழி, முதலை, நீர்ப் பறவைகள், எக்ரட், டார்டர் (darter), கார் மொரண்ட் (Cormorant.) |

## XVI ராஜஸ்தான் (Rajasthan)

| | | |
|---|---|---|
| 114. அபு மலை (Abu Mount) (1960) | 105 ச.கி.மீ. | புள்ளிமான், சின்காரா, கடமை மான், கரடி, சிறுத்தை. |
| 116. பாரத்புர் பறவைப் புகலரண் (Bharatpur-Birds Sanctuary) (1959) ஆக்ராவிலிருந்து 56 கி மீ. தூரத்தில் உள்ளது. பறவைகள் கூடுவது செப்டம்பர் மாதம் முதல் பிப்ரவரி மாதம்முடிய. | 30 ச.கி.மீ. | நீல்கை, புள்ளிமான், இரலை, கடமை, காட்டுப், பன்றி, ஓநாய் - (jackel) கழுதைப் புலி, கார்மொரண்ட், எக்ரட் (egret), நடையான் (Stork), டார்டர் (darter), ஸாரஸ் க்ரோன் (Sarus crane), கரண்டி வாயன் (Spoon bill), சைபீரியன் க்ரோன் (Siberian Crane), வாத்துக்கள், டீல் (teel), கீஸ் (geese). |
| 116. டாரா (Darrah) (1955) | 210 ச.கி.மீ. | சிறுத்தை, புள்ளிமான், கடமை (கடமான்), கரடி, புலி. |

| | | | |
|---|---|---|---|
| 117. | ஜெய்சாம் நாட் (Jaisammnad) (1955) | | கடமை, புள்ளிமான், சின்காரா, நீல்கை, சிறுத்தை, நீர்ப்பறவைகள். |
| 118. | ராம்சாகர் & பன்விஹார் (Ram sagar & Banviher) (1965) | 50 ச.கி.மீ. | நீல்கை, சின்காரா, புள்ளி மான். |
| 119. | ஸரிஸ்கா (Sariska) (1955) | 210 ச.கி.மீ. | நீல்கை, கடமை, சின் காரா, புள்ளிமான், கார கால் (Caracal), புலி. |
| 120. | சாவை மதோபுர் (Sawai Madhopur) (1955) | 115 ச.கி.மீ. | கடமை, புள்ளிமான், நில்கை, சின்காரா, காட்டுப்பன்றி, சிறுத்தை, புலி, முதலை. |
| 121. | டால்ச்சாபர் (Tal Chhapur) (1962) | 80 ச.கி.மீ. | இரலை, சின்காரா, டெ-மொய்ஸல் கிரேன் (demaselle crune), ஆந்த்ரோ பாய்ட்ஸ் — விர்கோ (Anthropoides — Virgo) குளிர்காலத்தில் |

## XVII ஜம்மு-காஷ்மீர் (Jammu-Kashmir)

| | | | |
|---|---|---|---|
| 122. | அஜ்ஜாஸ் ஜீல். பறவைப் புகலரண் (Ajjas Jheel Bird Sanctuary) | | நீர்ப் பறவைகளும் வலசைப் பறவைகளும். |
| 123. | சும்னை அரின் பள்ளத்தாக்கு (Chumnai Arinvelley) | | காஷ்மீர் மான் (Kashmir stag), கஸ்தூரி மான், பழுப்புக் கரடி, இமயக் கரடி. |
| 124. | டாசிகம் (Dachigam) (1951) | 145 ச.கி.மீ. | காஷ்மீர் மான், கஸ்தூரி மான், பனிச் சிறுத்தை. |
| 125. | ரஜ்பாரின் அல்லது தாஸ்ஸு (Rajparin or Dassu) | 145 ச.கி.மீ. | கருப்புக் கரடி, கஸ்தூரி மான், ஃபெஸன்ட் (Pheasants). |
| 126. | சங்கராச்சாரியா குன்று (Sankaracharya Hill) | — | பல்வகைப் பறவைகள். |

# 7. மறைந்துவரும் நம்நாட்டு வனவிலங்குகள்

நம் நாட்டிலுள்ள பல வன விலங்குகள் விரைந்து மறைந்து வருகின்றன. அத்தகைய விலங்குகளின் பட்டியலை இந்திய வன விலங்குக் குழு (Indian Wildlife board) அறிவித்திருக்கிறது. இவைகள் மேலும் அழிந்துவிடாமல் பாதுகாப்பது மிக இன்றியமையாதது.

## I. பாலூட்டிகள் (Mammals)

| | பொதுப் பெயர் | விலங்கியல் பெயர் | காணப்படும் இடங்கள் |
|---|---|---|---|
| 1. | ஊலக் (Hoolock) | ஹைலோபேடெஸ் ஊலக் (Hylobates hoolock) | அஸ்ஸாம் |
| 2. | சிங்கவால் குரங்கு (Lion tailed macague) | மெகாகா ஸெலினஸ் (Macaca silenus) | பலப் பகுதிகளில் அழிந்து விட்டன். தற்போது மேற்குத் தொடர்ச்சி மலையின் தென் மேற்கு மலைக் காடுகளில் காணப்படுகின்றன. |
| 3. | நீலகிரி லங்கூர் (Nilgiri langur) | ப்ரிஸ்பைடெஸ் ஜானி (Presbytes johni) | மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதி. |
| 4. | குல்லாய் லங்கூர் (Capped langur) | ப்ரிஸ்பைடிஸ் பிலியேடஸ் (Presbytes pileatus) | ஆசாம். |

| | | |
|---|---|---|
| 5. புலி | பாந்தீராடைக்ரிஸ் (Panthera tigris) | விரைந்து குறைந்து வருகின்றன. |
| 6. ஆசிய சிங்கம் | பாந்தீரா லியோ பெர்சிகா (Panthera leo persica) | தற்போது கிர் காட்டில் மட்டும் உள்ளன. |
| 7. சிறுத்தை (Leopard) | பாந்தீரா பார்டஸ் (Panthera pardus) | முன்பிருந்த பல இடங்களில் தற்போது அழிந்து விட்டன. |
| 8. பனிச்சிறுத்தை (Snow leopard) | பாந்தீரா அன்ஸி (Panthera unci) | இவைகள் அனைத்தும் மிக அரிதாகி வருகின்றன. |
| 9. மேகச்சிறுத்தை (Clouded leopard) | நியோஃபெலிஸ் நெபுலோஸா (Neofelis nebulosa) | ,, |
| 10. தங்கப்பூனை (Golden cat) | ஃபிலிஸ் டெம்மின்க்கி (Felis temmincki) | ,, |
| 11. மீன் பிடிக்கும் பூனை (Fishing cat) | ஃபிலிஸ் விவெர்ரின (Felis viverrina) | ,, |
| 12. துரு நிறப் புள்ளிப்பூனை (Rusty spotted cat) | ஃபிலிஸ் ரூபீஜினோஸா (Felis rubiginosa) | ,, |
| 13. பளிங்குப் பூனை (Marbled cat) | ஃபிலிஸ் மர்மொரேடா (Felis marmorata) | ,, |
| 14. லிங்க்ஸ் (Lynx) | ஃபிலிஸ் லிங்க்ஸ் (Felis lynx) | ,, |
| 15. பல்லாஸ் பூனை (Palla's cat) | ஃபிலிஸ் மேனுல் (Felis manul) | ,, |
| 16. கேரகால் (Caracal) | ஃபிலிஸ் கேரகால் (Felis caracal) | ,, |
| 17. வேங்கை-சீடா (Cheetah) | எசினோநிக்ஸ் ஜுபேடஸ் (Acinonyx jubatus) | அழிந்து விட்டது. |

| | | |
|---|---|---|
| 18. பின்டு ராங் (Binturong) | ஆர்க்டிக்டிஸ் பிண்டுராங் (Arctictis binturong) | |
| 19. ஓநாய் (Wolf) | கேனிஸ் லூபஸ் (Canis lupus) | தெற்குப் பகுதியில் பெரும்பாலும் அழிந்து விட்டது. வடக்கில் அறிதாகி வருகிறது. |
| 20. கரடி (sloth bear) | மெலுர்சஸ் உர்ஸினஸ் (Melursus ursinus) | முன்பிருந்த பல இடங்களில் தற்போது அழிந்து விட்டது. |
| 21. சிவப்புப் பண்டா (Red Panda) | எய்லுரன் ஃபுல் ஜென்ஸ் (Ailurun Fulgens) | |
| 22. ஹாக் பேட்கர் (Hog Badgar) | ஆர்க்டோநிக்ஸ் கொல்லாரிஸ் (Arctonyx Collaris) | |
| 23. முள் முயல் (Hispid hare) | கேப்ரோலாகஸ் ஹிஸ்பிடஸ் (Caprolagus hispidus) | அழிந்து விட்டதாகக் கருதப்பட்டது, தற்போது ஆசாம் பகுதியில் இருப்பதாகக் கூறப்படுகிறது. |
| 24. இந்தியக் காட்டுக்கழுதை (Indian wild ass) | இகுவஸ் ஹெமியோனஸ் குர் (Equus hemionus Khur) | |
| 25. கியாங் (Kiang) | இகுவஸ் ஹெமியோனஸ் கியாங் (Equus hemionus Kiang) | |
| 26. இந்திய ஒற்றைக் கொம்பு ரைனோசரஸ் | ரைனோசரஸ் யுநிகோர்னிஸ் (Rhinoceros unicornis) | |
| 27. காட்டெருமை | புபேலஸ் புபேலிஸ் (Bubalus bubalis) | அஸ்ஸாமில் உள்ளது. மத்தியப் பிரதேசம், ஆந்திரா, ஒரிசா, மாநிலங்களில் மறையும் நிலையில் உள்ளது. |

| | | |
|---|---|---|
| 28. பாரல் (Bharal) | சூடியோஸ் நாயவர் (Pseudios nayaur) | |
| 29. இந்திய இபெக்ஸ் (Indian ibex) | கேப்ரா இபெக்ஸ் (Capra ibex) | |
| 30. மர்கோர் (Markhor) | கேப்ரா ஃப்பால்கோனெரி (Capra falconeri) | |
| 31. நீலகிரி தார் (Nilgiri Tahr) | ஹெமிட்ராக்ஸ் ஹைலோக்ரியஸ் (Hemitragus hylocrius) | தற்போதுள்ள பாது காப்பைத் தவிர, அதிகப் பாதுகாப்புத் தேவை. |
| 32. இரலைமான் (கருமான்) (Black buck) | ஆண்டிலோப் செர்வி கேப்ரா (Antelope cervicapra) | ஆங்காங்கே அழிந்து விட்டது. |
| 33. சின்காரா (Chinkara) | கெஸெல்லா கெஸல் பென்னெட்டி (Gazella Gazella bennetti) | ஆங்காங்கே அழிந்து விட்டது. |
| 34. ஆங்குல் (Hangul) | ஸெர்வஸ் எலெபஸ் ஹங்லு (Cervus elephus hanglu) | |
| 35. தாமின் (Thamin) | ஸெர்வஸ் எல்டி (Cervus eldi) | |
| 36. சதுப்பு மான் கடினத்தரையில் வாழ்வன. Swanp deer (hard ground) | ஸெர்வஸ் டிவௌஸெலி ப்ராண்டெரி (Cervus devauceli branderi) | |
| 37. கஸ்தூரி மான் (Musk deer) | மொஸ்கஸ் மொஸ்சி ஃபெரஸ் (Moschus moschiferus) | கஸ்தூரிக்காக அதிக மாகக் கொல்லப் படுகிறது. |
| 38. குள்ளம் பன்றி (Pigmy Hog) | ஸஸ் ஸால்வேனியஸ் (Sus salvanius) | அழிந்து விட்டதாகக் கருதப்பட்டது. தற் போது ஆசாம் பகுதி யில் இருப்பதாகத் தெரிகிறது. |

| | | |
|---|---|---|
| 39. டுகாங் (Dugong) | டுகாங் டுகான் (Dugong dugon) | விரைவில் மறைந்து விடும் நிலையில் உள்ளது. |

## II. பறவைகள் (Birds)

| | | |
|---|---|---|
| 40. பெரிய வெண்கொக்கு அல்லது சைபீரியன் கொக்கு (Great white crane) or (Siberian Crane) | க்ரஸ் (Grus) | லியுகோ ஜெரானஸ் (leuco jeronus) ராஜஸ்தான், உத்திரப் பிரதேசத்திற்கு வரும் வலசைப் பறவை. |
| 41. மேற்கு ட்ரகோபன் (Western Tragopan) | ட்ரகோபன் (Tragopan) | மெலேனோஸெபாலஸ் (Melanocephalus) அரியானு, பஞ்சாப். |
| 42. ப்ளித்ஸ் ட்ரகோபன் (Blyths Tragopan) | | ட்ரகோபன் ப்ளித்தி (Tragopan blythii) |
| 43. கிரிம்சன் ட்ரகோபன் (Crimson Tragopan) (Satyr) | | ட்ரகோபன் ஸடிரா (Tragopan Satyra) |
| 44. சீர் ஃபெஸன்ட் (Cheer pheasant) | | கெட்ரியஸ் வல்லிசி (Catreus wallichii) |
| 45. மோனல் ஃபெஸன்ட் (Monal pheasant) | லோபோபோரஸ் (Lophophorus) | இம்பெஜேனஸ் (imapejanus) |
| 46. மயில் ஃபெஸன்ட் (Peacoek pheasant) | பாலிபிளெக்ட்ரான் (Polyplect-tron) | பைகலரேடம் (blcalaratum) -அஸ்ஸாம் |
| 47. பெரிய இந்திய பஸ்டார்டு (Great Indian Bustand) | கோரியோடிஸ் (Choriotis) | நிக்ரிஸெப்ஸ் (nigriceps) பல பகுதிகளில் மறைந்து விட்டது. |
| 48. வங்காள ஃப்ளோரிகன் (Bengal flori-can) | யூபோடோடிஸ் (Euphodotis) | பெங்கலென்ஸிஸ் (bengalensis) உத்திரப் பிரதேசம் ஆசாம். |
| 49. பெரிய புள்ளிகள் கொண்ட மலை | ஆந்த்ரகோஸிரஸ் (Anthracocerus) | மலபாரிகஸ் (Malabaricus) |

| | | | |
|---|---|---|---|
| | மொங்கன் (Large pied horn bill) | | இமயமலையின் அடிவாரக் காடுகள். (Sub. Hemalayan forests) |
| 50. | இளஞ்சிவப்புத் தலை வாத்து (pink headded duck) | ரோடோநெஸ்ஸா (Rhodonessa) | கேரியோபில்லேசி (Caryophyllacea) மறைந்து விட்டதாகக் கருதப்படுகிறது. |
| 51. | மலைக்காடை (Mountain guail) | ஒபிரிசியா (ophrysia) | சூப்பர்ஸிலியோஸ (Superciliosa) |
| 52. | வெண் இறக்கைக் காட்டுத் தாரா (White wingled wood duck) | கைரிஞ (Cairina) | ஸ்குடுலேடா (Scutulata) |
| 53. | ஜோர்டனின் கோர்ஸெர் (Jordon's courser) | கர்ஸோரியஸ் பிடோர்க்வாடஸ் (Cursorius bitorguatus) | |

## III. ஊர்வன (Reptiles)

| | | | |
|---|---|---|---|
| 54. | கேரியல் (முதலை) (Gharial) | கேவியாலிஸ் கேஞ்ஜெடிகஸ் (Gavialis gangeticus) | கங்கை பிரமபுத்திரா மற்றும் அவற்றின் கிளை நதிகள். |
| 55. | முகத்துவார முதலை (Estuarine crocodile) | க்ரொகொடைலஸ் போரோஸஸ் (Crocodilus porosus) | |

# 8. முதுமலைப்புகலரண்

முதுமலைப் புகலரண் உதக மண்டலம் — மைசூர் நெடுஞ் சாலையில், உதக மண்டலத்திலிருந்து சுமார் 64 கி.மீ. தொலை விலும், மைசூரிலிருந்து சுமார் 96 கி.மீ தொலைவிலும் தமிழ் நாட்டில் இருக்கிறது, இது சுமார் 124 ச. மைல் (80 ச. கி. மீ.) பரப்பில் உள்ளது. இதில் அடர்ந்த காடுகள், சோலைகள், ஆழ்ந்த பள்ளத்தாக்குகள், ஆறுகள், ஊற்றுகள், நீர்வீழ்ச்சிகள், சதுப்பு நிலங்கள், உப்பு மண் இடங்கள் போன்ற அனைத்தும் உள்ளன. இதில் பல்வகைப்பட்ட வனவிலங்குகள் செழித்து வளர்ந்து பயமின்றித் திரிந்து வாழ்கின்றன. இவ் வனவிலங்குகளைக் கண்டு மகிழ ஒவ்வொரு வருடமும் நம் நாட்டினரும், வெளிநாட்டினரும் நூற்றுக்கணக்கில் வருகின்றனர். தமிழ்நாட்டு வனத்துறை யினரால் வெளியிடப்பட்ட ஒரு குறிப்புப்படி ஒவ்வொரு வருடமும் சராசரி 4000 பார்வையாளர்கள் இப் புகலரணைக் கண்டு செல்கின்றனர் எனத் தெரிகிறது.

முதுமலை, தெப்பக்காடு, தொட்டக்கட்டி, பென்னி என்ற நான்கு வட்டாரங்களாக (Blocks) முதுமலைப் புகலரண் பிரிக்கப் பட்டுள்ளது. இப்புகலரணில் பல்வகைப்பட்ட விலங்குகள் உள்ளன. எருதுகள் இனத்தில் மிகப் பெரிதான கெளர், இங்கு பயமின்றித் திரிவதைக் காணலாம். இவைகள் கூட்டமாக வாழ் வதைக் கண்டுகளிக்கலாம். ஊன் உண்ணிகளான புலி, சிறுத்தை, கழுதைப் புலி, சிறுத்தைப்பூனை போன்றவற்றையும் அவற்றில் மிகக் கொடூரமான செந்நாயையும் இப்புகலரணில் காணலாம்.

தாவர உண்ணிகளான கடமான், அழகுமிக்க புள்ளிமான், குரைக்கும்மான், நான்கு கொம்பு மான் போன்றவைகள் இங்கு வாழ்கின்றன. சில சமயங்களில் 400க்கும் அதிகமான புள்ளி மான்கள் கூட்டமாகத் திரிவதை இப்புகலரணில் காணலாம்.

மலை அணில், பறக்கும் அணில் போன்றவற்றையும், பரட்டைத் தலைக் குரங்கு, இலைமந்தி போன்றவற்றையும் மரங்களில் காணலாம்.

விலங்கியல் அறியாதவர்கள் ஊர்வனவென்றுத் தவறாகக் கருதக் கூடிய செதில்களால் போர்த்தப்பட்ட அலங்கு இங்கு காணப்படுவது குறிப்பிடத் தக்கது. அனைத்துண்ணியான கரடி, காட்டுப்பன்றி, முள்ளம்பன்றி போன்ற விலங்குகளும் இங்கு வாழ்கின்றன.

பறவைகளைக் கண்டு மகிழ்வோருக்கு இது ஓர் இன்பலோகம் எனக் கூறின் மிகையாகாது. அதுபோன்ற வண்ணத்துப் பூச்சிகளைக் கண்டு மகிழ்வோருக்கும் இது சொர்க்கலோகமாகும். பலவகை நிறத்திலும், தோற்றத்திலும், பருமனிலும், வாழ்க்கை முறையிலும் மாறுபட்ட எவ்வளவு பறவைகள்! காடை, கவுதாரி, மயில், காட்டுக்கோழி போன்ற வேட்டைப் பறவைகள், மாடப் புறா, மணிப் புறா, தவிட்டுப் புறா, பச்சைப் புறா போன்ற புறா வினங்கள், பச்சைக் கிளி, பஞ்சவர்ணக் கிளி, மலைமொங்கன் போன்ற வண்ணப் பறவைகள் ஆக அனைத்தையும் இங்கு ஒருங்கே காணலாம். பறவைகள் அனைத்திலும் நன்கு பேசும் திறன் கொண்ட மலை மைனா இங்கு காணப்படுகிறது. அமெரிக்காவில் இப்பறவை ஒன்று சுமார் ரூ. 400/- விலைக்குப் போகிறது. குளிர் காலத்தில் இமயமலையிலிருந்து வனச்சேவல் (Wood Cock) எங்கும் தங்காமல் தொடர்ந்து பறந்து முதுமலைக்கு வலசை வருகிறது. இப்பறவை இங்கு பிப்ரவரி முடிய தங்கியிருக்கிறது. இங்குள்ள பறவைகள் பிப்ரவரி முதல் ஜூன் முடிய உள்ள காலத்தில் இனப் பெருக்கம் செய்கின்றன. இக்காலத்தில் புது இறகுகள் வளர்ந்து ஆண் பறவைகள் மிக அழகாகத் தோன்றுவதோடு, தங்கள் பேடைகளைக் கவர இனிய கீதம் பாடுகின்றன. பறவைகளைக் கண்டு மகிழவும், கண்கானித்து (Bird Watching) ஆய்வதற்கும் இது ஏற்ற காலம்.

இப் புகலரணில் உள்ள ஊர்வனங்களில் மலைப்பாம்பு, சாரைப் பாம்பு, உடும்பு, பறக்கும் பல்லி (ட்ரேகோ), ஆமை போன்றவைகள் குறிப்பிடத் தக்கவை, மிகப் பெரிய மலைப்பாம்பு 5·10 மீட்டர் (17 அடி) நீளம் இருந்ததாகத் தெரிகிறது. இப் புகலரண் வழியாகச் செல்லும் மாயாற்றில் மீன்களும், நீர் நாய்களும், முதலைகளும் மிகுதியாக உள்ளன. தமிழ்நாட்டில் முதுமலைப் புகலரணைத் தவிர கொடைக்கானல் மற்றும் கல்லாறு மலைப்பகுதிகளில் மட்டுமே இங்குள்ளது போல் பல்வகை வண்ணத்துப்

பூச்சிகள் உள்ளன. இப் பூச்சிகளைக் கண்டு மகிழ்வோருக்கும் அவற்றை ஆய்பவர்களுக்கும் முதுமலைக்காடு மிகச் சிறந்த இடம். தென்னிந்தியாவிலுள்ள சுமார் 360 இன வண்ணத்துப் பூச்சிகளில் பெருமளவு முதுமலைப் புகலரணில் காணப்படுவது குறிப்பிடத் தக்கது.

பகலில் பறவைகளும், வண்ணத்துப் பூச்சிகளும் தங்கள் வண்ண வண்ண சிறகடித்து நம்மை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துவது போலவே இரவில் குறிப்பாக ஏப்ரல் மாத இரவில் நம் உள்ளத்தைப் பரவசப்படுத்த மின்மினிப் பூச்சிகள் உள்ளன. நட்சத்திரக் கூட்டங்களே வானிலிருந்து உதிர்ந்து நம்மைச் சூழ்ந்துள்ளனவோ என்று எண்ணும் வகையில் சுற்றுப்புறம் அனைத்தும் ஒளிமயமாக மின்னுகின்றன.

இத்தகைய பூலோகச் சொர்க்கத்தைக் கண்டு மகிழத் தங்கும் வசதி வேண்டுமல்லவா? அதற்காக இப்புகலரணில் மூன்று தங்கும் விடுதிகள் (Rest Houses) உள்ளன. நம் தேவைக்கும், சுவைக்குமேற்ற மரக்கறி உணவும், ஊன் உணவும் தயாரித்துக் கொடுக்க சமையற்காரர்களும் உள்ளனர். யானைமீது சென்று புகலரணைச் சுற்றிப் பார்த்து வனவிலங்குகளைக் கண்டு மகிழ வசதி இருக்கிறது. தங்குவதற்கும், யானைமீது உலா வருவதற்கும் முன் கூட்டியே பதிவுசெய்து ஒதுக்கீடு செய்து கொள்ளலாம்.

பார்வையாளர் (Visitors) வனவிலங்குகளைக் கண்டு மகிழ வனவிலங்குகள் வரும் நீர்நிலைகள், சுனைகள், உப்புமண், இடங்கள், புல்வெளிகள் ஆகிய ஏற்ற இடங்களில் பாதுகாப்பாக மரங்களில் பரண்களும் (Machan), காணும் மாடங்களும் (Observation Towers) கட்டப்பட்டுள்ளன. இப்பாதுகாப்பான இடங்களிலிருந்து இரவிலும் வனவிலங்குகளைக் கண்டு மகிழலாம்.

வனவிலங்குகளன்றி, இப் புகலரணில் பல அழகிய இடங்கள் உள்ளன. தெப்பக்காட்டு வட்டாரத்தில் அழகிய நீர்வீழ்ச்சி எட்டு பகுதிகளாகப் பிரிந்து வழிந்து விழுகிறது. கார்குடி தங்கு விடுதிக்கு அருகிலுள்ள பார்வை முனையிலிருந்து (View Point) சுற்றியுள்ள அழகிய குன்றுகளையும் பள்ளத்தாக்குகளையும் கண்டு மகிழலாம். இப்புகலரணுக்கு வந்து பார்வையிட பிப்ரவரி முதல் ஜூன் முடியவுள்ள காலம் ஏற்றது. இக்காலத்தில் உயர்ந்து வளர்ந் துள்ள யானைப் புற்கள் வரண்டு விடுவதால் விலங்குகளின் முழு உருவங்களையும் தெளிவாகக் காணமுடிகிறது. ஒவ்வொரு நாளும் காலை 6 மணி முதல் 9 மணி வரையிலும், மாலை 3 மணி முதல் 5 மணி வரையிலும் வனவிலங்குகளைக் காண ஏற்ற நேரங்களாகும்.

முதுமலைப் புகலரண் தமிழ்நாடு, கர்நாடகம் (மைசூர்) கேரளம் ஆகிய மூன்று மாநிலங்களும் சந்திக்கும் இடத்தில் தமிழ் நாட்டில் இருக்கிறது, என முன்பே கூறப்பட்டுள்ளது. இம் முதுமலைப் புகலரணை அடுத்து கர்நாடக (மைசூர்) மாநிலத்து பண்டிப்புர் புகலரண் இருக்கிறது. இவ்விரு புகலரண்களும் வெவ்வேறு மாநிலத்திலிருப்பினும் ஒன்றோடொன்று இணைந் துள்ளன. இதனால் மாநில வேறுபாடு உணராத வனவிலங்குகள் இவ்விரு புகலரண்களுக்கும், இவற்றோடு இணைந்துள்ள கேரள மாநிலக் காட்டிற்கும் எவ்விதத்தடையும் தயக்கமுமின்றிச் சென்று வருகின்றன. இப்பிராந்தியத்தில் காணப்படும் வனவிலங்குகள் எந்தவொரு புகலரணிற்கோ, மாநிலத்திற்கோ சேர்ந்தவையல்ல. அவைகள் ஒரு புகலரணில் ஒரு சமயம் காணப்படின் மற்றொரு சமயம் வேறொரு புகலரணில் காணப்படலாம். அவைகள் ஒரு புகலரணிலிருந்து மற்றொரு புகலரணுக்குச் செல்வது அவற்றின் உணவு, இருப்பிடம், பருவகாலத் தேவைகளுக்கே யன்றி, நாம் அவற்றின் மீது உரிமை கொண்டாட வேண்டும் என்பதற்கல்ல !

இதனை யுணர்ந்த இந்திய வனவிலங்குக் குழு இவ்விரு புகலரண் களையும் ஒன்றாக இணைத்து " முதுமலை—பண்டிப்புர் தேசிய வன " மாக உயர்த்துவது சிறப்புடையதாக இருக்கும் என்றும், இத் தேசிய வனத்தைத் தமிழ்நாடு, கர்நாடக (மைசூர்) மாநில அரசுகள் இணைந்து மேற்பார்வை செய்யலாம் என்றும் பரிந்துரைக் கிறது. இத் திட்டம், மாநிலங்களின் ஒற்றுமைக்கு ஓர் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குமென்று இந்திய வனவிலங்குக் குழு கருதுவது குறிப்பிடத்தக்கது. பண்டிப்புர் புலிப்புகலரணைத் தற்போது மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. முதுமலைப் புகலரண் " புலித்திட்டத்தில் " (Project Tiger) இடம் பெறாதது குறிப்பிடத்தக்கது.

# 9. வேடந்தாங்கல் புகலரண்

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள மதுராந்தகம் ஏரிக்கு வடமேற்கில் சுமார் 8 கி. மீட்டர் தொலைவில் வேடந்தாங்கல் என்ற சிற்றூர் இருக்கிறது. இம் மதுராந்தகம் ஏரி சென்னையிலிருந்து சுமார் 80 கி.மீ. தொலைவில் தென் திசை நெடுஞ்சாலையில் இருக்கிறது. படம் I-9.1 வேடந்தாங்கல் பறவைகளின் புகலரணிற்குப் புகழ்பெற்றது. இதைச் சுற்றிலும் பரந்த வயல்களும், ஆங்காங்கே பல ஏரிகளும் உள்ளன. இப்பகுதியில் விவசாயம் நடைபெறுகிறது. ஆங்காங்கே சில மரங்களும், அடர்ந்த புதர்களும் உள்ளன. ஆகஸ்டு—செப்டம்பர் மாதங்களில் வடகிழக்குப் பருவ மழையில் அங்குள்ள ஏரிகளில் நீர் நிறைந்து விடும். இவ்வூருக்கருகில் உள்ள ஏரி மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். இவ்வேரியில் உள்ள மரங்களில் பறவைகள் கூடுகட்டி இனப்பெருக்கம் செய்கின்றன.

இவ்வேரி 74 ஏக்கர் பரப்பளவு கொண்டது. இவ்வேரியினுள் நடுப்பகுதியிலிருந்து சற்று விலகி சுமார் 500 பேரிங்டோனியா அஃகுடாங்குல (Baringtonia acutangula—இந்திய ஒக்—அடம்ப மரங்கள்) ஏரியின் பாதியளவு பரப்பில் அடர்ந்து வளர்ந்துள்ளன. இம் மரங்கள் சுமார் 5—7 மீட்டர் (15—20 அடி) உயரமுள்ளவை. அவற்றின் கிளைகள் வெளிநோக்கிப் பலவாறு வளைந்து நெளிந்து படர்ந்துள்ளன. இம் மரங்களின் மேற்பகுதி ஏறக்குறைய தட்டையாகவும், கிளைகள் உறுதியாகவும் இருப்பதால் நீர்ப்பறவைகள் அவற்றில் கூடுகட்ட ஏற்றவாறு உள்ளன. இம் மரங்களில் பல, நூறு வயதிற்கும் மேலானவையெனத் தெரிகிறது. இம் மரங்கள் மாங்க்ரோவ் (Mangrove) மரங்களல்ல. ஆனால் இவைகள் நீரினுள் அழுகிவிடாமல் நீண்டகாலம் இருக்கக் கூடியவைகள். இவ்வேரிக் கரையிலும் அதைச் சுற்றிலும் பனை மரங்களும் மற்ற மரங்களும் செடிகளும் உள்ளன. இவ் வேரியின்

வட கரையிலிருந்து பறவைகள், கூடுகள், குஞ்சுகள் அனைத்தையும் பார்வையாளர்கள் தெளிவாகக் காணலாம்.

இப்பகுதியில் பல ஏரிகள் இருந்தும், இவ்வேரியில் மட்டும் இந் நீர்ப்பறவைகள் ஏன் தங்கி கூடு கட்டி சேய்ப் பெருக்கம் செய்கின்றன, என்ற வினா எழுவது இயற்கையே. இவ்வேரியில் மரங்கள் நீரினுள் இருப்பதால் பறவைகளுக்கு மிக்க பாதுகாப்பாகவும், கூடு கட்டுவதற்கேற்றதாகவும் உள்ளன. இத்தகைய பாதுகாப்பான அமைப்பும், வசதியும் மற்ற ஏரிகளில் இல்லை. ஆகஸ்ட்—செப்டம்பர் மாதங்களில் பருவ மழையால் இவ்வேரியில் நீர் நிரம்பியவுடன் பல்வேறு நீர்ப் பறவைகள் இங்கு வந்து கூடு கட்டிச் சேய்ப் பெருக்கம் செய்கின்றன. இவ்வேரியின் கரையிலும் அதனைச் சுற்றியும் பேரிங்டோனியா மரங்களும் மற்ற மரங்களும் இருப்பினும் அவற்றில் கூடு கட்டாமல் ஏரியினுள் உள்ள மரங்களில் கூடு கட்டுவதிலிருந்து, இப் பறவைகள் பாதுகாப்பான இடத்தையே தேர்ந்தெடுத்துக் கூடு கட்டுகின்றன என்பது புலனாகிறது.

மீன், தவளை, தலைப்பிரட்டை, நத்தை மற்றும் நண்டு, நீர்ப் பூச்சிகள் போன்றவற்றை நீர்ப்பறவைகள் உணவாகக் கொள்கின்றன. ஒரு சில பறவைகள் நீர்த் தாவரங்களையும் உணவாகக் கொள்கின்றன. வெவ்வேறு பறவைகளின் தேவைக்கேற்ற உணவு, அவ்வேரியைச் சுற்றியுள்ள மற்ற ஏரிகளிலும், வயல்களிலும், நீர் நிலைகளிலும் மிகுந்துள்ளதால் இப்பறவைகள் இவ்விடத்தைக் கூடு கட்டத் தேர்ந்தெடுக்கின்றன. கூடு கட்டுவதற்குத் தேவையான குச்சிகள் சுற்றுப்புறத்தில் கிடைக்கின்றன. மேலும் பேரிங்டோனியா குச்சிகள் அருகிலேயே கிடைப்பதால் இப்பறவைகள் தங்கள் கூடுகட்டும் சாதனத்திற்காக அலையத் தேவையில்லை. இப் பறவைகளின் குஞ்சுகள் இளம் பருவத்தில் தங்கள் உடல் எடைக்குச் சமமான உணவை உட்கொள்வதால் உணவு நிறைந்துள்ள சுற்றுப்புறம் தேவைப்படுகிறது. இக் குஞ்சுகள் எவ்வளவு உணவு தின்றாலும் போது மென்று திருப்தியடைவதில்லை. உணவிற்காக இக் குஞ்சுகள் துடி துடித்துப் பல்வகை ஒலி எழுப்புவதைக் கேட்க முடிகிறது. நீர்ப் பறவைகள் பெரும்பாலும் ஒலி உண்டாக்குவதில்லை. இவ்வேரியிலுள்ள நீர் வற்றியபின் இளம் பறவைகள் அதில் உணவைத் தேடிப் பெறுகின்றன.

சேய்ப் பெருக்கம் செய்யாத பறவைகளும், இளம் பறவைகளும் தங்க, இவ்வேரி ஏற்ற பாதுகாப்பாக உள்ளது.

இவைகள் அனைத்திற்கும் மேலான மற்றோர் அனுகூலமும் இங்குள்ளது. பொதுவாகப் பறவைகளை வேட்டையாடி அவற்றை

அழிப்பதில்தான் மக்கள் ஈடுபடுகின்றனர். ஆனால் வேடந்தாங்கல் மக்கள் இதற்கு விதிவிலக்காக உள்ளனர். இவர்கள் இப் பறவைகளையும் அவற்றின் வாழ்விடங்களையும் மிகக் கவனத்துடன் பாதுகாத்து வருகின்றனர். இதனால் இப் பறவைகளுக்கு இங்கு எவ்விதத் தீங்கும் நேர்வதில்லை. தற்போது, இப் புகலரணில் யாரும் வேட்டையாடக் கூடாதென்ற கட்டுப்பாட்டை, நம் தமிழக அரசு வனவிலங்குப் பாதுகாப்புத்துறை ஏற்படுத்தியுள்ளது. ஆனால் இப் பறவைகளைப் பாதுகாக்கும் பொறுப்பை பல்லாண்டுகளாக இங்குள்ள மக்கள் மேற்கொண்டு வந்துள்ளனர் என்று வரலாறு கூறுகிறது. இத்தகைய பொறுப்புணர்ச்சி இம் மக்களுக்குப் பல்லாண்டுகளாக இருந்து வந்ததினால்தான் இப்புகலரண் நம் நாட்டுச் சிறப்புமிக்க பறவைப் புகலரண்களில் ஒன்றாக விளங்குகிறது. இன்று மக்கள் அனைவரும் இப் பறவைகளைக் கண்டு மகிழ்கின்றனர்; பறவை ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது; வனவிலங்குகளின் இன்றியமையாமையைப் பொதுமக்கள் உணர முடிகிறது.

இவ் வேடந்தாங்கல் பறவைப் புகலரணை அவ்வூர் மக்கள் நெடுங்காலமாகப் பேணிப் பாதுகாத்து வருகின்றனர் என முன்பே குறிப்பிட்டேன். இப் புகலரணின் வரலாற்றை ஈண்டு சுருக்கமாகக் காண்போம். நம் நாட்டிலுள்ள பழங்கால நீர்ப் பறவை புகலரண்களில் வேடந்தாங்கலும் ஒன்று. இது சுமார் 200 ஆண்டுகளாக இருப்பதாகத் தெரிகிறது. 1790 ஆம் ஆண்டிற்கு முந்தியக் காலத்தில் இப் புகலரண் எவ்வாறிருந்ததென அறிய எவ்வித ஆதாரமும் இதுவரையில் கிடைக்கவில்லை. அக் காலத்தில் இப்பகுதி பலருடைய ஆளுகைக்குட்பட்டு, அடிக்கடி மாறிக் கொண்டிருந்ததென்று தெரிகிறது. அக்காலத்தில் இப் புகலரணில் பலர் பெருமளவு கண்ணி வைத்தும், சுட்டும் பறவைகளை வேட்டையாடி வந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. இத்தீச் செயல்களைத் தடுக்கும் பொருட்டு 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் (East India Company) செங்கல்பட்டு முதல் மாவட்ட ஆளுனரிடமிருந்து (Collector), இப் பறவைகளை யாரும் எவ்வகையிலும் வேட்டையாடக் கூடாது என்ற உரிமைக் ''கௌல்''லை (Cowle) அம் மக்கள் பெற்றனர். அதன்படி இப் புகலரணில் இருந்த பறவைகள் பாதுகாக்கப்பட்டன. இக் ''கௌல்'' காணமல் போய்விடவே, 1858-ல் அது மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. அவ்வாறு புதுப்பிக்கப்பட்ட ''கௌல்''லிலிருந்து முதல் ''கௌல்'' பற்றியும் அவ்வேரியில் உள்ள பேரிங்டோனியா மரங்களைப் பற்றியும் அறிகிறோம். அதன்படி சில மரங்களுக்கு 100 வயதிற்குமேல் ஆகின்றனவென்று தெரிகின்றது.

இவ்வாறு பாதுகாக்கபட்ட இப் புகலரண், 1936-இல் செங்கல் பட்டு மாவட்ட ஆளுனரால் அங்கீகரிக்கப்பட்டது; இதனை நிர்வாகம் செய்வதற்கான தொகையும் ஒதுக்கப்பட்டது. இன்று தமிழக அரசு இதனையேற்று, இப் புகலரணிலும் 20 மைல் சுற்றளவிலும் நீர்ப்பறவைகளை எக்காரணங் கொண்டும் வேட்டையாடக் கூடாதென உத்தரவு பிறப்பித்துள்ளது.

இப் புகலரணிற்குச் செல்ல சாலையொன்று அமைக்கப் பட்டுள்ளது. செங்கல்பட்டிலிருந்து வேடந்தாங்கலுக்குச் சென்று வர பேருந்து போக்கு வரத்து வசதியாகவுள்ளது. ஒவ்வொரு நாளும் ஆறு முறை பேருந்துகள் இப் புகலரணிற்குச் சென்று வருகின்றன. கடைசியாக மாலை 5-30 மணிக்கு இப் புகலரணிலிருந்து பேருந்தில் செங்கல்பட்டிற்குத் திரும்பிவரலாம். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் சென்னையிலிருந்து அரசு போக்குவரத்து சொகுசுப் பேருந்து இப் புகலரணுக்குச் சென்று வருகிறது.

இப் புகலரணுக்கு அருகில் தங்கும் விடுதியொன்றும், சிற்றுண்டிச்சாலை யொன்றும் உள்ளன,

இப் புகலரணில் ஆறு மாத காலம் நீர்ப்பறவைகள் தங்கி கூடு கட்டிச் சேய்ப் பெருக்கம் செய்து செல்கின்றன. இவைகளன்றி உள்நாட்டு, வெளிநாட்டு வலசைப் பறவைகளும் இங்கு வந்து தங்கி (சேய்ப்பெருக்கம் செய்யாது) செல்கின்றன. பருவ மழைக்குத் தக்கவாறு இப் பறவைகள் அக்டோபர்—நவம்பர் மாதங்களில் இப் புகலரணுக்கு வந்து மார்ச்—ஏப்ரல் மாதங்களில் செல்கின்றன. இப் பறவைகளை அதிகாலையிலும், பின் மாலை நேரத்திலும் கண்டு மகிழலாம். அதிகாலையில் இப் பறவைகள் துயிலெழுந்து இரை தேடப்பறந்து செல்வதையும், மாலையில் இரை தேடிய பறவைகள் திரள் திரளாகத் தங்கள் இருப்பிடம் திரும்புவதையும் காணலாம். இவற்றிற்கிடையில் கூடுகட்டும் பறவைகள், குச்சிகளையும் மற்ற பொருட்களையும் சேகரித்துக்கொண்டு அடிக்கடி தங்கள் இருப்பிட மரங்களுக்கு வந்து செல்வதையும், குஞ்சுகளைப் பொறித்துள்ள பறவைகள், தங்கள் இளம் குஞ்சுகளுக்கு அடிக்கடி உணவு கொண்டுவந்து கொடுத்துச் செல்வதையும் பகலில் எல்லா நேரங்களிலும் காணலாம். இப் பறவைகளை நன்கு கண்டு இன்புற 8 மீட்டர் (24 அடி) உயரமுள்ள காணும் மாடம் (Observation Tower) ஒன்று கட்டப்பட்டுள்ளது. அதிலிருந்து சுற்றுப்புறத்தின் இனிய காட்சிகளைக் கண்டு மகிழலாம். பறவைகளை மிக அருகில் தெளிவாகக் காண்பிக்கும் இரட்டைத் தொலை நோக்கி (பைனகுலர்—Binocular) ஒன்று இம் மாடத்தில் பொருத்தப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

இனி இப் புகலரணில் என்னென்ன பறவைகள் உள்ளன என்பதைச் சுருக்கமாகக் காண்போம். இங்கு பல நீர்ப் பறவைகள் வந்து சேய்ப்பெருக்கம் செய்து செல்கின்றன வென்றும், வேறு சில பறவைகள் வந்து தங்கிச் சேய்ப்பெருக்கம் செய்யாது தங்கள் இருப்பிடம் திரும்புகின்றன வென்றும் முன்னரே கூறப்பட்டது. இப் புகலரணில் இனப்பெருக்கம் செய்யும் பறவைகளனைத்தும் உள்நாட்டுப் பறவைகள். இப் பறவைகள் மற்ற காலங்களில் வெவ்வேறு இடங்களில் வாழ்பவைகளே. இப் பறவைகள் சேய்ப் பெருக்க காலங்களில் ஒன்ருகத் திரண்டு இப் புகலரணில் கூடு கட்டி குஞ்சுகள் பொறிக்கின்றன. சிறிய ஈக்ரெட் (Egret) நடுத்தர ஈக்ரெட், பெரிய ஈக்ரெட் என்ற மூன்று ஈக்ரெட் இனங்களும், கால்நடை ஈக்ரெட் (Egret), இரவு ஹெரான் (நாரை), குள ஹெரான் (நாரை), பழுப்பு ஹெரான், திறந்த வாய் ஸ்டார்க், கரண்டிவாயான், வெள்ளை இபிஸ் போன்றவைகளும், சிறிய கார்மொராண்ட், ஷேக் (Shag), பெரிய கார்மொராண்ட், பாம்புத்தாரா போன்ற நீர்ப்பறவைகள் இப்புகலரணில் கூடு கட்டிக் குஞ்சுகள் பொறிக்கின்றன.

இங்கு காணப்படும் பறவைகளின் எண்ணிக்கை மழையைப் பொறுத்து, ஒவ்வொரு வருடமும் வேறுபடுகிறது. சேய்ப்பெருக்க காலத்தின் உச்சநிலையில் இனப்பெருக்கம் செய்யாத பறவைகளும் சேர்ந்து 5—6 ஆயிரம் இருக்கலாமென திரு. எம். கிருஷ்ணன் கருதுகிருர். மேலும் அவர் கருத்துப்படி இரவு ஹெரான், சிறிய ஈக்ரெட், சிறிய கார்மொராண்ட் (நீர்க் காக்கை) போன்றவைகள் அதிக எண்ணிக்கையில் உள்ளன. இவற்றின் எண்ணிக்கைக்குக் குறைவாக திறந்த அலகு ஸ்டார்க், பழுப்பு ஹெரான், கரண்டி வாயான், கால்நடை ஈக்ரெட், வெள்ளை இபிஸ் (White ibis) நடுத்தர ஈக்ரெட், குள ஹெரான் (Pond heron) உள்ளன. இவற்றின் எண்ணிக்கைகள் அவற்றின் வரிசைக் கிரமத்தில் குறைந்து காணப்படுகின்றன. மிகக் குறைவாகக் காணப்படுவது பெரிய கார்மொராண்ட் ஆகும். மேலும் நீரில் கானுங் கோழியும் (The Indian Moor Hen), சிறு க்ரெப்பும் (The Little Grebe) நீந்தித் திரிகின்றன.

மேலே கூறப்பட்ட சேய்ப்பெருக்கப் பறவைகளன்றி பல பறவைகள் உணவுக்காக மட்டும் இங்கு வந்து தங்குகின்றன. இவ்வாறு வரும் பறவைகள் வலசைப் பறவைகளாகும். கருஞ் சிறகு ஸ்டில்ட் (Black Winged Stilt), பழுப்புப் பெலிக்கன் (Grey Pelican) போன்றவைகள் உள்நாட்டு வலசைப் பறவைகளாகும். கருஞ் சிறகு ஸ்டில்ட் வடகரையோரத்தில் கூட்டங் கூட்டமாகக் காணப்படுகின்றன. பெலிகன்கள் தனித்தும், இணையாகவும்,

சிறு கூட்டமாகவும் வருகின்றன. ஆனால் இவைகள் இங்கு தங்குவதில்லை. வேறு இடங்களுக்குச் செல்லும் வழியில் இவைகள் சில நாட்கள் இங்கு தங்கிச் செல்கின்றன. வெளிநாட்டு வலசைப் பறவைகளில் மணற்கிளரி (Sand Piper), டீல் (Teal) போன்றவற்றைப் பெருமளவு இங்குக் காணலாம். சில சமயங்களில் ஆற்று டெர்ன் (ஆற்றுக் குருவி–ஆலா-River Tern), கூட் (Coot) போன்ற பறவைகளும் இங்கு காணப்படுகின்றன. மீன் கொத்திப் பறவை இங்கு சாதாரணமாகக் காணப்படுவதில் வியப்பில்லை.

பெருமளவு பறவைகள் கூடிச் சேய்ப்பெருக்கம் செய்யும் இத்தகைய இடத்தில், முட்டைகளும், குஞ்சுகளும் நிறைந்து காணப்படுவதால் அவற்றைத் திருடியும், பிடித்தும் தின்ன ஊன் உண்ணிப் பறவைகளும் (Predators), அழுகிய பொருட்களைத் தின்னும் பறவைகளும் (Scavengers) இங்கு காணப்படுவது இயற்கையே. ஊர்க் காக்கை, பருந்து, கருடன், கழுகு பிணந் தின்னிக் கழுகு போன்றவைகள் இவ்விடத்தில் சுற்றித் திரிகின்றன. இங்கு கூறப்பட்ட பல்வேறு பறவைகளுள் பெரும்பாலானவற்றைப் பற்றி இப் புத்தகத்தில் 'பறவைகள்' என்ற பகுதியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## 10. சில முக்கிய தேசிய வனங்களையும் புகலரண்களையும் பார்வையிடுவதற்கு ஏற்ற காலப் பட்டியல்

| | ஜனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | ஜூன் | ஜூலை | ஆகஸ்ட் | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. அசாரிபாக் (Hazaribagh) | 4 | 5 | 5 | 5 | 5 | 3 | 2 | 2 | 2 | 2 | 3 | 4 |
| 2. இரங்கன்திட்டு (Ranganthittoo) | 2 | 2 | 2 | 2 | 2 | 4 | 5 | 5 | 3 | 2 | 2 | 2 |
| 3. கன்ஹ (Kanha) | 3 | 4 | 4 | 5 | 5 | 4 | 1 | 0 | 0 | 0 | 1 | 3 |
| 4. கஜிரங்கா (Kaziranga) | 4 | 5 | 5 | 4 | 3 | 2 | 2 | 2 | 2 | 3 | 4 | 4 |
| 5. கொர்பெட் (Corbett) | 3 | 4 | 5 | 5 | 4 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 2 |
| 6. கிர் காடு (Gir Forest) | 5 | 5 | 5 | 5 | 5 | 3 | 1 | 1 | 1 | 2 | 3 | 4 |
| 7. சந்திரபிரபா (Chandrapraba) | 4 | 5 | 5 | 5 | 4 | 3 | 3 | 2 | 2 | 3 | 3 | 4 |
| 8. சிவ்புரி (Shivpuri) | 4 | 5 | 4 | 4 | 4 | 4 | 5 | 4 | 4 | 4 | 4 | 4 |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 9. டாசிகம் (Dachigam) | 1 | 1 | 3 | 4 | 5 | 5 | 5 | 5 | 5 | 5 | 3 | 1 |
| 10. பண்டிபுர் (Bandipur) | 4 | 4 | 4 | 5 | 5 | 4 | 3 | 3 | 3 | 3 | 4 | 4 |
| 11. பாரத்புர் (Bharatpur) | 2 | 2 | 1 | 1 | 1 | 1 | 4 | 5 | 5 | 5 | 2 | 2 |
| 12. பெரியாறு (Periyar) | 5 | 5 | 5 | 4 | 4 | 3 | 2 | 2 | 2 | 2 | 3 | 4 |
| 13. மானஸ் (Manas) | 5 | 5 | 5 | 3 | 2 | 1 | 1 | 1 | 1 | 3 | 5 | 5 |
| 14. முதுமலை (Mudumalai) | 4 | 5 | 5 | 5 | 5 | 3 | 2 | 2 | 2 | 3 | 4 | 4 |
| 15. வேடந்தாங்கல் (Vedanthangal) | 5 | 4 | 3 | 2 | 1 | 0 | 0 | 1 | 2 | 3 | 4 | 5 |
| 16. ஜல்டாபாரா (Jaldapara) | 4 | 5 | 5 | 5 | 4 | 2 | 1 | 1 | 1 | 2 | 3 | 4 |

5. பார்வையிடச் சிறந்த காலம்.
4. பெருமளவிற்கு ஏற்றது.
3. ஏற்றது; ஆனால், சிறப்பாகக் கூற இயலாது.
2. செல்லலாம்; இருப்பினும் ஊக்குவிக்கப்பட மாட்டது.
1. ஏதோ முடியும்; ஆனால், பரிந்துரைக்கப்பட மாட்டாது.
0. இயலாத காரியம்; அனுமதியில்லை அல்லது மூடப்பட்டிருக்கும்.

# 11. நம் நாட்டிலுள்ள சில முக்கிய மிருகக்காட்சி சாலைகள்

(Zoological Gardens in India)

| | |
|---|---|
| 1. அஸ்ஸாம் : | 1. மாநில மிருகக்காட்சி சாலை, கௌஹாத்தி (Gauhati). |
| 2. ஆந்திரப் பிரதேசம் : | 2. மிருகக்காட்சி சாலை, ஹைதராபாத். |
| 3. இராஜஸ்தான் : | 3. மிருகக்காட்சி சாலை, ஜெய்பூர். |
| | 4. மிருகக்காட்சி சாலை, கோடா (Kotah). |
| | 5. மிருகக்காட்சி சாலை, ஜோத்புர் (Jodhpur). |
| | 6. மிருகக்காட்சி சாலை, பிகானீர். |
| | 7. மிருகக்காட்சி சாலை, உதயபுர். |
| 4. உத்திரப் பிரதேசம் : | 8. மிருகக்காட்சி சாலை, லக்னோ. |
| 5. குஜராத் : | 9. மிருகக்காட்சி மலைத்தோட்டம் (Zoological Hill Garden) அகமதாபாத். |
| | 10. சயாஜி ராவ் மிருகக்காட்சி சாலை, பரோடா. |

11. மிருகக்காட்சி சாலை, ஜுனகட் (Junagadh).

6. கேரளம் :

12. மிருகக்காட்சி சாலை, திருவனந்தபுரம்.

13. மிருகக்காட்சி சாலை, திருச்சூர்.

7. டெல்லி :

14. டெல்லி மிருகக்காட்சி சாலை, புதுடெல்லி.

8. தமிழ்நாடு :

15. மிருகக்காட்சி சாலை, சென்னை.

9. மகாராஷ்டிரா :

16. விக்டோரியா மிருகக்காட்சி சாலை, பம்பாய்.

17. பேஷ்வா மிருகக்காட்சி சாலை (Peshwa Park Zoo), பூனா.

10. மத்தியப் பிரதேசம் :

18. பாக் மகாராஜா மிருகக் காட்சி சாலை (Maharaj Bag Zoo), நாகபுரி.

19. மன்னர் ஜார்ஜ் மிருகக் காட்சி சாலை, லஸ்கர் (Lashkar), குவாலியர்.

11. மேற்கு வங்காளம் :

20. மிருகக்காட்சி சாலை, அலிபுர், கல்கத்தா.

21. இமயமலை மிருகக்காட்சி சாலை, டார்ஜிலிங்.

12. மைசூர் : (கர்நாடகம்)

22. ஸ்ரீ சாமராஜேந்திரர் மிருகக் காட்சி சாலை, மைசூர்.

# I. பழந்தின்னி வெளவால்

## (பறக்கும் நரி—Flying Fox)

விலங்கியல் பெயர் : டீரோபஸ் ஜைகேன்டியஸ் (Pteropus giganteus)
வரிசை : கைரோப்டிரா (Chiroptera)
உள் வரிசை : மெகாகைரோப்டிரா (Megachiroptera)

வெளவால்கள் பறப்பதற்கேற்ற உடலமைப்புடன் உள்ளன. பாலூட்டிகளில் பறக்கும் திறமை பெற்றவைகள் வெளவால்களே. பறவைகளுக்கு அடுத்து திறமையாகப் பறக்கக்கூடிய முதுகெலும்பிகள் வெளவால்களேயாகும். வேறெந்தப் பாலூட்டிகளும் கடந்து செல்ல இயலாத கடல், மலை, பாலை போன்ற அரண்களைக்கூடக் கடந்து சென்று வாழ்வதைக் காணலாம். இத்திறமையே இவற்றின் புவிப் பரவலுக்குக் (Geographical distribution) காரணமாகும். வெளவால்கள் திறமையாகப் பறக்கக் கூடியவைகளாயினும் பறவைகளைப் போன்று இவற்றிற்கு இறகுகளில்லை. இவற்றின் உடலின் இரு மருங்கிலும் தோல் படலம் (Patagium) இருக்கிறது. இப்படலம் (Patagium) முன்னங் கால்களையும் பின்னங்கால்களையும் இணைக்கிறது. மேலும் விரல்களுக்கிடையிலும் கால்களுக்கிடையிலும் இப்படலம் பரவியுள்ளது. வெளவால்கள் பறக்கும் உடலமைப்புப் பெற்றிருப்பதால் இதன் முன்னங்கால்கள் நன்கு வளர்ந்து பின்னங்கால்கள் மெலிந்து நலிவுற்று நடப்பதற்கேற்றவாறு இல்லாமல் உள்ளன. பொதுவாக வெளவால்கள் குகைகள், பெரிய மரங்கள், கோயில்கள், பாழ் அடைந்த கட்டிடங்கள் ஆகியவற்றில் வாழ்கின்றன. இவைகள் இரவில் வெளிவருகின்றன. இவற்றின் செவியுணர்வு ''ராடார்'' போன்று செயல்புரிகிறது என்பதை நாம் அனைவரும் அறிவோம்.

பறக்கும் நரி நம்நாட்டில் பொதுவாக எல்லாப் பகுதிகளிலும் பரவியுள்ளது. இது வடமேற்கு இராஜஸ்தான், கட்ச் ஆகிய

பகுதிகளில் காணப்படுவதில்லை. இது உயர்மலைப் பகுதிகளில் வாழ்வதில்லை. இது நம் நாட்டில் காணப்படும் மிகப் பெரிய வௌவால் ஆகும். இதன் தலையும் உடலும் சேர்ந்து 229 மி.மீ. நீளமும், இறக்கைகள் 122 செ.மீ அகலமும் உள்ளன. இது சுமார் 568-628 கிராம் எடையிருக்கிறது. இது சூரியன் மறைவிற்குப் பின் தன் பெரிய இறக்கைகளை மெதுவாக அசைத்துப் பறந்து செல்வதை நாம் காணலாம். கிராமங்களிலும் நகரங்களிலுமுள்ள மரங்களில் பறக்கும் நரிகள் பெருங் கூட்டமாகத் தங்குகின்றன. இவைகள் பறந்து செல்லும்பொழுது ஒன்றன்பின் ஒன்ருக வரிசையாகச் செல்கின்றன.



படம் II—1.1. பழந்தின்னி வௌவால்

பறக்கும் நரிகள் பழங்களைத் தின்கின்றன. இதனுல் இவைகளால் பழத் தோட்டங்களில் பெருஞ்சேதம் விளைகின்றன. இவைகள் வேப்பம் பழங்களைத் தின்பதுண்டு. இவைகள் வேப்பம் பழங்களின் சதைப் பகுதியைத் தின்று, விதைகளை ஒரேயிடத்தில் வேப்ப மரங்களுக்குக் கீழே உமிழ்ந்துவிடுகின்றன. ஒவ்வொரு இடத்திலும் ஏறக்குறைய ஒரு லிட்டர் விதைகளிருக்கும். எங்கள் கிராமத்து மக்கள் வேப்பம் எண்ணெய்க்காக, வேப்பம் விதைகளைச் சேகரிப்பதுண்டு. அவர்கள் அதிகாலையில் எழுந்து வேப்பம் மரங்களுள்ள இடங்களைத் தேடிச்சென்று அங்கு குவிந்துள்ள விதைகளை சேகரித்து வருவார்கள். இவ்விதைகள் சுத்தமாகவும் இருப்பதுண்டு.

பெண் 140—150 நாட்கள் கருக்கொண்டிருக்கும். இது வருடத்திற்கு ஒரு குட்டி ஈனுகிறது. தாய், குட்டியை நீண்ட நாட்கள் சுமந்து திரிகிறது. இதன் மாமிசத்தைச் சிலர் விரும்பி உண்கிருர்கள்.

# 2. தேவாங்கு
## (Slender Loris)

விலங்கியல் பெயர் : லோரிஸ் டார்டிக்ரேடஸ் (Loris tardigratus)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் : லொரிசிடே (Lorisidae)

தேவாங்குகளை வீடுகளில் வளர்ப்பதுண்டு. சென்னை, பெங்களூர் போன்ற பெரிய நகரங்களில் தேவாங்குகள் விற்பனைக்காக வைத்திருப்பதைக் காணலாம். இவைகளின் உடல் மெலிந்து ஒடிந்து விடுவதுபோல் இருக்கிறது. மெலிந்த தேவாங்கு (Slender Loris) தென் இந்தியாவிலும், சிங்களத்திலுமே உள்ளது. இது பெரும்பாலும் கிழக்குத் தொடர்ச்சி மலையில் காணப்படுகிறது. இது இரவில் வெளிவருகிறது.

இதன் உடல் மெல்லிய குட்டையான பழுப்புநிற உரோமங்களால் போர்த்தப்பட்டுள்ளது. இது சுமார் 25 செ.மீ. உயரமும், 450 கிராம் எடையும் இருக்கிறது. உடல் மெலிந்திருப்பது போலவே, இதன் கைகளும், கால்களும் நீண்டு மெலிந்து உள்ளன. இதற்கு வால் கிடையாது. இதன் பெரிய உருண்டையான கண்களைச் சுற்றிக் கருப்பு அல்லது கரும்பழுப்பு நிற வட்டங்கள் இருப்பதால் இதன் முகத்தோற்றம் ஒரு சிறு ஆந்தையின் முகம் போல் தோன்றுகிறது. மேலும் இது உட்கார்ந்துகொண்டு பக்கவாட்டில் மெதுவாக அசைவது ஆந்தை அசைவது போலவே தோன்றுகிறது.

இதன் ஆந்தை போன்ற தோற்றத்தினால்தான் என்னவோ இதைப் பார்ப்பது தீங்கைத் தருகின்றது என்ற மூட நம்பிக்கை மலேசியா நாட்டில் உள்ளது. இதன் மயிர், நோய்களைக் குணப்படுத்தும் திறன் பெற்றிருப்பதாகச் சிலர் கருதுகின்றனர். அன்பு நீடிப்பதற்காக இதன் கண்ணிலிருந்து பானங்கள் தயாரித்தும்

சிலர் அருந்துவதுண்டு. இன்னும் சில இடங்களில் கண்ணைத் தின்பது, கண்ணோய் தீர்வுக்கு ஏற்ற மருந்து என்றும் கருதப் படுகிறது. இக்காரணங்களால் தேவாங்குகளை வெகுவாகப் பிடித்து விற்பனை செய்து வருகின்றனர்.



படம் II—2.1. தேவாங்கு

இது மரங்களில் இலைகளுக்கிடையில் ஒளிந்து வாழ்கிறது. இது எப்பொழுதும் தனித்து வாழ்வது. பருவ காலங்களில் மட்டுமே இதனை இணையாகப் பார்க்க முடியும். பல தேவாங்குகள் ஒன்று சேர்ந்திடின் அவைகள் ஒன்றுடன் ஒன்று சண்டை இட்டுக் கொண்டு பிரிந்து சென்றுவிடுகின்றன. மற்ற விலங்குகளைக்

கண்டால், பொதுவாக, அது விலகிச் சென்றுவிடும். ஆனால் பின் தயக்கத்துடன் உருமிக்கொண்டே தாக்குவதும் உண்டு.

இது மரத்தில் இருக்கும் பொழுது கைகளாலும் கால்களாலும் கிளைகளைப் பற்றிக்கொள்ளும். இதன் கை கால்களின் அமைப்பு மரத்தில் தாவுவதற்கேற்ப இல்லை. இது கிளைகளில் மெதுவாக ஏறுவதற்கேற்ப அமைந்துள்ளது. ஆனால் சில சமயங்களில் கைகளுக்கு வேலையில்லாத போழ்து, கைகள் இரண்டையும் இணைத்துக் கொள்ளும். இது கட்டை விரலை மற்ற விரல்களுக்குள் மடக்கி வைத்துக் கொள்ளும். சில சமயங்களில் இது தன் கால்களால் கிளைகளைப் பற்றிக் கொண்டு தொங்கும்.

தேவாங்கு இரவில் வெளிவரும். பகலில் இலைகளுக்கிடையில் தூங்கிக் கொண்டிருக்கும். இது தளிர், பூ, பழம், பூச்சி, பல்லி, பறவை, முட்டை ஆகியவைகளைத் தின்கிறது. இது பதுங்கி மெதுவாக நகர்ந்து விரைந்து இரையைப் பிடித்துக் கொள்ளும்.

தேவாங்கு வருடத்தில் இரு முறை குட்டி போடும். ஒவ்வொரு முறையும் ஒரு குட்டியே ஈனும். கர்ப்ப காலம் சுமார் 5½ மாதங்கள் ஆகும். இது நீண்ட காலம் குட்டியைப் பேணி வளர்க்கிறது. நன்கு வளர்ந்து சுயமாக வாழும் நிலையை அடைந்த பின்னும் குட்டி, தாயின் முதுகின் மீதோ அல்லது அதன் வயிற்றிலோ தொற்றிக் கொண்டிருக்கும்.

# 3. பரட்டைத்தலைக் குரங்கு
## (Bonnet Monkey)

விலங்கியல் பெயர் : மெகாகா ரேடியேடா (Macaca radiata)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் : சைனோமார்ஃபா (Cynomorpha)

பரட்டைத் தலைக் குரங்குகள் தென்னிந்தியாவில் எல்லா இடங்களிலும் பரவியுள்ளன. குரங்காட்டிகள் பிடித்து விளையாட்டுக் காட்டும் குரங்கு பரட்டைத் தலைக் குரங்கு ஆகும்.



படம் II—3.1. பரட்டைத்தலைக் குரங்கு

கோவில்களிலும், ரயில் நிலையங்களிலும் இவைகளை வெகுவாகக் காணலாம். மனித நடமாட்டமுள்ள இடங்களில் நன்கு வாழ்ந்து பழகி விட்டதால் இவைகளுக்கு மனிதர்களிடம் பயம் என்பதே

இல்லாமல் போய்விட்டது. இதனால் சிறு குழந்தைகளிடமுள்ள தின்பண்டங்களையும், சில சமயங்களில் பெரியவர்களிடம் உள்ள வற்றையும் பறித்துக் கொண்டு சென்று விடுவதை நாம் காண்கிறோம். இவைகளில் முதிர்ந்த குரங்குகள் சில சமயங்களில் மனிதர்களையே எதிர்க்கத் துணிந்து விடுகின்றன.

நன்கு வளர்ந்த குரங்கின் உடல் சுமார் 75 செ.மீ. நீளமும் உள்ளன. இதன் முகம் வெளிர் நிறம் (Pale) உடையது. முகத்தைத் தவிர உடல் முழுவதும் பசுமை கலந்த சாம்பல் நிற மயிர்களால் போர்த்தப்பட்டுள்ளது. இதன் தலை மயிர்கள் தலையின் மையத்திலுள்ள சுழியிலிருந்து எல்லா திக்கும் பரவியுள்ளது. தலையில் முன்புறத்திலுள்ள மயிர்கள் நெற்றியை மறைப்பதில்லை.

இதன் வாயினுள் கன்னப்பைகள் உள்ளன. தனக்குக் கிடைக்கும் உணவை அவசர அவசரமாக கன்னப் பையினுள் அடைத்துக் கொண்டு, பின் மெதுவாகத் தின்னும். பரட்டைத் தலைக் குரங்குக் கூட்டத்தில் உறுப்பினர்கள் அதிகமாக உள்ளன. இக்கூட்டத்தில் ஆணும் பெண்ணும் சம எண்ணிக்கையில் இருக்கும். ஒரு கூட்டத்தில் அதிக அளவு ஆறு ஆண்கள் வரை தலைமை தாங்கும். இவைகளில் ரீசஸ் குரங்கில் உள்ளது போல் தம்பதி உறவு இல்லை. தங்கள் விருப்பத்திற்கேற்ப ஒரு ஆண் எந்த பெண்ணுடனும் கூடி வாழும்.

இவைகள் காடுகளில் நீர் உள்ள இடங்களிலும், ஆற்றோர மரங்களிலும் வாழ்கின்றன. விளை நிலங்களிலுள்ள தானியக் கதிர்களையும், வாழைத் தோட்டத்திலுள்ள வாழைப் பழங்களையும் திருடித் தின்றுவிடுகின்றன. இவைகள் நீரில் நன்கு நீந்தக் கூடியவைகள். உணவிற்காக ஆற்றில் நீந்தி மறு கரையை அடைந்து கதிர்களை பறித்துச் சென்றுவிடுவதும் உண்டு. ஆற்றோரத்து மரங்களில் இருப்பவற்றை விரட்டினால் அவைகள் மரத்திலிருந்து நேரே நீரில் குதித்து நீந்தி மறுகரைக்குச் சென்று விடுகின்றன.

இவைகளுக்குக் கூரிய பார்வையும், சிறிய பொருள்களைத் தேடிப் பிடித்து எடுக்கக்கூடிய திறமை மிக்க விரல்களும் உள்ளன. இவைகளுக்கிடையில் ஒன்றுக்கொன்று பேன் பார்த்துக் கொள்வதுண்டு. மகாபலிபுரத்தில் இதனைக் குறிக்கும் கற்சிற்பம் இருப்பதை நாம் காணலாம். கிராமப் பெண்கள் தங்கள் தலையை இக் குரங்குகளிடம் காண்பித்து 'பேன் பார்த்துக்கொள்வதும்' உண்டு. இப் பேன்களை இவை தின்றுவிடுகின்றன.

# 4. ரீஸஸ் குரங்கு
## (Rhesus Monkey)

விலங்கியல் பெயர் : மெகாகா முலட்டா (Macaca mulatta)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் : சைனோமார்ஃபா (Cynomorpha)

குரங்குகளில் இரு பேரினங்கள் உள்ளன; ஒன்று மெகாகா (Macaque) பேரினத்தையும், மற்றொன்று லங்குர் (Langur) பேரினத்தையும் சேர்ந்தவை. மெகாகா பேரினக் குரங்குகள் முரட்டுக் குணம் கொண்டவை. இவைகள் நிலத்திலும், அளவான உயரமுள்ள மரங்களிலும் வாழ்கின்றன. லங்குர்கள் இலைகளைத் தின்பவை; முரட்டுத் தன்மையற்றவை, மெகாகா குரங்குகள் உடல் வலிமை மிக்கவை. இவைகள் ஆண், பெண், குட்டிகள் சேர்ந்து ஒரு சமூகமாக வாழ்கின்றன.

ரீஸஸ் குரங்கு நம் நாட்டில் அஸ்ஸாம், வங்காளம், வடக்கு மத்திய இந்தியா, இமயமலைப் பகுதிகள் ஆகிய இடங்களில் இருக்கிறது. பொதுவாக இது வட இந்தியாவில் காணப்படுகிறது. இதன் தலையிலுள்ள ரோமம் நெற்றியிலிருந்து பின்நோக்கி உள்ளன. ஆண் குரங்கு உட்கார்ந்த நிலையில் 60 செ.மீ. உயரம் இருக்கிறது. இது கிராமங்களுக்கும், நகரங்களுக்கும் அருகில் மக்களுடன் நெருங்கி வாழ்கின்றது.

ரீஸஸ் குரங்குகள் சுமார் 10 முதல் 30 வரை சேர்ந்து கூட்டமாக வாழ்கின்றன. இரண்டு அல்லது மூன்று ஆண்கள் ஒரு கூட்டத்திற்குத் தலைமை தாங்குகின்றன (Dominant). கூட்டத்திலுள்ள வலிமை மிக்க ஆணுடன் பெண் உறவு கொள்கிறது. இவைகள் இரண்டும் தம்பதிகளாகச் சேர்ந்து உண்டு, உறங்கி ஒன்றையொன்று பேணி வாழ்கின்றன. இவைகள் ஒன்றுக்கொன்று பேன் பார்த்தும், மற்ற வேறு சிறு உயிர்கள் மயிர்

களிடையே இருந்தால் எடுத்துத் தின்றும் தங்கள் உடலைச் சுத்த மாக வைத்துக் கொள்கின்றன. இன்று ரீஸஸ் குரங்குகளின் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்துவிட்டது. இவைகள் மருத்துவ ஆய்விற்காகப் பெருவாரியாகப் பயன் படுத்தப்படு கின்றன. இதனால் இவைகள் கணிசமான அளவு மேல் நாடு



படம் II—4.1. ரீஸஸ் குரங்கு

களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. இவைகளின் எண்ணிக்கை குறைந்து வருவதை யுணர்ந்து இவற்றின் ஏற்றுமதி கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறது.

ரீஸஸ் குரங்கின் பழக்கவழக்கத்தைப் பற்றி பர்மிங்ஹாம் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த உயிரியல் துறை டாக்டர் மைக்கேல் சான்ஸ் (Dr. Michael Chance) அவர்கள் கூறுவதைக் காண்போம்.

பிறந்த குட்டியின் நடைமுறை முற்றிலும் பல்வகை அனிச்சைச் செய்கையால் நடைபெறுகிறது. குட்டியின் கன்னத் தைத் தாய் தொடுவதோ அல்லது உதட்டைத் தொடுவதோ, குட்டி அதன் தலையைக் குறிப்பிட்ட திசையில் திருப்ப வேண்டிய அறிகுறியாகும். அதன்பின், குட்டி வாயைத் திறந்து தாயின் உடலையோ, பால் சுரப்பிக் காம்பினையோ பற்றிக்கொள்ளும்.

பிறந்தவுடன் குட்டி தாயின் வயிற்றைப் பற்றிக் கொள்கிறது. தாயும் குட்டியை அணைத்துக் கொள்வதும், கையில் வைத்துத் தாலாட்டுவதும், மடியில் படுக்கவைத்துக் கொள்ளுவதும் உண்டு. இந்த நிலையில் குட்டி பால் குடித்துக்கொண்டோ

அல்லது குடிக்காமல் முலைக்காம்பினைப் பற்றிக்கொண்டோ இருக்கும். குட்டி பிறந்தவுடன் தாய் அதிக தூரம் அலைவதைக் கட்டுப்படுத்திக் கொள்கிறது. 30—40 நாட்களுக்குப் பின் குட்டி, தாயைப் பிரிந்து வெளியில் திரியத் தொடங்குகிறது. குட்டி, வெளியில் வெகு தூரம் செல்ல எத்தனித்தால், தாய், அதன் வாலைப் பிடித்து இழுத்துத் தடுத்துவிடுகிறது. இந்தப் பருவத்தில் தான் குட்டியைத் தாய் அதிகமாகப் பராமரிக்கிறது. இப் பருவத் திற்குப் பின் இதன் பராமரிப்பு வெகுவாகக் குறைந்து, குட்டியைக் கவனித்துக் கொள்வதோடு நிறுத்திக் கொள்கிறது.

குட்டி பிறந்த பின் அக்கூட்டத்தைச் சேர்ந்த வேறொரு ரீஸஸ் குரங்கு தன்னை அணுகினால், தாய்க் குரங்கு விலகி தனித்துச் சென்றுவிடுகிறது. குட்டிப் பருவத்திலும், இளமைப் பருவத்திலும் குட்டி தாயுடனேயே சேர்ந்து இருக்கிறது. குட்டி சுயமாக வாழும் வரையிலும் இது மற்ற உறுப்பினருடன் சரியாகச் சேர்ந்து வாழ்வதில்லை.

# 5. சிங்கவால் குரங்கு
## (Lion Tailed Monkey)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | மெகாகா ஸைலினஸ் (Macaca silenus) |
| வரிசை | : | ப்ரைமேட்டுகள் (Primates) |
| குடும்பம் | : | சைனோமார்ஃபா (Cynomorpha) |

சிங்கவால் குரங்கு வட மைசூர் பகுதியிலிருந்து தமிழ்நாட்டில் கன்னியா குமரிவரை மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதிகளில் காணப்படுகின்றன. இது அடர்ந்த காடுகளில் உயர் மரங்களில் வாழ்கின்றது. தலையின் பின் பகுதியிலிருந்தும், கன்னங்களிலிருந்தும் நீண்ட மயிர்கள் வளர்ந்து பிடரி மயிர்போல் உள்ளன.



படம் II—5.1. சிங்கவால் குரங்கு

உடல் முழுவதும் பளபளப்பான கருப்பு மயிர்களால் போர்த்தப்பட்டிருப்பதால் இதனைக் கருங்குரங்கு என்று கூறுவர். இது மிகவும் மிரளும் தன்மை படைத்தது. இதனால் இது ஒதுங்கியே வாழ்கின்றது.

சிங்கவால் குரங்குகள் கூட்டமாக வாழ்கின்றன. ஒவ்வொரு கூட்டத்திலும் 12 முதல் 20 வரை இருக்கும். இவைகள் மரத்தில் மெதுவாக ஆனால் உறுதியாக நகரும். ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்குச் செல்ல, தான் இருக்கும் மரத்திலிருந்து கீழ் இறங்கி வந்து பின் மறுபடியும் ஏறுகின்றன. இவைகள் செப்டம்பர் மாதத்தில் குட்டிகளை ஈனுகின்றன.

இவற்றின் வாழ்விடங்கள் அழிக்கப்பட்டதாலும், இவைகள் வேட்டையாடப்பட்டதாலும் இன்று இவற்றின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து விட்டன.

# 6. புனிதக் குரங்கு—அனுமான்
## (The Common Langur)

விலங்கியல் பெயர் : பிரெஸ்பைடிஸ் என்டெல்லஸ் (Presbytis entellus)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் : சைனோமார்ஃபா (Cynomorpha)

லங்குர்கள் அடர்ந்து உயர்ந்த குளிர்ந்த காடுகளில் வாழ்கின்றன. இவைகளுக்குக் குரங்குகளைப்போல முரட்டுக் குணம் கிடையாது. இவைகள் இலை, பூ, தளிர், காய் கனிகள் ஆகியவற்றையே தின்கின்றன. இவைகளின் உடல் மெலிந்தும், கால்கள் கைகளைக் காட்டிலும் நீண்டும் உள்ளன. இவைகளின் வாயில் கன்னப்பைகள் (Cheek Pouches) கிடையா.

லங்குர்களில் பல இனங்கள் உள்ளன. பிரெஸ்பைடிஸ் என்டெல்லஸ் (Presbytis Entellus) என்ற இனம் (Species) பொதுவாக நாடு முழுவதும் அடர்ந்த காடுகளில் காணப்படுகின்றன. இதனை அனுமான் அல்லது புனிதக் குரங்கு என்பர். இதற்கு நீண்ட கைகளும், கால்களும், வாலும், கருத்த முகமும் உள்ளன. இதன் உடல் நிறமும் மயிரின் அடர்த்தியும் இடத்திற்கு இடம் வேறுபடுகின்றன. தென் இந்தியாவில் தென்மேற்குப் பகுதியிலுள்ள மழைக் காடுகளில் உள்ளது கருப்பாகவும், கிழக்குப் பகுதிகளில் வாழ்வது சிறிது வெளுத்தும் உள்ளன. உட்கார்ந்துள்ள ஒரு இலை மந்தி (Leaf monkey) சுமார் 60-75 செ.மீ. உயரம் இருக்கிறது. அதன் வால் சுமார் 90-100 செ.மீ. நீளம் இருக்கும்.

இம் மந்திகள் உயர்ந்த மலைப்பகுதியிலும் வாழ்கின்றன. இவைகள் இமய மலைப்பகுதியில் 3660 கி.மீ. உயரம் வரை பரவியுள்ளன. குளிர் காலத்தில் பனிப் படர்ந்த பகுதியிலிருந்து கீழ்ப் பகுதிக்கு இவைகள் வந்துவிடுகின்றன. தீபகற்ப இந்தியாவில் இவைகள் காடுகளில் வாழ்கின்றன. இவைகள் கிராமங்களுக்கும்,

நகரங்களுக்கும் அருகிலுள்ள அடர்ந்த தோப்புகளிலும், கோவில்களிலும் வாழ்வதைக் காணலாம். இவைகள் தாவர உண்ணிகள். இவைகள் பழங்கள் பூ போன்றவற்றைத் தின்கின்றன. சில சமயங்களில் இவைகள் விளை நிலங்களுக்குச் சென்று உணவு தேடுவதும் உண்டு. இவைகள் அதிகாலையிலும், மாலையிலும் உணவைத் தேடிச் செல்கின்றன. பகல் வேளையில் நிழற் பகுதியில் தங்கியுள்ளன. இவைகள் மரங்களில் மிகத் திறமையாக தாவிச் செல்லும்.

இவைகள் பல ஒன்று சேர்ந்து ஒரு சமூகமாக வாழ்கின்றன. ஒரு கூட்டத்தில் (Troop) பல்வேறு வயதுடைய ஆண், பெண் குரங்குகள் உள்ளன. வட இந்தியாவில் உள்ள இம்மந்திகளின்



படம் II—6.1. புனிதக்குரங்கு (அனுமான்)

கூட்டத்தில் சுமார் 18-25 வரையுள்ளன. தென் இந்தியாவில் இவைகள் சுமார் 15, ஒன்று சேர்ந்து வாழ்கின்றன. இரவில் இவைகள், தாங்கள் தங்கும் மரத்தைச் சுற்றி சுமார் 1.3 முதல் 13 ச.கி.மீ. பரப்பில் தங்கள் எல்லையை ஏற்படுத்திக் கொள்கின்றன. இவைகள் இரவில் அம்மரக்கிளைகளின் நுனியில் அமர்ந்து தூங்குகின்றன. இது ஒரு உள்ளுணர்வு (Instinct) ஆகும். இரவில் மரம் ஏறி இரைதேடும் ஊன் உண்ணி விலங்குகளிடமிருந்து இவைகள் இதனால் தப்பித்துக் கொள்ள ஏதுவாகின்றது. இவற்றின் கூட்டங்கள் முதிர்ந்த ஆண்களின் தலைமையில் உள்ளன.

இந்த ஆண்கள், எல்லா மந்திகளும் ஒருங்கிணைந்து செயல்படச் செய்கின்றன.

பிரெஸ்பைடிஸ் என்டெல்லஸைப் பற்றிக் கலிபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு. பில்லிஸ் ஜாய் (Phyllis Jay of University of California at Berkeley, U.S.A.) அவர்கள் கூறும் கருத்தைக் காண்போம்.

குட்டி பிறந்த சில மணி நேரத்திற்குள் அது எவ்வித உதவியு மின்றி தன் தாயின் உடலை நன்கு இறுகப் பற்றிக் கொள்கிறது. தாய் எப்படிக் குதித்தாலும், தாண்டினாலும் குட்டி நழுவி விழுந்து விடுவதில்லை. குட்டி பிறந்ததும் தாய் அதனை நாக்கால் நக்கியும், உடல் மயிரை நன்கு வாரியும் சுத்தப்படுத்துகிறது. குட்டிபிறந்ததும் மற்ற தாய் மந்திகளும், பெண்களும் குட்டியைச் சூழ்ந்துகொண்டு, அதனை மிகக் கவனமாக நுகர்வதும், நாக்கால் நக்குவதுமாக உள்ளன. குட்டி பிறந்த ஒரு மணி நேரம் வரை தாய் மற்றவைகளை அணுக விடுவதில்லை. குட்டி சுத்தப்படுத்தப் பட்டு, உடல் உலர்ந்த பின்பே மற்றவைகள் அதனைக் கையாள் வதைத் தாய் அனுமதிக்கிறது. குட்டி சிறிது சிரமப்பட்டாலும் தாய் எடுத்துக் கொள்ளாமலிருந்தால் உடனே அருகில் காத்துக் கொண்டுள்ள மற்ற பெண் லங்குர்களில் ஒன்று அதனை எடுத்துக் கொள்கின்றது. பின் தாய், தன் குட்டியைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும்.

வயது வந்த ஆண் லங்குர், குட்டியின் மீது எந்தவித அக்கறை யும், ஆர்வமும் காட்டுவதில்லை, அதனைப் பாதுகாப்பதும் இல்லை. தாய் லங்குர், தன் குட்டியுடன் ஆணுக்கருகில் செல்வதில்லை. குறைந்தது 5 மீட்டர் தொலைவில் விலகியே இருக்கும். ஆண் நெருங்கினாலும் தாய் அதனைத் துரத்தி விடுகிறது.

மற்ற பெண் லங்குர்கள் குட்டியை வைத்திருந்தாலும், இரண்டு வாரத்தில் தன் தாயை சுமார் 6 மீ தொலைவிலிருந்தே குட்டி அடையாளம் கண்டு கொள்ளும். மற்ற பெண் மந்திகளின் தடையில்லையென்றால், தன் தாயை அடைய குட்டி அடியெடுத்து வைக்கிறது. சுமார் 2 மீட்டர் தூரம் நடக்கும் திறமை பெற குட்டிக்கு ஒரு மாத காலம் பிடிக்கும். குட்டியைப் பிரிந்த தாய் தன் குட்டியின் நிறம், நடந்து செல்லும் முறை, ஒலி, உருவம் முதலியவற்றைக்கொண்டு, குட்டியை அடையாளம் கண்டு கொள்கிறது.

சுமார் 3 மாதங்களுக்குப் பின், பாலுக்கு மாருக வேறு உணவுகளைக் குட்டி தின்கின்றது. தாயைத் தொடர்ந்து சென்று, அதன் உணவுப் பழக்கத்தைக் குட்டி அறிந்துகொள்கிறது. ஐந்தாவது மாதத்தில் குட்டியின் பழுப்பு நிறம் வெளிர் நிறமாக மாறுகிறது. இந் நிலையில் குட்டி ஈன்றுள்ள வேருெரு தாயிடம், தனது குட்டியையும் விட்டுச் செல்கிறது. இதனுல் ஒரு தாய் லங்குர் பல குட்டிகளைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பை ஏற்றுக்கொள்கிறது. இப் பருவத்திலிருந்து குட்டியின் மீதுள்ள அக்கறை, தாய்க்குச் சிறிது சிறிதாகக் குறையத் துவங்குகிறது.

ஆருவது மாதத்திலிருந்து குட்டி பெரும்பாலான நேரம் தாயைப் பிரிந்து வாழ்கிறது. அந் நிலையில் தாயும் குட்டியும் அவ்வப்போது ஒன்றையொன்று சந்தித்துக் கொள்கின்றன. ஆனுல் பெரும்பாலான நேரத்தைக் குட்டி, தன்னை ஒத்த வேறு குட்டிகளுடன் சேர்ந்து செலவழிக்கிறது. ஒவ்வொரு கூட்டத்திலும் 2 முதல் 4 வரை குட்டிகள் இருக்கும். சில சமயங்களில் 16 குட்டிகளும் உள்ளன. ஆரம்பக் காலத்தில் குட்டிகள் ஓடியும், குதித்தும் துரத்தியும், ஒன்றையொன்று வாலைப் பிடித்திழுத்தும் நேரத்தைக் கழிக்கின்றன. ஆனுல் இவைகள் வளர வளர தாங்கள் வாழும் சூழ்நிலைக் கேற்பவும், தங்கள் வாழ்க்கைக்கு ஏற்பவும் விளையாட்டுக்களைக் கற்றுக்கொள்கின்றன. இவ்விளையாட்டுக்களால் குட்டிகள் ஒன்றுபட்டு வாழவும், சூழ்நிலையைப் பற்றி அறியவும் உதவுகின்றன. மேலும் அக் கூட்டத்தில் உள்ள மற்ற பெண் மந்திகளைப்பற்றி இக் குட்டிகள் அறிந்துகொள்ளவும் முடிகின்றது. சில மாதங்களுக்குப் பின், இக் குட்டிகள் ஏதாவது ஒரு செவிலித்தாய் மந்தியின் பாதுகாப்பிலேயே வாழ்கின்றன.

# 7. பொன் லங்குர்
## (Golden Langur)

விலங்கியல் பெயர் : பிரெஸ்பைடிஸ் கீய் (Presbytis geei)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் : சைனோமார்ஃபா (Cynomorpha)

இந்தியா, பூடான் ஆகிய இரு நாடுகளின் இடையிலுள்ள நாடுகளின் இடையிலுள்ள மலைப் பகுதிகளில் பொன்னிற மயிருள்ள லங்குர் காணப்படுகிறது. இதனை முதன்முதலில் திரு. இ. ஒ. ஷெப்பேர் (E.O. Shebbere) அவர்கள் 1907-ல் சங்கோஸ் ஆற்றின் கிழக்குக் கரையில் பார்த்ததாகக் குறிப்புள்ளது. 1947-ல் திரு. சி. ஜி. பாரன் (C. G. Baran) பார்த்து அதைப்பற்றி எழுதிய குறிப்பும் உள்ளது. 1953 நவம்பரில் திரு. கீ (Ghee) அவர்கள் (Jamdul) பகுதிக்குச் சென்று, பொன்னிற லங்குர் இருப்பதைக்



படம் II—7.1. பொன் லங்குர்

கண்டு புகைப்படங்களையும், திரைப்படங்களையும், எடுத்து அது இருப்பதை நிரூபித்தார். அதன் நிறம் பருவத்திற்குப் பருவம்

மாறுவதையும் கண்டறிந்தார். இதனால் இப் பொன்னிற லங்குருக்கு இதனைக் கண்டுபிடித்தவரின் பெயரே இனப் பெயராகச் (Species) சூட்டப்பட்டுள்ளது. அதன்படி விலங்கியலில் இது பிரெஸ்பைடிஸ் கீய் (Presbytis Geei) என அழைக்கப்படுகிறது.

பொன் லங்குர்கள் கூட்டம் கூட்டமாக வாழ்கின்றன. ஒரு கூட்டத்தில் 30-40 இருக்கின்றன. இவைகள் பயந்த சுபாவம் உடையவை; பிறருக்குத் தீங்கிழைக்காதவை. இவைகள் விளை நிலங்களுக்குச் சென்று பயிர்களை அழிப்பதில்லை. இவைகள் ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் குட்டிகளை ஈனுகின்றன. குட்டி இளமையில் வெண்மையாக இருக்கிறது.

# 8. நீலகிரி மந்தி
## (Nilgiri Langur)

விலங்கியல் பெயர் : பிரெஸ்பைடிஸ் ஜானி (Presbytis johni)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் : சைனோமார்ஃபா (Cynomorpha)

நீலகிரி மந்தி, குடகிலிருந்து கன்னியாகுமரி வரையில் பழனி, ஆனைமலை, திருநெல்வேலி ஆகிய இடங்களில் பரவியுள்ளது. இதன் உடல் கருப்பு அல்லது கரும் பழுப்பு நிறமாகவும், தலை மஞ்சள் கலந்த பழுப்பு நிறமாகவும் இருக்கிறது. இதன் வாலின் அடிப் பகுதியும், வாலுக்கு அருகிலுள்ள முதுகுப் பகுதியும் பளபளப்பாக உள்ளது. பெண் மந்தியின் தொடையின் உட்பகுதி வெண்மை நிறமாக உள்ளது. ஆணின் உடலும் தலையும் சுமார் 80 செ.மீ. நீளமும், வால் சுமார் 75-90 செ.மீ. நீளமும் இருக்கும்.



படம் II—8.1. நீலகிரி மந்தி

நீலகிரி மந்திகள் அடர்ந்த காடுகளில் உள்ள நீர் நிறைந்த பகுதிகளிலும், மலைப் பகுதிகளில் 915 முதல் 2135 மீட்டர் உயரம் வரையிலும் காணப்படுகின்றன. இவைகள் விளை நிலங்

களுக்குச் சென்று அங்குள்ள தானியக் கதிர்களைத் தின்பதுண்டு. இவைகள் காலையிலும் மாலையிலும் உணவைத் தேடிச் செல்கின்றன. பகலில் ஓய்வு எடுத்துக்கொள்கின்றன. அதிகாலையில் இவைகள் 'ஊஉ ஊஉ', 'ஊஉ ஊஉ' எனக் கத்துகின்றன. இவைகள் மூன்று முதல் இருபத்தைந்து வரை சேர்ந்து கூட்டமாக வாழ்கின்றன. ஆனால் பொதுவாக ஒவ்வொரு கூட்டத்திலும் 8 அல்லது 9 மந்திகளே உள்ளன. ஒவ்வொரு கூட்டமும் ஓர் ஆணின் தலைமையிலிருக்கிறது. ஒவ்வொரு ஆணுக்கும், ஒன்றுக்கும் மேற்பட்ட பெண் மந்திகள் உண்டு. சில சமயங்களில் ஆண் மந்தி தனித்தோ அல்லது மற்ற ஆண் மந்திகளுடன் சேர்ந்து கூட்டமாகவோ உள்ளது. இவைகளுக்கிடையில் போட்டியும் பொறாமையும் கிடையா. இவைகள் 0.65 முதல் 2.6 ச.கி மீ. பரப்பில் தங்கள் எல்லையை ஏற்படுத்திக்கொள்கின்றன.

நீலகிரி மந்தியின் இரத்தமும் மாமிசமும் மருந்தாகப் பயன்படும் எனக் கருதி இதனை வெகுவாகக் கொன்றுவிடுகின்றனர். இதனால் இவைகள் பெரும் அளவு மறைந்துவிட்டன. இந்நிலை நீடிக்குமாயின் இவைகள் விரைவில் மறைந்துவிடும்.

# 9. இலை மந்தி

## (Leaf Monkey)

## குல்லா மந்தி (Capped Langur)

விலங்கியல் பெயர் : பிரெஸ்பைடிஸ் பைலியேடஸ் (Presbytis pileatus)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் சைனோமார்ஃபா (Cynomorpha)

இலை மந்தி அல்லது குல்லா மந்தி நம் நாட்டில் அஸ்ஸாம் மாநிலத்தில் குறிப்பாகச் சிட்டகாங் மாவட்டக் காடுகளில் காணப் படுகிறது. நம் நாட்டில் மறைந்து வரும் வன விலங்குகளில் இது ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆகையால் இதைப் பாதுகாக்க வேண்டிய எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டுள்ளன. இது



படம் II—9.1. இலை மந்தி (குல்லா மந்தி)

மெகாகாவைக் காட்டிலும் மெலிந்து அழகான தோற்றத்தில் காணப்படுகிறது. இதன் முதுகும், கால்களும் கருஞ்சாம்பல் நிறத்திலும், கன்னங்களும் வயிற்றுப் பகுதியும் மஞ்சள் கலந்த சிவப்பு நிறத்திலுள்ளது. இதன் நெற்றியிலிருந்து நீண்டு தடித்து, நிமிர்ந்துள்ள மயிர்கள் பின்னோக்கிக் குல்லா போன்றுள்ளன,

இதனால் இது குல்லா மந்தி எனப்படுகிறது. ஒரு ஆண் குல்லா மந்தியின் உடலும், தலையும் சுமார் 60–70 செ.மீ நீளமும், வால் 75-100 செ.மீ. நீளமும் இருக்கின்றன. இது சுமார் 12 கி.கிராம் எடையிருக்கிறது. பெண், ஆணைக் காட்டிலும் சிறியது. தலையும் உடலும் 45–65 செ.மீ. நீளமும், வால் 75–90 செ.மீ. நீளமும் உள்ளன; எடை 10 கி.கிராம்.

இலை மந்திகள் அஸ்ஸாம் மாநிலத்து அடர்ந்த மலைக் காடுகளில் காணப்படுகின்றன. இலை மந்திக் கூட்டம் மரங்களை விட்டு கீழே வருவதில்லை. அவைகள் வாழும் இடங்களுக்கருகில் அருவிகள் ஓடினாலும், நீர் அருந்த அவைகள் கீழே வருவதில்லையென்றும், இலைகளிலுள்ள பனி நீரையும், மழை நீரையுமே அவைகள் குடிக்கின்றனவென்றும், திரு. ப்ரேடர் கூறுகிறார். குல்லா மந்திகள் தாவர உண்ணிகள். அவைகள் இலை, தளிர், பூ, பழங்கள் போன்றவற்றையே உண்கின்றன. இவைகள் காடுகளில் வாழ்வதால் மிகவும் பயந்த குணம் படைத்தவைகளாக உள்ளன. இவைகள் மனிதர்களைக் கண்டாலோ அல்லது தங்களுக்கு ஆபத்து என அறிந்தாலோ உடனே ஓடிவிடுகின்றன; அல்லது இலை மறைவில் ஒளிந்துக்கொள்கின்றன.

இவற்றின் சமூக வாழ்க்கையைப் பற்றித் திட்டவட்டமாகத் தெரியவில்லை. ஒரு ஆண் மந்தி 3 அல்லது 4 பெண் மந்திகளுடன் சேர்ந்து வாழ்கிறது. இவைகள் குளிர் காலத்தில் சேய்ப் பெருக்கம் செய்வதாகத் திரு. ப்ரேடர் குறிப்பிடுகிறார். இளம் குட்டிகள் பொன் நிறம், இளஞ் சிவப்பு அல்லது இளம் மஞ்சள் நிறத்தில் காணப்படுகின்றன.

# 10. ஹூலெக்

## (Hoolock)

விலங்கியல் பெயர் : ஹைலோபேடிஸ் ஹூலெக் (Hylobates hoolock)
வரிசை : ப்ரைமேட்டுகள் (Primates)
குடும்பம் : பாங்கிடே (Pongidae)

ஹூலெக் நம் நாட்டில் அஸ்ஸாம் மாநிலத்தில் சிறப்பாகச் சிட்டகாங் மாவட்ட மலைக்காடுகளில் காணப்படுகிறது. ஏப் (Ape)



படம் II—10.1. ஹூலெக் (பெண்ணும்—ஆணும்)

வகையைச் சேர்ந்ததில் இந்தியாவில் காணப்படுவது ஹூலெக் ஒன்றே. இது நிமிர்ந்து நிற்கும் பொழுது சுமார் 90 செ மீ. உயரமிருக்கிறது. இது சுமார் 6–8 கி.கிராம் எடையிருக்கிறது.

இதற்கு வால் இல்லை. இதன் கைகள், கால்களின் நீளத்தில் ஏறக்குறைய இரண்டு மடங்குள்ளன. ஆண் ஹூலெக்கும் இளம் பெண் ஹூலெக்குகளும் கருப்பாக உள்ளன. முதிர்ச்சியடைந்த பெண் ஹூலெக் மஞ்சள் கலந்த சாம்பல் நிறமாக உள்ளது. பெண் ஹூலெக் ஐந்து அல்லது ஆறு வருடங்களில் பருவ முதிர்ச்சி யடைகிறது.

ஹூலெக் குடும்பமாக வாழ்கிறது. ஒரு குடும்பத்தில் பெற்றோர்களும், குட்டிகளும் சேர்ந்து பொதுவாக 6-க்கு மிகாமல் உள்ளன. மலைக் காடுகளில் இவற்றின் குடும்பங்கள் தனித்தனி யாகக் காணப்படுகின்றன. உணவு மற்ற தேவைகள் ஆகிய வற்றின் காரணமாகப் பல குடும்பங்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியில் நெருக்கமாகக் காணப்படுவதுண்டு. ஒவ்வொரு குடும்பமும் இரவில் பாதுகாப்பான பள்ளத்தாக்கில் தங்குகிறது. அதிகாலையில் இவைகள் மலையின் உயர் பகுதிக்குச் சென்று வெயில் காய்ந்து கொண்டு உயரமான மரங்களில் உணவு தேடுகின்றன. ஒவ்வொரு குடும்பமும் ஓர் எல்லைக்குள் வாழ்கிறது. இவைகள் நிரந்தரமாக ஒரே பாதையை உபயோகிக்கின்றன. இவைகள் பழங்கள், இலைகள், புழு, பூச்சிகள் போன்றவற்றை உணவாகக் கொள்கின்றன. இவைகள் பனி நீரை இலைகளிலிருந்த வாறோ அல்லது கை கூட்டிச் சேகரித்தோ குடிக்கின்றன. இவை கள் திறமையாக மரக்கிளைகளில் குதித்தும் ஊசலாடியும், ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்கும், ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்கும் செல்கின்றன. கனமான கிளைகளில் இவைகள் நிமிர்ந்து நேராக நடந்து செல்வதுண்டு. நடந்து செல்லும் பொழுது, இவைகள் தங்கள் நீண்ட கைகளைப் பயன்படுத்திச் சமன் செய்துகொள்கின்றன. காலை நேரத்தில், வெளிச்சமும், வெப்பமும், அதிகரிக்க அதிகரிக்க, இவைகள் ஊளையிடத் துவங்கி விடுகின்றன. ஒரு குடும்பத்திலுள்ள ஒன்று ஊளையிட்டதும், மற்றவைகள் தொடர்கின்றன. ஒரு குடும்பத்தின் ஒலியைக் கேட்டு மற்றொரு குடும்பம் ஊளையிடுகிறது. இவ்வாறு பல குடும்பங்கள் ஊளையிடுவதால் காடு முழுவதும் அவற்றின் ஒலிகள் பரவுகின்றன. பகல் வேளைகளில் வெயில் மிகுதியாக உள்ள பொழுது, அவைகள் அடர்ந்த இடங்களுக்குச் சென்று அமைதி யாக ஓய்வெடுக்கின்றன.

ஹூலெக்கின் குடும்ப வாழ்க்கையைப் பற்றிச் சரியாகத் தெரியவில்லை. பொதுவாக ஒரு ஆண் ஒரு பெண்ணுடன் வாழ் கிறது. வளர்ந்த குட்டிகளைப் பெற்றோர்கள் புறக்கணித்து விடு கின்றன. இக் குட்டிகள் தங்கள் பெற்றோர்களின் எல்லையோரத்தில்

சில காலம் தங்கிச் சுயமாக வாழக் கற்றுக்கொள்கின்றன. பின் இவைகள் இணையைத் தேடிக் குடும்பத்தையும், எல்லையையும் அமைத்துக்கொள்கின்றன. மழைக் காலத்திற்கு முன் கலவி நடைபெறுகிறது. குளிர் காலமான டிசம்பர் முதல் மார்ச் முடிய குட்டிகள் பிறக்கின்றன.

ஹுலெக்கின் எண்ணிக்கை குறைந்து வருகிறது; நம் நாட்டில் மறைந்து வரும் வன விலங்குகளில் ஒன்ருக ஹுலெக் பிரகடனப் படுத்தப்பட்டிருக்கிறது. இதன் எண்ணிக்கை மேலும் குறைந்து, மறைந்து விடாமல் காப்பாற்ற வேண்டியது நம் கடமையாகும்.

# 11. சிங்கம்

## ( Lion )

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | பேந்திரா லியோ பெர்ஸிகா (Panthera leo persica) |
| வரிசை | : | ஊன் உண்ணிகள் (Carnivora) |
| குடும்பம் | : | ஃபெலிடே (Felidae) |
| உட் குடும்பம் | : | பேந்திரினே (Pantherinae) |

சிங்கங்கள் இன்று இந்தியாவிலும், ஆப்பிரிக்காவிலும் மட்டுமே உள்ளன. இதனால் நாம் பெருமை கொண்டாலும், நம் நாட்டில் சிங்கங்களின் எண்ணிக்கை மிகக் குறைந்து உள்ளது என்பதையும், அவைகள் விரைந்து குறைந்து வருகின்றன என்பதையும் அறிதல் வேண்டும். ஒரு காலத்தில் சிங்கங்கள் இந்தியா முழுவதிலும் பரவியிருந்தன. இவைகள் இன்று குஜராத் மாநிலம் ஜுனகட் மாவட்டத்தின் (Junagadh District) கிர் புகலரணில் (Gir Sanctuary) தஞ்சமடைந்துள்ளன. இந்த நிலை ஏன்? இவற்றின் குணமும், வாழ்க்கை முறையுமே காரணங்களாகும். இவைகள் புலிகளைப் போலத் தந்திரமாக வாழத் தெரியாதவை. மேலும், இவைகள் புலிகளைப் போல அடர்ந்த காடுகளில் வாழாமல், பரந்து, வரண்ட முட்புதர் காட்டில் வாழ்வதால் இதனை மக்கள் எளிதில் வேட்டையாடிக் கொன்றுவிடுகின்றனர்.

இந்தியச் சிங்கமும், ஆப்பிரிக்கச் சிங்கமும் வெவ்வேறு உள்ளினங்களைச் (sub species) சேர்ந்தவை. இந்தியச் சிங்கம் பேந்திரா லியோ பெர்ஸிகா (Panthera leo persica), ஆப்பிரிக்கச் சிங்கம் பேந்திரா லியோ லியோ (Panthera leo leo) ஆகும். இவ்விரண்டின் உடலமைப்புக்களிலும் சில வேறுபாடு உள்ளன. இந்தியச் சிங்கத்திற்குப் பெரிய வால் குஞ்சமும், முழங்காலில் கற்றையான மயிரும், வயிற்றுப் பகுதியில் எல்லை போன்று அமைந்துள்ள மயிர்களும் (Fringes) உள்ளன. இவற்றின் இளமையில் ஒரு சில புள்ளிகளே உடலில் உள்ளன. இந்தியச் சிங்கத்தின் உடல் ஆப்பிரிக்கச்

சிங்கத்தின் உடலைக் காட்டிலும் தடித்துள்ளது. பிடரி மயிர்கள் உள்ள இந்திய சிங்கங்களில் காதிலிருந்து மூக்கு நுனி வரையிலுள்ள தலைப்பாகம் நீண்டுள்ளது. மேலும் இந்தியச் சிங்கங்களின் தலையில் குறைவான பிடரி மயிர்களே உள்ளன. ஆப்பிரிக்கச் சிங்கத்தின் பிடரி மயிர்கள் நீண்டு அடர்த்தியாக உள்ளன. பிடரி மயிர்களில் காணப்படும் வேறுபாடுகள், அவைகள் வாழும் தட்ப வெப்ப நிலையின் (Climate) வேறுபாட்டால் தோன்றியவைகளாகும். ஆப்பிரிக்கச் சிங்கங்கள் குளிர்ந்த இடங்களில், கடல் மட்டத்திற்கு மேல் சுமார் 2000 மீட்டர் (600 அடி) உயரத்தில்



படம் II—11.1. சிங்கம் (ஆண்–பெண்)

வாழ்கின்றன. இந்தியச் சிங்கங்கள் கடல் மட்டத்திலிருந்து சுமார் 67–133 மீட்டர் (200—400 அடி) உயரத்தில் வெட்ப முட்புதர்க் காடுகளில் (Scrub Jungle) வாழ்கின்றன. இந்தியச் சிங்கங்களுக்குப் பிடரி மயிர் குறைவாக இருப்பதற்கு வேறொரு காரணமாக திரு. ஈ.பி.கீ (E.P. Gee) அவர்கள் கூறும் கருத்து சுவையானது. பழங் காலத்தில் வேட்டையாடும் கனவான்கள், நன்கு வளர்ந்து வலிய சிங்கங்களை வேட்டையாடி அழித்துவிட்டதால், நல்ல சிங்கங்களின் சந்ததிகள் அற்றுப் போய்விட்டன. எஞ்சிய சாதாரண சிங்கங்கள் வாழ்ந்து அவற்றின் சந்ததிகளே இன்று இப்படி நிலைத்துள்ளன. நன்கு வளர்ந்த சிங்கம், சுமார் 275 செ.மீ. நீளம் இருக்கிறது. மிகப் பெரிய இந்தியச் சிங்கம் 292 செ.மீ. நீளமும், ஆப்பிரிக்கச் சிங்கம் 323 செ.மீ. நீளமும் இருந்ததாகச் சான்றுகள் உள்ளன.

விலங்குகளின் அரசன் என்று சொல்லப்படும் இச்சிங்கங்கள் நம் நாட்டில் 1900–ல் சுமார் 12 மட்டுமே இருந்ததெனத் தெரிகிறது. 1950ம் ஆண்டு கணக்கெடுப்புப் (சென்ஸஸ்)படி சுமார் 240-ம், 1955ம் ஆண்டு கணக்கெடுப்புப்படி சுமார் 290-ம் இருந்ததாகக் கணக்கிடப்பட்டுள்ளன. இந்தக் கணக்கெடுப்பு (census) திரு. எம்.ஏ. விண்டர் பிளித் (M.A. Wynter Blyth) அவர்களின் மேற்பார்வையில் (supervision) எடுக்கப்பட்டது. சிங்கங்களின் கால்கள் பதிந்த அடையாளங்களை அளந்து அவற்றின் வேறுபாடுகளின் அடிப்படையில் அவற்றின் எண்ணிக்கையைக் கணக்கிட்டனர். 1955க்குப் பின் கிராம மக்கள் நஞ்சு வைத்துக் கணிசமான அளவு சிங்கங்களைக் கொன்றுவிட்டதாக அறிந்து 1963-ல் ஒரு முறை கணக்கு எடுக்கப்பட்டது. அக் கணக்கெடுப்பின்படி 280-க்கும் சற்று அதிகமான சிங்கங்கள் இருந்தன. 1968-ல் சுமார் 170 சிங்கங்களே கிர் புகலரணில் இருப்பதாக அறிகிறோம்.

கிர் புகலரணை தேசிய வனமாக்க வேண்டுமென்று இந்திய வன விலங்குக் குழு பரிந்துரைக்கின்றது. கிர் புகலரண் சுமார் 1295 ச.கி.மீட்டர் பரப்பு உள்ளது. இது ஒரு பரந்த, வரண்ட முட்புதர் காடு. இதன் இடையில் ஆங்காங்கு கிராமங்களும், விளை நிலங்களும் உள்ளன. இப்புகலரணுள் ஆடு, மாடு போன்ற கால்நடைகள் மேய்க்கப்படுகின்றன. கடமான், புள்ளிமான், காட்டுப் பன்றி போன்றவைகள் குறைந்துவிட்டதால் சிங்கங்கள் வீட்டு விலங்குகளையும் பிடித்துத் தின்றுவிடுகின்றன.

பொதுவாக, பூனை இனங்கள் தனித்து வாழ்வன. ஆனால் சிங்கம் இதற்கு விதி விலக்கு. சிங்கங்கள் 2 முதல் 30 வரை சேர்ந்து ஒரு கூட்டமாக வாழ்கின்றன. ஒரு கூட்டத்தில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட முதிர்ந்த ஆண்கள் இருக்கும். ஒரு குடும்பத்தைச் சார்ந்ததாக இருப்பினும், பெரும்பாலும் வெவ்வேறு குடும்பத்தைச் சேர்ந்தவைகளும் சேர்ந்து வாழ்கின்றன. ஒரு கூட்டத்திலுள்ள வளர்ந்துவிட்ட குட்டிகள் அனைத்தும் இக் கூட்டத்தில் சேர்ந்து வாழ்வதில்லை. மாறாக அவைகள் பிரிந்து சென்று வேறொரு சிறு கூட்டத்தை ஏற்படுத்திக் கொள்கின்றன.

சிங்கங்களின் சமூக வாழ்க்கை குறிப்பிடும்படி இல்லை. திடீரென்று அவைகளுக்கிடையில் போட்டியும், சண்டையும் ஏற்பட்டு தீவிரமாகி விடுவது உண்டு. ஆனால் அவைகள் சேர்ந்து வாழ்வதால் குட்டிகளைப் பராமரிக்க முடிகின்றன. சில சமயங்களில் கூட்டத்திலுள்ளவைகள் ஒன்று சேர்ந்து வேட்டையாடுவதுண்டு. ஒவ்வொரு கூட்டமும் வெவ்வேறு எல்லையை (Territory) ஏற்படுத்திக்கொள்கிறது. இவ்வெல்லை 15 முதல் 30 சதுர மைல்

பரப்பில் இருக்கும். ஆண் சிங்கம் எல்லையைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறது. நன்கு வளர்ந்த ஆண் சிங்கம் சுமார் 450 ராத்தல் எடையிருக்கும். ஆண் சிங்கம் தன்னுடைய தலையின் அமைப்பாலும், அடர்ந்த பிடரி மயிராலும் பெண்ணைக் காட்டிலும் பெரியதாகத் தோன்றுகிறது.

இத் தோற்றத்தைக் கண்ட மற்ற விலங்குகள் பயப்படுகின்றன. ஆண் தன் கூட்டத்தைக் காக்கும் பொறுப்பை மேற்கொள்கிறது.



படம் II—11.2. ஆண் சிங்கம்

சிங்கங்கள் எல்லையை ஏற்படுத்திக்கொள்வதால், அவைகள் தங்கள் இரை உள்ள இடங்களிலெல்லாம் பரவியிருக்க ஏதுவாகின்றன. எல்லையின் அளவு, அதிலுள்ள இரையின் அளவைப் பொருத்திருக்கின்றது.

இனப்பெருக்கம், சிங்கங்களில் வருடம் முழுவதும் நடைபெறுகிறது. காலம் 100 நாட்கள் நீடிக்கிறது. குட்டி ஈனும் சமயத்தில் கருவுற்ற பெண் சிங்கம் தன் கூட்டத்தை விட்டுத் தனியான ஒரு இடத்திற்குச் சென்று 3 அல்லது 4 குட்டிகளை ஈனுகிறது. குட்டி ஒவ்வொன்றும் சுமார் 3 இராத்தல் எடையிருக்கும். இச் சமயத்தில் தாய் தன் கூட்டத்துடன் சேராமல் குட்டிகளுடன்

தனித்து வாழும். முதல் 10 வாரங்கள் இக் குட்டிகளின் வாழ்க்கை மிகவும் ஆபத்தான நிலையில் உள்ளது. தாய்ச் சிங்கம் வேட்டைக்குச் சென்றிருக்கும் பொழுது, குட்டிகளைக் கழுதைப் புலி போன்றவை பிடித்துத் தின்று விடுவதுண்டு. இதனால் பாதிக் குட்டிகள் மற்ற விலங்குகளுக்குப் பலியாகிவிடுகின்றன.

குட்டிகள் கூட்டத்துடன் சேர்ந்த பின் எல்லாச் சிங்கங்களும் ஒற்றுமையாக வாழ்கின்றன. ஆண் சிங்கமும் கூடி வாழ்கிறது. பெண் சிங்கங்களும் குட்டி வேறுபாடின்றி பாலூட்டுகின்றன. இளம் குட்டிகள் இருக்கும் கூட்டம் அதிக தூரம் அலைந்து திரிவதில்லை. குட்டிகள் வளர வளர அவைகள் நீண்ட தூரம் திரிந்து வருவதால் அக்குட்டிகள் தங்கள் எல்லையை அறிந்துகொள்கின்றன. முதல் 18 மாதங்கள் வரை குட்டிகள் வேட்டையாடும் திறமையைப் பெறுவதில்லை. இதற்கிடையில் பெண் சிங்கம் கருதரித்துவிடுவதால் குட்டிகள் பாதுகாப்பின்றி வாழும்போது ஆபத்திற்கு பலியாகின்றன. மற்ற பெரிய சிங்கங்களும் குட்டிகளை விரட்டிவிடுகின்றன. மேலும் அவைகள் வேட்டையாடிய இரையைப் பெரிய சிங்கங்கள் பறித்து தின்றுவிடுகின்றன.

சிங்கங்கள் பொதுவாக காலை, மாலை, இரவு நேரங்களிலேயே வேட்டையாடுகின்றன. பல தாவர உண்ணிகள் சிங்கத்தைக் காட்டிலும் விரைந்து ஓடும் திறமை பெற்றவை. சிங்கத்திற்கு தொடர்ந்து ஓடித் துரத்திப் பிடிக்கும் சக்தியில்லை. இதனால் இவைகள் காத்திருந்து திடீரென்று இரையைத் தாக்கிப் பிடித்துக் கொள்கின்றன. ஒரு சிங்கம் தன் இரையைப் பிடிக்கும் பொழுது இரையின் மீது தாவி அதன் முன் பகுதியைப் பிடித்துக் கீழே தள்ளித் தொண்டையைக் கடித்து மூச்சுத் திணறச் (Asphyxiation) செய்து கொன்றுவிடுகிறது. சில சமயங்களில், சிறு விலங்குகளின் பின் பகுதியின் மேல் தாவும் பொழுது பளு தாங்காமல் அவ் விலங்கின் முதுகு ஒடிந்து கீழே விழுந்துவிடுகிறது.

பொதுவாகத் தங்களுக்குத் தேவைப்பட்டாலன்றிச் சிங்கங்கள் இரையைப் பிடிப்பதில்லை. இரையைப் பிடித்த பின் தேவையான அளவு தின்றுவிடுகின்றன. நல்ல பசியுள்ள ஒரு சிங்கம் ஒரு தடவையில் சுமார் 35 கிலோ கிராம் மாமிசம் தின்னும்; இது தன் உடலின் எடையில் சுமார் ஐந்தில் ஒரு பாகமாகும். உணவுக்குப் பின் நீண்ட உறக்கத்தில் ஆழ்ந்து விடுகின்றது. சிங்கங்கள் பெரும்பாலான நேரத்தை ஓய்விலோ அல்லது உறக்கத்திலோ கழிக்கின்றன. சில சமயங்களில், சிங்கங்கள் கழுதைப் புலி போன்ற மற்ற விலங்குகள் கொன்ற இரையைப் பறித்துத் தின்பதும் உண்டு.

இன்று சிங்கங்கள் நம் நாட்டில் கிர் புகலரணில் மட்டுமே உள்ளன என்று முன்பே கூறப்பட்டுள்ளது. சிங்கங்களை மற்றப் பகுதிகளில் வளர்க்கும் எண்ணத்துடனும் அவற்றின் எண்ணிக்கையை அதிகரிக்கச் செய்யும் நோக்கத்துடனும் 1957–58ல் ஒரு ஆண் சிங்கமும் இரு பெண் சிங்கங்களும் உத்தரப்பிர தேசத்திலுள்ள சந்திரபிரபா புகலரணில் (Chandraprabha Sanctuary) கொண்டு விடப்பட்டன. 1965க்குள் அவைகளின் எண்ணிக்கை 11 ஆகப் பெருகியது. அவற்றில் சில அருகிலுள்ள பீகார் மாநிலக் காடுகளுக்குச் சென்று விட்டதாகத் தெரியவந்தது. ஆனால், தற்பொழுது சந்திரபிரபா புகலரணிலும், பீகார் காடு களிலும் சிங்கங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. இவைகள் எப்படி மறைந்தன என்றும் தெரியவில்லை. ஒரு வேளை இப்புதிய வாழ்விடங்கள் சிங்கங்களுக்கு ஏற்ப இல்லாமல் போய் அவைகள் அழிந்து விட்டனவோ அல்லது யாராவது இவைகளைத் திருட்டுத் தனமாகக் கொன்றுவிட்டார்களோ என்ற ஐயப்பாடுகள் எழு கின்றன. சிங்கங்களைத் திருட்டுத்தனமாக வேட்டையாடுவது நீடிக்குமாயின், அவற்றை நம் தேசீயச் சின்னத்திலன்றி வேறெங்கும் காணமுடியாது.

இதனால் ஒரு உண்மையை நாம் அறிதல்வேண்டும். ஒரு குறிப்பிட்ட வாழ்விடத்தில் வாழும் ஒரு விலங்கினை வேறொரு இடத்திற்கு மாற்றும் பொழுது அப்புதிய இடம் எல்லா வகை யிலும் அவ்விலங்கின் வாழ்விடத்திற்கு உகந்ததுதானா என நன்கு ஆராய்ந்து அறிந்தபின்பே, அவ்விலங்கினைப் புதிய இடத்திற்கு மாற்ற வேண்டும். மேலும், புகுத்தப்பட்ட விலங்குகளை யாரும் வேட்டையாடி விடாதபடிப் பாதுகாக்கும் நடவடிக்கைகளும் மேற் கொள்ளல்வேண்டும்.

# 12. புலி
## (Tiger)

விலங்கியல் பெயர் : பேந்திரா டைக்ரிஸ் (Panthera tigris)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : ஃபெலிடே (Felidae)

புலி நம் தேசிய விலங்காகும் (National animal). இது அழகும் கம்பீரமும் மிக்கது. இது இன்று எண்ணிக்கையில் மிகக் குறைந்துள்ளது. இதனைப் பாதுகாக்க வேண்டி "புலித்திட்டம் - Project Tiger)" என்ற ஓர் தீவிரத்திட்டத்தை நம் மத்திய அரசு மேற்கொண்டுள்ளது.

புலிகள் பொதுவாகத் தனித்து வாழ்பவைகள். ஆண், பெண் புலிகள் இனப்பெருக்கக் காலங்களிலும், குட்டி ஈன்ற பெண் புலி குட்டிகளுடனும் கூடி வாழ்கின்றன. இருப்பினும் பெரிய இரையைப் பிடித்தபின் பல புலிகள் சேர்ந்து அதனை உண்பதுண்டு.



படம் II—12.1. புலி. நம் தேசீய விலங்கு

ஆண் புலி சுமார் 16 ச. கிலோ மீட்டர் (20-25 ச. மைல்) பரப்பளவில் தன் எல்லையை (territory) ஏற்படுத்திக்கொள்கிறது.

சில சமயங்களில் இவ்வெல்லையினுள் பல பெண் புலிகளின் இருப் பிடங்கள் இருக்கும். புலிகள் தங்களுடைய எல்லையைக் குறிக்க மரங்களின் மீதும், புதர்களின் மீதும், புற் தரையிலும் சிறுநீரா லும் மற்ற வாசனையாலும் குறியிட்டு விடுகின்றன. ஒவ்வொரு புலிக்கும் ஒரு குறிப்பிட்ட தங்குமிடம் உண்டு. எங்கு சுற்றித் திரிந்தாலும் முடிவில் அவ்விடத்திற்கு அது வந்து சேர்ந்து விடும். வயது வந்த இளம் புலிகள் பல இடங்களில் அலைந்து திரிந்து, முடிவில் தனக்கென்று ஓர் இடத்தை நிரந்தரமாக ஏற்படுத்திக் கொள்ளும். தங்கள் இருப்பிடத்தை அறிவிக்கும் வண்ணம் ஆண் புலிகளும் பெண் புலிகளும் மிகப் பெரிதாக உறுமுவதுண்டு. இது சுமார் 3 கி.மீ தொலைவுவரை கேட்கும். பெண் புலிகள் தங்கள் குட்டிகளை அழைக்கவும், பருவ காலங்களில் ஆணின் கவனத்தை ஈர்க்கவும் உறுமுவதுண்டு. கலவியின் போது ஆண் புலி உறுமும்.



படம் II—12.2. புலி

பகல் வேளைகளில் அடர்ந்த புதர்களிலும், குகைகளிலும் தங்கி இருக்கும். சில சமயங்களில் வெப்பத்தைத் தாங்க மாட்டாது நீர்த்தேக்கங்களில் படுத்துக்கொள்ளும். இரவு வேளைகளில் இரை தேடி அலையும். சில சமயங்களில் சுமார் 35 கி.மீ. தூரம் வரை சுற்றி இரை தேடும். புலியின் கண்பார்வை மிகக் கூர்மை

யானது. "Tiger, Tiger with burning eyes" என்ற வரிகளைக் கேட்டு, மறைந்த கணிதத்தத்துவ மாமேதை பேராசிரியர் பெட்ரண்ட் ரஸ்ஸல் (Betrand Russel) திடுக்கிட்டு நின்று விட்டதாகக் கூறப்படுகிறது. இது புலவனின் சொல் திறனை எடுத்துக் காட்டுவதற்காக அமைந்திருப்பினும், புலியின் கண்களைப் பற்றிய உண்மை விளக்கமும் ஆகும் என்று அறியவேண்டும். மான் அல்லது காட்டெருமை போன்றவைகளைத் தன் கூரிய பார்வையிலோ அல்லது ஒலியிஞலோ எளிதில் கண்டுகொள்ளும். இதற்கு நுகர்ச்சித் திறன் காதுகளைப் போலவோ கண்களைப் போலவோ இல்லை. இது தன் இரையை அதிக தூரம் துரத்திப் பிடிப்பதில்லை. மாருக, பதுங்கிப் பதுங்கி இரைக்குத் தெரியாமல் மிக நெருங்கிச் சென்று அவற்றின் மீது பாய்ந்து பிடிக்கும். பொதுவாக, இரையைத் தன் முன் பாதத்தால் பலமாக அறைந்தோ அல்லது தன் நகங்களால் பிடித்தோ தள்ளிவிடும். பின், பெரிய இரையாயின் அதன் தொண்டையைக் கடித்து மூச்சுத் திணறச் செய்து கொன்றுவிடுகிறது. சிறிய இரையாயின் அதன் கழுத்தையே பிடித்துக் கடித்து இறக்கச் செய்யும். சில சமயங் களில் நீர் நிலைகளின் அருகிலும், அவ்விலங்குகள் செல்லும் பாதை யிலும் மறைந்திருந்து, தன் இரை மிக நெருங்கி வந்ததும் திடீரென்று தாக்கும். புலியின் நகங்கள், வெளியில் நீட்டவும் உள் இழுத்துக்கொள்ளவும் ஏதுவாக அமைந்துள்ளன. இதனுல் தன் இரையின் உடலுள் நகங்களை நன்கு பதித்துக் கீறவும் மரங் களின் மீது ஏறவும் முடியும்.

புலிகள் பொதுவாக அடர்ந்த காடுகளில் உள்ள புதர்களில் பதுங்கி இருக்கும். புலியின் பழுப்பு நிறத் தோலில் செங்குத்துக் கறுப்பு வரிகள் பட்டை பட்டையாக மேல் கீழாக உள்ளன. இதன் பழுப்பு நிறமும், கறுப்பு நிறமும் மாறிமாறித் தாவரங்களுக்கிடை யிலுள்ள நிழலும், ஒளியும் மாறி மாறி இருப்பதற்குத் தக்கபடி ஒன்றியுள்ளன. இதனுல் புலி இருப்பதை யாரும் எளிதில் கண்டு கொள்ள முடியாது. புகைப்படம் II-12.3. இத்தகைய சூழ்நிலை யோடு ஒன்றிய நிறமும் ஓசையின்றி நடப்பதற்காக அமைந்துள்ள பாதங்களும் புலிக்கு மிகச் சிறந்த சாதகமாக உள்ளன. தாவரம் உண்ணும் எல்லா விலங்குகளையும் புலி தின்னும். சில சமயங் களில் பறவைகளையும் மீன்களையும் பிடித்துத் தின்பதுண்டு. ஒரு நாளைக்கு 19-23 கி.கிராம் மாமிசத்தை $1\frac{1}{2}$-$2\frac{1}{2}$ மணி நேரத்திற்குள் தின்னும். மீதமுள்ள மாமிசத்தைப் பாறைகளின் சந்துகளிலும் புதர்களிலும் மறைத்து வைத்து, மீண்டும் பசி ஏற்படும்போது தின்கின்ற பழக்கமும் உண்டு.

கலவி காலத்தில் ஒரு நாளில் பல முறை இவைகள் கலவியில் ஈடுபடும். ஒவ்வொரு முறையும் 15-20 வினடியே கலவி நீடிக்கும். மூன்று மாத சினைக்குப்பின் 2-3 குட்டிகள் ஈனுகிறது. சில சமயங்களில் 6 குட்டிகள் வரை போடுவதும் உண்டு. ஆனால் பொதுவாக இரண்டு குட்டிகள் நிலைத்து வாழும். இக் குட்டிகள் சுமார் ஒரு வருட காலம்தான் தாயின் துணையுடன் வாழும். முதல் 6 வார காலம் தாய், குட்டிகளுக்குப் பாலூட்டி வளர்க்கும்; பின்



படம் II—12.3. புலி புற்களுக்கிடையில் படுத்துள்ளது

மாமிசம் ஊட்டும் ஆறு மாதங்களுக்குப் பின் குட்டிகள் சிறு இரைகளைப் பிடிக்கத் தாய் கற்றுத்தருகிறது. ஒரு வருடம் கழிந்தபின் மான், பன்றி போன்றவற்றைப் பிடிக்கும் திறமை பெற்றுவிடுகிறது. இருப்பினும் எருமையைப் பிடிக்க அதற்கு இன்னும் வலிமையும் திறமையும் தேவைப்படுகிறது.

நன்கு வளர்ந்த ஆண்புலி 182 கி.கிராம் (400 ராத்தல்) எடையும், அதன் மூக்கு நுனியிலிருந்து வால் நுனி வரையில் 2.7 மீட்டர் (9 அடி) நீளமும் இருக்கிறது; பெண் புலி 15-30 செ.மீ. நீளம் (6-12 அங்குலம்) குறைவாக இருக்கிறது. எடை சுமார் 137 கி.கிராம் (300 ராத்தல்) இருக்கும்.

புலி, வட ஆசியாவிலிருந்து சைஞ வழியாக இந்தியாவிற்கு வந்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது. இந்தியாவில் பாலை வனங்களைத் தவிர இது எல்லா இடங்களிலும் பரவியுள்ளது. இந்தியாவில் ஒரே ஒரு உள்ளினம்தான் உள்ளது. ஒரு காலத்தில் இது நாடு முழுவதும் பரவியிருந்தது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு சுமார் 40,000 புலிகள் நம் நாட்டில் இருந்தன. ஆனால் இன்று சுமார் 1827 புலிகளே உள்ளன என 1972ல் எடுக்கப்பட்ட புலிக் கணக்கெடுப்புப்படி அறிகிறோம். புலியின் எண்ணிக்கை மிகவும் குறைந்ததற்குக் காரணங்கள், அதன் வாழ்விடம் அழிக்கப் பட்டதும், அதன் இரைகள் குறைந்ததும் எல்லாவற்றிற்கும் மேலாக வேட்டையாடிக் கொன்றதேயாகும். ஒரு மகாராஜா தன் வாழ்நாளில் 1100 புலிகளை வேட்டையாடிக் கொன்றி ருப்பதாக, மத்திய அரசு அமைச்சர் மாண்புமிகு டாக்டர் கரன் சிங் ஒரு சமயம் கூறியுள்ளார். துப்பாக்கிகள், ஒளிமிக்க விளக்குகள், ஃபாலிடால் போன்றவைகளால் வெகுவாக அழிக்கப் பட்டுவிட்டன.

புலி அழகும் கம்பீரமும் உடையது. இது நம் தேசிய விலங் காக அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இது மேலும் குறைந்து அழிந்து விடாமல் பாதுகாக்கவும், இதனை மேலும் அதிகரிக்கச் செய்யவும் வேண்டி, நம் மத்திய அரசு "புலித்திட்டம்"—(Project Tiger) ஒன்றை மேற்கொண்டுள்ளது. இதற்காக ரூபாய் 5 கோடி செலவில் ஆறாண்டுத் திட்டம் வரையப்பட்டுள்ளது. இத் திட்டம் சிறப்பாக நடைபெறவும், புலியைப் பாதுகாக்கவும் வேண்டி உலக வனவிலங்கு நிதிக்குழுவும் (World Wildlife Fund), அகில உலக இயற்கைப் பாதுகாப்புக் குழுவும் (International Union for Conservation of Nature and Natural Resources) நிதியுதவியும் மற்ற உதவிகளையும் கொடுக்க முன்வந்துள்ளன. அதன்படி ஒரு மில்லியன் டாலர் (சுமார் 75 லட்சம்) நிதியை இக்குழுக்கள் கொடுத்துள்ளன.

இத்திட்டத்தின் கீழ், சில புகலரண்களும், தேசிய வனங்களும் புலிப்புகலரண்களாகத்-(Tiger Sanctuaries (reserves)) தேர்ந்தெடுக் கப்பட்டுள்ளன. அவையாவன: (1) கொர்பெட் தேசியவனம் (Corbett National Park)—உத்திரப் பிரதேசம், (2) மானஸ் (Monas)—அஸ்ஸாம், (3) கன்ஹா தேசிய வனம் (Kanha National Park)—மத்தியப் பிரதேசம், (4) ரான்தம் போர் (Rantham bhor)—ராஜஸ்தான், (5) மேல்காட் (Melghat) — மஹாராஷ்டிரம், (6) பெட்லா (Betla)—பீகார், (7) சிம்லிபால் (Simlipal)—ஒரிஸ்ஸா, (8) பண்டிபுர்—கர்நாடகம், மற்றும் (9) சுந்தர

வனப்பகுதி இத்திட்டத்தில் நம் மாநிலத்து முதுமலைப் புகலரண் இடம் பெறாதது குறிப்பிடத்தக்கது, வருந்தற்குறியது.

புலித்திட்டத்தில் புலியின் வாழ்க்கை முறையைப் பற்றியும், அதன் வாழ்விடத்தைப் பற்றியும் ஆய்வு மேற்கொள்ளப்படும். இதற்காக வானொலி — தொலை அறிவிப்பு (Radio—Telimetry) முறை முதன் முதலாக நம் நாட்டில் கையாளப்படும். இதன்படி புலியினை மயக்கமுறச் செய்து வானொலி-தொலையறிவிப்புக் கருவி அதன் உடலில் பொருத்தப்பட்டு, அதன் பழக்க வழக்கங்கள் கண்காணிக்கப்படும். மேலும் இத்திட்டம் திறம்பட நிறைவேறத் தனி விமானமும், ஹெலிகாப்டரும் பயன்படுத்தப்படும். இத் திட்டத்தால் மேலே கூறப்பட்டப் புகலரண்கள் ஒவ்வொன்றிலும் போதிய எண்ணிக்கையுள்ள புலிகளை எப்படியும் பாதுகாக்க வேண்டும் என்பதாகும்.

வனத்தில் வாழும் மான், எருமை, கௌர் போன்றவைகள் மிகக் குறைந்துவிட்டதாலேயே புலி, கால்நடைகளைக் கொன்று தின்பதில் ஈடுபடுகிறது. பொதுவாகக் காட்டிலேயே தனக்கு வேண்டிய உணவு கிடைத்தவுடன் இது கால்நடைகளைப் பிடிப்ப தில்லை. துன்புறுத்தப்படாத புலி மனிதர்களைத் தாக்குவதும், கொல்வதுமில்லை. மனிதனைக் கொன்றாலும் அவனைத் தின்பதில்லை. ஆனால் மனிதனைத் தின்று பழகிவிட்டால், பின் மனிதனை வேட்டை யாடுவதில் ஈடுபடுகிறது. பெரும்பாலும் பெண் புலிதான் மனிதர் களைத் தாக்குவதில் ஈடுபடுகிறது என்பது திரு. அர்ஜுன் சிங் கருத்து.

மனிதர்களையும் கால்நடைகளையும் பிடிக்கும் புலியினைக் கூடு வைத்து முன்பு பிடிப்பது வழக்கம். உறுதியான மரங்களாலும் கம்பிகளாலும், இரு பெரிய அறைகளைக் கொண்ட கூடு ஒன்றைச் செய்து, அதன் ஓர் அறையில் ஆடு ஒன்றைக் கட்டி, வழக்கமாகப் புலி வரும் வழியில் வைத்துவிடுவார்கள். ஆட்டைப் பிடிக்க வந்த புலி கூட்டினுள் அகப்பட்டுக்கொள்ளும். இம்முறையில் பல புலிகள் கொல்லப்பட்டு விட்டன. சுமார் முப்பது ஆண்டு களுக்கு முன், ஆடு மாடுகளைப் பிடித்துக் கொன்று வந்த ஒரு புலியை எங்கள் ஊர் பட்டரமங்கலத்திற்கு அருகிலுள்ள மற்றொரு கிராம மக்கள் இவ்வாறு பிடித்ததை நான் கண்டிருக்கிறேன்.

பல வருடங்களுக்கு முன் நான் சிறுவனாக இருந்த பொழுது நடந்த நிகழ்ச்சி ஒன்றை நினைவு கூர்வது சிறந்தது. முயல் வேட் டைக்காகக் காட்டிற்குச் சென்ற வெளியூர் கூட்டமொன்று எங்க

ளூரிலிருந்து சிலரையும் அழைத்துச் சென்றது. எங்கள் ஊரைச் சேர்ந்த மாகாளி என்பவரைப் புலி பிடித்துக் கொன்றுவிட்டது என்ற செய்தியுடன் அன்று மாலே சுமார் 7 மணிக்குத் திரும்பி வந்தார்கள். ஊரிலுள்ளவர்கள் யாரும் இதை நம்பவில்லே. பொதுவாக எங்கள் ஊர் மக்கள் காட்டிற்குச் சென்று வருப வர்கள். அதற்கு முன் யாரையும் புலி கொன்றதாகத் தெரிய வில்லே. இதனுலும் மற்றும் வேட்டையாடச் சென்றவர்களில் பலர் வெளியூர்க்காரர்களாதலாலும், அவர்களில் யாராவது முயலே அடிக்குப்போது தவறுதலாகவோ, அல்லது ஏதாவது பொருமையினுலோ, மாகாளியைக் கொன்றிருக்க வேண்டும் என்று கருதினுர்கள். பிணத்தைக் காட்டிலேயே விட்டுவிட்டு வந்து விட்டதால், இரவில் சென்று பார்த்து உண்மையை அறிய இயல வில்லே. இவர்கள் கூறுவது பொய் என்று மறுநாள் நிரூபிப் பதற்குள் இரவில் வேறு ஏதாவது கழுதைப்புலி போன்ற விலங் குகள் பிணத்தைத் தின்றுவிடக்கூடும்; அதனுலேயே இப்படித் துணிந்து பொய் கூறுகிறுர்கள் என்ற சந்தேகம் ஊரிலுள்ளோர் உள்ளத்தில் தோன்றிவிட்டது. ஒவ்வொருவருடைய கற்பனேயும் கொடி கட்டிப் பறந்தது.

மறுநாள் காலேயில் நிகழ்ச்சி நடந்த இடத்திற்குச் சென்று பார்த்தபொழுது, இறந்து கிடந்த உடலில் கழுத்துத் துண்டிக்கப் பட்டுச் சிறிது ஒட்டிக் கொண்டிருந்தது. ஆனுல் அதற்கு அருகி லேயே, சற்றுத் தள்ளி இருந்த புதரில் புலி ஒன்றும் இறந்து கிடந்தது எல்லோருக்கும் வியப்பைத் தந்தது.

நடந்தது இதுதான். முயல் வேட்டையின்போது ஈர இரத்த ஒழுக்கு இருந்ததைப் பார்த்து ஏதோ மான்தான் அடிபட்டு அவ்வழியில் சென்றிருக்கவேண்டும் என்ற எண்ணத்தில், இறந்த வனும் மற்றும் சிலரும் அதனேத் தொடர்ந்து சென்றிருக்கிறுர்கள். இந்த இரத்தம் ஒரு புதரினுள் சென்று முடிந்திருக்கிறது. புதரி னுள்ளே ஏதோ ஒரு விலங்கு இருப்பதைக் கண்டிருக்கிறுர்கள். புலியின் வரிவரியாக உள்ள தோல், புதரின் நிழலும் ஒளியும் கலந்த நிலேயில் புள்ளிமான் போலவும் தோற்றத்தைக் கொடுத் திருக்கிறது. மான் நினேவிலேயே இருந்ததால் அடிபட்டது மான் என்று கருதி கூச்சலிட்டு, கல்லால் அடிக்க, புலி கோபம் அடைந்து பாய்ந்து முதலில் உள்ளவனின் கழுத்தைப் பிடித்துக் கொண்டது. இதனேக் கண்டு பயந்த மற்றவர்கள் தப்பித்தால் போதும் என்று ஓடிவிட்டார்கள்.

மறுநாள் காலேயில் பார்த்த பொழுதுதான் உண்மை புரிந்தது. யாரோ புலியைச் சுட்டுவிட்டதால் அடிபட்டு தப்பிவந்து உயிருக்கு

மன்ருடிக் கொண்டு புதரில் படுத்திருந்திருக்கின்றது. அப்பொழுது இவர்கள் தொந்தரவு செய்யவே கோபத்தால் பாய்ந்து ஒருவனைக் கொன்று விட்டது. இவர் புலியைக் காணுமல் இருந்திருந்தாலும் அது இறந்துதான் இருக்கும். மரண வேதனையால் அதன் கோபம் அதிகரித்துத் தாக்கி விட்டது.

நாடு சுதந்திரம் அடைவதற்கு முன் அரசர்களும், உயர் அரசு அலுவலர்களும் புலி வேட்டையாடுவதை ஒரு பொழுது போக்காகவும், ஒரு பெரிய வீரச் செயலாகவும் மேற்கொண்டார்கள். ஆனுல் இன்று புலியை வேட்டையாடுவதும், கொல்வதும் சட்டப்படி குற்றமாகும்.

வெள்ளைப் புலிகளைக் காண்பது அரிது. ஆனுல் சில ஆண்டுகளுக்கு முன் மத்தியப் பிரதேசத்திலுள்ள ரேவா மகாராஜா (Maharaja of Rewa) ஒரு வெள்ளை ஆண் புலியை வளர்த்து வந்தார். அதற்கு ஒரு பெண்புலி 4 வெள்ளைக் குட்டிகளை ஈன்றது. பிரிஸ்டல் (Bristal) மிருகக்காட்சி சாலையில் இரு வெள்ளைக் குட்டிகளும், டெல்லி மிருகக்காட்சி சாலையில் இரு வெள்ளைப் புலிக்குட்டிகளும் உள்ளன. வாஷிங்டன் தேசிய விலங்கு வனத்தில் (National Zoological park in Washington) ஒரு பெண்குட்டி உள்ளது. இன்று உலகிலுள்ள மொத்தம் 34 வெள்ளைப் புலிகளில் 25 இந்தியாவில் உள்ளன.

# 13. சிறுத்தை
## (Leopard)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | பேந்திரா பார்டஸ் (Panthera Pardus) |
| வரிசை | : | ஊன் உண்ணி (Cornivora) |
| குடும்பம் | : | ஃபிலிடே (Felidae) |
| உட் குடும்பம் | : | (Pantherinae) |

சிறுத்தை, புலியைக்காட்டிலும் சிறியது. ஆண் சிறுத்தையின் தலையும் உடலும் சேர்ந்து 4 அடி 6 அங்குல நீளமும், 400 ராத்தல் எடையும் இருககும். இது மிக ஆபத்தான விலங்கு; மற்ற ஊன் உண்ணிகளைக் காட்டிலும் மிகத் திறமையாகப் பதுங்கிச் செல்லும் தன்மை பெற்றுள்ளது. இது எளிதில் ஓட, குதிக்க, தாண்ட, நீந்த, மரங்களில் ஏற ஆற்றல் பெற்றுள்ளது. இதன் வால் சுமார் 3 அடி நீளம் இருக்கும். இது மரங்களில் ஏறும்பொழுது சமன்



படம் II—13.1. சிறுத்தை, புள்ளிகள் வட்டவடிவில் உள்ளதைக் காண்க.

செய்ய வால் உதவுகிறது. பெரும்பாலும் இது மரங்களின் மீது அமர்ந்திருக்கும். விரல்களுக்கிடையில் ஏற்படும் அரிப்பைப் போக்கிக்கொள்ள, இது பசுமரத்தில் தன்முன்னங்கால் நகங்களைப் பதித்து இழுப்பதால் அம்மரத்தில் பல ஆழமான பள்ளங்கள்

இருப்பதைக் காடுகளில் காணலாம். இது அடர்ந்த காடுகளில் புதர்கள் உள்ள பகுதிகளிலும் உள்ளது. சிறுத்தையும், புலியும் ஒரே பகுதியில் வாழ்வதுண்டு. புலி பெரிய தாவர உண்ணிகளைக் கொல்லும். ஆனால் சிறுத்தை எல்லா வகை விலங்குகளையும் பிடித்துத் தின்னும் பழக்கமுள்ளது. இது, சிறு விலங்குகளான பறவை, முயல், குரங்கு போன்றவற்றையும் பிடித்துத் தின்னும். இன்னொரு வியத்தகு செயல் என்னவெனில், இது நாய்களை நன்கு பிடித்துத் தின்னும்.

எங்கள் குடும்பத்துப் பட்டி நாய்கள் பலவற்றைச் சிறுத்தைகள் பிடித்துத் தின்றுள்ளன. சிறுத்தைகளுக்கு நாயைத் தின்பதில் மிக விருப்பம் இருப்பதாகக் கிராம மக்கள் கூறுகிறார்கள். சிறுத்தையால் பிடித்துத் தூக்கிச் செல்லப்பட்ட பல நாய்கள் தப்பியும் வந்துள்ளன. பொதுவாகச் சிறுத்தை, நாயின் கழுத்தைத்தான்



படம் II—13.2. சிறுத்தை

பிடிக்கும். நாய் ஏமாந்திருக்கும் நிலையில்தான், அதை அணுகி திடீரென்று பிடித்துக்கொல்லும். சிறுத்தை தன்னை அணுகுவதை நாய் பார்த்துவிட்டால், பிறகு சிறுத்தையால் அதைப் பிடிக்க முடியாது. நாயைப் பிடிக்கும்போது அதன் கழுத்தைப் பிடிக்காமல் நாயின் முதுகைப் பிடித்தால், நாய் கடித்து விடுமாதலால்

சிறுத்தை, நாயின் பின்பகுதியைப் பிடிப்பதில்லை என்று பல அனுபவமிக்கவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன். பிடித்த நாயை எடுத்துச் சென்று பாதுகாப்பான இடத்தில் அதைத் தின்னும். தின்பதற்கு முன் நாயைக் கீழே வைத்துவிட்டு சுற்றியும் ஒருமுறை பார்த்த பின்தான் நாயைக் கடிக்குமாம். இந்நிலையில் நாய் திடீரென்று எழுந்து ஓடி விடுவதுண்டு. ஏமாந்த சிறுத்தை, நாயைத் துரத்துவது கிடையாது. இப்படித் தப்பி வந்ததாகக் கூறப்பட்ட பல நாய்களை நான் பார்த்திருக்கிறேன். அத்தகைய நாய்களின் கழுத்திலோ மற்றப் பகுதிகளிலோ சிறுத்தையின் பல் பதிந்த காயங்களோ, நகம் பட்ட காயங்களோ இருந்ததில்லை. இதற்கான காரணங்களை அம்மக்கள் கூறுவது சுவையானவை.

திறமையான நாய் ஏமாந்த நிலையில் பிடிபட்டதும் எந்தவிதச் செயலுமின்றி அசைவற்று இறந்ததுபோல் இருக்குமாம். இதனால் தன் பாதுகாப்பான இடத்தை அடைந்த சிறுத்தை, நாய் இறந்து விட்டதென்று கருதி இரையைக் கீழே வைத்து விட்டுச் சுற்றியும் ஒருமுறை பார்க்கும்பொழுது, நாய் அச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்தித் தப்பித்துக் கொள்வதுண்டு. ஆனால் பிடிபட்டு எடுத்துச் செல்லப்படும் பொழுது, நாய் திமிறினால் சிறுத்தை அதன் கழுத்தைக் கடித்துக் கொன்று விடும். காடுகளில் கால்நடை மேய்ப்பவர்கள் அழைத்துச் செல்லும் நாய்கள் சிறுத்தையிடம் பிடிபட்டதைக் கண்டு இடையர்கள் சிறுத்தையை விரட்டி நாயை விடுவித்த நிகழ்ச்சிகள் பல உண்டு. இந்நாய்களின் உடலில் சிறப்பாகக் கழுத்தில் சிறுத்தையின் பற்கள் பட்ட காயங்களைக் காணலாம். பற்கள் ஆழமாகப் பதிந்திருந்தால் இந்த நாய்கள் பிழைப்பது மிக அரிதாகிவிடுகின்றன. திறமையும் அனுபவமும் மிக்க நாய்கள் விழிப்புடன் இருக்கும்பொழுது சிறுத்தை வருவதை வாசனையால் அறிந்து, குரைத்து மனிதர்களுக்குத் தெரியப்படுத்துவதுண்டு. இன்னும் சில திறமையான நாய்கள் சிறுத்தை வருவதை அறிந்து குரைக்காமல் ஒளிந்து பாதுகாப்பான இடத்திற்குச் சென்றுவிடுவதுமுண்டு. எங்கள் குடும்பத்திற்குச் சொந்தமான தோட்டத்து நாய் ஒன்று பலமுறை இரவில் சிறுத்தையின் வருகையை அறிந்து எந்தவிதச் சத்தமும் செய்யாமல் தோட்டத்து வீட்டில் படுத்து இருக்கும். மனிதர்கட்கு அருகில் சென்று படுத்துக் கொள்ளும். அப்பொழுது விழித்துக்கொண்டவர்கள் நாய் வருவதைக்கொண்டு வெளியில் சென்று பார்த்தால் இதற்கிடையில் புலியோ அல்லது சிறுத்தையோ பட்டியிலுள்ள ஆட்டையோ அல்லது பசுமாட்டையோ பிடித்திருக்கும், அல்லது ஆள் அரவம் கேட்டுத் திரும்பிச் சென்று கொண்டிருக்கும்.

சிறுத்தை, புலி, நாய் ஆகியவற்றிற்குள்ள இந்த குணம், காடுகளுக் கருகிலுள்ள ஊர் மக்கள் யாவருக்கும் நன்கு தெரிந்த தொன்ருகும்.

பொதுவாகச் சிறுத்தை இரவில்தான் இரைதேடிச் செல்லும்; பகலிலும் செல்வதுண்டு. இது சிறு விலங்குகளின் கழுத்தைப் பிடித்துக் கடித்துக் கொல்லும். ஆனல் பெரிய விலங்குகளின் முதுகைப் பற்றி பின் தொண்டையைக் கடித்து அவற்றுடன் தீவிர மாகப் போராடி முடிவில் இரையைக் கொன்று வீழ்த்திவிடும்.

சிறுத்தையின் மஞ்சள் நிறமான தோலில் பூவிதழ் வடிவில் கருப்புப் புள்ளிகள் உள்ளன. இப் புள்ளிகள் உடலின் இரு பக்கங் களிலும் நெருக்கமாகவும் தலையிலிலும், கால்களிலும் பரவ லாகவும் உள்ளன. இது அடிக்கடி தன் தோலை நாக்கினுல் நக்கிப் பளபளப்பாக வைத்துக் கொள்கிறது.

சிறுத்தையும் புலியைப் போலத் தனித்து வாழ்வதே. கலவிக் காலங்களில் மட்டுமே ஆணும் பெண்ணும் சேர்கின்றன. கரு தரித்து மூன்று மாதங்களுக்குப்பின் மூன்று குட்டிகள் வரை ஈனுகின்றது. குட்டிகள் நன்கு வளர்ந்து பெரியதாகும் வரையில் தாயுடனே திரிகின்றன; இக்காலத்தில் இரையைப் பிடிப்பதைக் குட்டிகளுக்குத் தாய் கற்றுக் கொடுக்கிறது.

# 14. பனிச்சிறுத்தை
## (Snow Leopard)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | பேன்திரா அன்ஸியா (Panthera Uncia) |
| வரிசை | : | ஊன் உண்ணி (Carnivora) |
| குடும்பம் | : | ஃபிலிடே (Felidae) |
| உட்குடும்பம் | : | பேந்திரினே (Pantherinae) |

பனிச்சிறுத்தை நம் நாட்டில் காஷ்மீர் முதல் பூடான் வரையிலுள்ள இமயமலைப்பகுதியில் வாழ்கிறது. இது கடல் மட்டத்திற்கு மேல் 3660-3950 மீட்டர் உயரமுள்ள பகுதிகளில் பாறைகளுக்கிடையில் காணப்படுகிறது. இதன் உடல் மென்மையான அழகான மயிரால் போர்த்தப் பட்டுள்ளது. இதனால் இதன் தோல் மிக விலையுயர்ந்த பொருளாகக் கருதப்படுகிறது. இத் தோலுக்காகப் பனிச்சிறுத்தைகள் வெகுவாகக் கொல்லப்பட்டு விட்டன. நம்நாட்டில் பாதுகாக்கப்படவேண்டிய வனவிலங்குகளில் பனிச் சிறுத்தையும் ஒன்று.



படம் II—14.1. பனிச்சிறுத்தை

நன்கு வளர்ந்துள்ள ஆண் பனிச்சிறுத்தையின் தலையும் உடலும் சேர்ந்து சுமார் 100-110 செ. மீட்டர் நீளமும், வால் 90 செ. மீ. நீளமும் இருக்கின்றன. இது சிறுத்தையைக் காட்டிலும் சற்றுச் சிறியதாகவும் வால் நீண்டும் உள்ளது. இதற்குக்

குறுகிய முகமும், உயர்ந்த நெற்றியும், நேரான தாடையும் உள்ளன. இதன் உடல் பொதுவாக மங்கலான பழுப்பு நிறம் உடையது. ஆனல் சிலவற்றில் ஆங்காங்கே கருமை படர்ந்தும் உள்ளது. இதன் வயிற்றுப்பகுதி தூய வெண்மையாக இருக்கிறது. தலை, பிடரி, கால்களின் கீழ்ப்பகுதி ஆகியவற்றில் தெளிவான புள்ளிகள் உள்ளன. உடற்பகுதியிலுள்ள புள்ளிகள் பெரியவை யாகவும், தெளிவற்றும், இதழ் போன்றும் உள்ளன. குளிர் காலத்தில் மயிர்கள் மிக வனப்பாக வளர்கின்றன. இவற்றில் புள்ளிகள் தெளிவாகக் காணப்படுவதில்லை.

பனிச்சிறுத்தை இரவில் இரை தேடுகிறது. இது காட்டு ஆடுகள், கஸ்தூரி மான், முயல், பெரிய பறவைகள் போன்ற வற்றைப் பிடித்துத் தின்கின்றது. இது கால்நடைகளையும் பிடிக் கிறது. கால்நடைகளைப் பின் தொடர்ந்து அவைகள் மேயச் செல்லும் உயர் மட்டத்திற்கும் கீழ் மட்டத்திற்கும் செல்கிறது.

பனிச்சிறுத்தையின் கர்ப்ப காலம் 3 மாதங்கள் நீடிக்கிறது. ஒரே முறையில் இது 2-4 குட்டிகளை ஈனுகிறது.

# 15. மேகச்சிறுத்தை

## (Clouded Leopard)

விலங்கியல் பெயர் : நியோஃபிலிஸ் நெபுலோஸா (Neofelis nebulosa)
வரிசை : ஊன் உண்ணி (Carnivora)
குடும்பம் : ஃபிலிடே (Felidae)

மேகச்சிறுத்தை பெரும்பாலும் இந்தியாவில் அஸ்ஸாம் மாநிலத்து மலைப்பகுதியில் காணப்படுகிறது. நன்கு வளர்ந்த ஆண் மேகச் சிறுத்தையின் தலை, உடல், வால் மூன்றும் சேர்ந்து சுமார் 195 செ.மீ. நீளமிருக்கிறது. இதன் உடலும் வாலும் நீண்டு, கால்கள் குட்டையாக உள்ளன. இதன் காதுகள் கருநிற வட்டமாக மையத்தில் பழுப்பு நிறத்துடன் உள்ளன. இதன் மேல் தாடை கோரைப் பற்கள் நீண்டு வளர்ந்து ஏறக்குறைய "கொம்புகள்" (Tusks) போலத் தோன்றுகின்றன. வேறு எந்த பூனை இனத்திலும் கோரைப் பற்கள் இவ்வாறு நீண்டு வளர்ந்து இருப்பதில்லை.



படம் II—15.1. மேகச்சிறுத்தை

இந்திய மேகச் சிறுத்தை மங்கிய கருப்பு நிறத்திலும், பழுப்பு நிறத்திலும் இருக்கின்றது. இதன் கன்னப் பகுதியில் கோடுகளும்,

தலையில் புள்ளிகளும் உள்ளன. உடல் முழுதும் பெரிய பெரிய கருப்புக் கறைகள் (படலங்கள்) (Blotches) உள்ளன. இப் படலங்களைச் சுற்றிக் கருப்புக்கோடுகள் உள்ளன. இக் கருப்புக்கோடுகளுக்கிடையில் மங்கலான இடைவெளிகள் உள்ளன. வயிற்றுப் பகுதியிலும் (Abdomen) கால்களிலும் பெரிய பெரிய புள்ளிகள் உள்ளன. வாலில் பெரும்பாலும் முற்றுப்பெறாத வளையங்கள் உள்ளன.

மேகச்சிறுத்தை பெரும்பாலும் மரங்களின் மீது பகலில் பதுங்கியிருக்கும். இது இரவில் இரையைத் தேடிச் செல்லும். இது மான்களையும் மற்ற பெரிய விலங்குகளையும் வேட்டையாடும். சில சமயங்களில் கால் நடைகளையும் பிடிப்பதுண்டு.

மரப் பொந்துகளில் குட்டிகள் போடும். ஒரு தடவையில் இரண்டு குட்டிகள் ஈனுகிறது.

# 16. வேங்கை
## (Cheetah)

விலங்கியல் பெயர் : அஸினோனிக்ஸ் ஜுபேடஸ் (Acinonyx jubatus)
வரிசை : ஊன் உண்ணி (Carnivora)
குடும்பம் : ஃபிலிடே (Felida)
உட் குடும்பம் : அஸினோனிசினே (Acinonychinae)

இந்தியர்கள் ஒவ்வொருவரும் வெட்கமும் வேதனையும் படவேண்டிய நிலையொன்று நம் காலத்தில் ஏற்பட்டுள்ளது. ஆம், நம் நாட்டின் பெருமைக்கே உரிய வனவிலங்குகளில் ஒன்றான வேங்கை (Cheetah) இன்று அழிந்துவிட்டது. ஒரு காலத்தில் நம்நாட்டில் வேங்கைகள் நிறைந்திருந்தன. பேரரசர் அக்பர், வேட்டையாடுவதற்காக ஆயிரம் வேங்கைகளை வளர்த்ததாகச் சான்றுகள் உள்ளன. வேங்கையை, வேட்டைச் சிறுத்தை (Hunting Leopard) என்றும் கூறுவர். 1948-ம் ஆண்டு மத்திய பிரதேசத்துப் பஸ்தார் மாவட்டத்தில் கொரியா (Korea of Baster District of Madhayapradesh) என்ற இடத்தில் ஒரு வேட்டைக்காரர் மூன்று ஆண் வேங்கைகளைக் கொன்றுவிட்டார். அதற்குப் பின் வேங்கையை யாரும் பார்த்ததாகத் தக்க சான்றுகள் இல்லை. வேங்கை நம் நாட்டிற்கு முதன் முதலில் வட-மேற்குக் கணவாய் வழியாக வந்திருக்கவேண்டும் எனத் தெரிகிறது.

நம்நாட்டில் மக்கட் பெருக்கத்தின் காரணமாகக் காடுகள் அழிக்கப்பட்டதாலும், தன் உணவாகிய இரலை (கருமான்), புள்ளிமான் போன்றவைகள் வெகுவாகக் குறைந்துவிட்ட காரணங்களாலும் வேங்கைகள் அழிந்துவிட்டன. மேலும் இவைகளைக் கூண்டில் அடைத்து வளர்க்கும்பொழுது (Captivity) இனப்பெருக்கம் செய்வதில்லை. இதனால் இவ்வினத்தை வளர்த்துப் பெருக்க முடிவதில்லை.

வேங்கை தன் தலையிலிருந்து உடல்முடிய சுமார் 3 அடி நீளமும், இதன் வால் சுமார் 1 அடி நீளமும் இருக்கின்றது.

இது சிறுத்தையைப் போலவே இருப்பினும் இதற்கு நீண்ட கால்களும் மெலிந்த உடலும் உள்ளன. இதன் தலை உருண்டையாக சிறியதாக இருக்கிறது. இதன் உடலில் உள்ள புள்ளிகள் ஒழுங்கான வட்டங்களாக, நெருக்கமாக உள்ளன. சிறுத்தைக்குப் புள்ளிகள் பூவிதழ்போன்று ஒழுங்கற்ற அமைப்பில் காணப்படும். வேங்கையின் நகங்கள் முழுவதும், விரல் பைகளுக்குள் இழுத்துக் கொள்ளப்படுவதில்லை.



படம் II—16.1. வேங்கை. புள்ளிகள் வட்டமாக உள்ளதைக் காண்க.

இரலை, புள்ளிமான், சின்காரா ஆகியவைகளைப் பிடித்து வேங்கை தின்னும். இதற்கு நீண்டதூரம் ஓடித் துரத்திப் பிடிக்கும் திறமை இல்லை. குறைந்த தூரம் மிக வேகமாக ஓடக்கூடிய விலங்கு வேங்கை ஒன்றுதான். இவ்வுலகிலுள்ள வேறெந்த விலங்கும் வேங்கையைப் போல் குறைந்த தூரத்தை, வேகமாக ஓடிக் கடக்க இயலாது. மேலும் இது துவக்கத்திலேயே மிக வேகமாக ஓடக்கூடியது. இது மணிக்கு சுமார் 70 மைல் வேகத்தில் ஓடும் திறமையுடையது.

இது இரலை மானை ஆரம்பத்திலேயே துரத்திப் பிடித்துவிடும். அப்படிக் குறைந்த தூரத்திலேயே பிடிக்க முடியவில்லையென்றால், இரலை மானுக்கு இணையாக ஓடும் திறமை இதற்கு இல்லாததினால், இது தன் வேட்டையை விட்டுவிடுகிறது.

இன்று வேங்கை ஆப்பிரிக்காவில்தான் உள்ளது. இந்திய வேங்கைக்கும் ஆப்பிரிக்க வேங்கைக்கும் எவ்வித வேறுபாடுகளும் இல்லையாதலால், ஆப்பிரிக்க வேங்கையை நம் நாட்டில் புகுத்தலாம் என்ற எண்ணம் உள்ளது. இது நல்முயற்சியாயினும் வேங்கைக்கு ஏற்ற உணவுகளைக் கொண்ட வாழ்விடத்தைத் தேர்ந்தெடுத்த பின்பே இச்செயலில் ஈடுபடுவது நலம்.

# 17. சிறிய புனுகுப்பூனை
## (The Small Civet)

விலங்கியல் பெயர் : விவெரிகுலா இண்டிகா (Viverricula indica)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carrivora)
குடும்பம் : விவெரிடே (Viverridae)

புனுகுப் பூனை தென்னிந்தியா முழுவதும் புதர்களிலும், புற்களிலுமுள்ளது. இது அடர்ந்த காட்டில் காணப்படுவதில்லை. இதற்கு நீண்ட உடலும், குட்டையான கால்களும், நீண்ட வாலும் உள்ளன. இதன் முகத்தின் முன்பகுதி (Snout) கூரியது; காதுகள் சிறிய வட்ட வடிவமானவை. இதன் உடல் மென்மையான, பளபளப்பான மயிர்களால் போர்த்தப் பட்டுள்ளது. இத் தோலில் புள்ளிகள் இருக்கும். பொதுவாக பொட்டுப் பொட்டான (Blotch) தோற்றத்துடன் இருக்கும்.

மலப் புழைக்கும், இனப்புழைக்கும் இடையிலுள்ள பெரினியல் பகுதியில் (Perineal Area) புனுகுச் சுரப்பியுள்ளது. இச் சுரப்பி



படம் II—17.1. சிறிய புனுகுப்பூனை

பெரிய பை போன்று உள்ளது. இது, ஒரு சிறு பிளவு வாயிலாகத் திறக்கிறது. இப்பிளவின் இரு புறங்களிலும், தடித்து மூடித்

திறக்கும் உதடுகள் உள்ளன. இச் சுரப்பி ஒரு தோல் மடிப்பினுள் (Skin Fold) புனுகைச் சுரக்கிறது. இப்புனுகில் அம்மோனியா (Ammonia), ரெசின் (Resin), கொழுப்பு (Fat), எளிதில் ஆவியாகும் ஒரு நறுமண எண்ணெய் (Volatile Oil) முதலியன உள்ளன. இவைகளே இந் நறுமணத்திற்குக் காரணங்களாகும்.

புனுகுப்பூனே தனித்தோ அல்லது இணையாகவோ, நிலத்தி லுள்ள வளேயிலும், மரப் பொந்திலும் வாழ்கிறது. இது, இரவில் மட்டுமே உணவைத்தேடி வெளிவருகிறது. இது கிராமப் புறங் களிலும், நகர்ப் புறங்களிலும் பாதுகாப்பான இடங்களில் வாழ்கிறது. இது எலி, சுண்டெலி போன்றவற்றைப் பிடித்துத் தின்னும். இது கோழிகளேயும் பிடித்துத் தின்பதுண்டு. மேலும் காய், கனி போன்ற தாவர உணவுகளேயும் விரும்பித் தின்கிறது.

நன்கு வளர்ந்த ஆண் 90 செ.மீ. நீளத்திற்கும் சற்று அதிகமாக இருக்கிறது. இதில் வால்மட்டும் 30 செ.மீ. நீளத் திற்கும் அதிகமாக இருக்கும். இது பொதுவாக சாம்பல் நிறத்தில் காணப்படுகிறது. இதன் முதுகில் சிறு கோடுகளும், கழுத்தில் குறுக்குப் பட்டைகளும், மற்ற இடங்களில் சிறு புள்ளிகளும் காணப்படுகின்றன.

புனுகுப்பூனே எல்லாப் பருவத்திலும் குட்டிகள் போடுகின்றன. ஒரு தடவையில் 4 அல்லது 5 குட்டிகள் போடுகிறது. குட்டிகளேத் தாய் மட்டுமே பராமரிக்கிறது. தாய்ப்பூனே கற்களின் அடியிலும், மரங்களின் அடியிலும், தானே தோண்டிய வளேயில் குட்டிகளே வைத்துப் பாதுகாக்கின்றது.

# 18. பெரிய இந்திய புனுகுப்பூனை
## (The Large Indian Civet)

விலங்கியல் பெயர் : விவெரா ஜிபேதா (Viverra Zibetha)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : விவெரிடே (Viverridae)

பெரிய இந்திய புனுகுப்பூனை நம்நாட்டில் அஸ்ஸாம், வங்காளத்தின் மலைப்பகுதி போன்ற பகுதிகளிலுள்ளது. இதற்கு நீண்ட தலையும் ஒடுங்கிய உடலும், குட்டையான தடித்த கால்களும் உள்ளன. இதன் உடல் வலிமையானது. நன்கு வளர்ந்த பூனையின் தலையும் உடலும் சேர்ந்து சுமார் 80 செ.மீ. நீளமும், வால் 45 செ.மீ. நீளமும் இருக்கிறது. நீண்டு நிமிர்ந்த கருத்த மயிர்கள் பிடரி மயிர் போன்று முதுகின் நடுப்பகுதி வரையிலும் காணப்படுகின்றன. இது கருத்த வெளிர் நிறத்தில் மஞ்சள் அல்லது பழுப்பு கலந்து காணப்படுகிறது. இக்கருப்பு நிறம், பிடரி மயிரிலும், தோளிலும் உள்ளது. பின் பகுதியில் இந்நிறம் வளையங்களாகவும் இதழ்கள் போன்றும் காணப்படுகிறது.



படம் II—18.1. பெரிய இந்திய புனுகுப்பூனை

இது காடுகளிலும், புதர்களிலும் தனித்து வாழ்கிறது. சிறு விலங்குகளையும், கோழிகளையும் பிடித்துத் தின்கிறது; தாவர உணவையும் தின்கிறது. 3 அல்லது 4 குட்டிகளை மே, ஜூன் மாதங்களில் போடுகிறது. இதில் புனுகுச் சுரப்பி பெரிதாக வளர்ந்துள்ளது.

# 19. கீரி

## (Mongoose)

வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : ஹெர்பெஸ்டிடே (Herpestidae)

பாம்பாட்டி, கீரியையும் பாம்பையும் வைத்து நகரங்களின் சாலைகளில் வேடிக்கை காட்டுவதை நாம் பார்த்திருக்கிறோம். ஆனால் அவைகள் ஒரு போதும் சண்டைக்கு விடப்படுவதில்லை. சண்டையில் ஏதாவதொன்றிற்குக் காயம் படவோ அல்லது இறந்து போகவோ நேரிடின் பாம்பாட்டியின் பிழைப்பு என்னவது?

நம் நாட்டில் கீரிகளில் நான்கு இனங்கள் உள்ளன. இவைகளனைத்திற்கும் பொதுவாக நீண்ட உடலும், குட்டையான கால்களும், ஒளிமிக்க கண்களும், கூரிய முகமும், நீண்ட கற்றையான வாலும் உள்ளன. இவைகளின் பாதங்களில் அகன்று நீண்ட நகங்கள் உள்ளன; விரல்கள் தனித்தனியாக உள்ளன. இவைகளுக்கு வாசனைச் சுரப்பிகள் (Scent Glands) கிடையா. மலப் புழைச் சுரப்பிகள் (Anal Glands) உள்ளன. மயிர்களற்ற சுரப்பிப் பை (Glandular Sac) ஒன்று மலப் புழையைச் சூழ்ந்துள்ளது.

கீரிகள் தாவரங்களை உணவாகக் கொண்டாலும், ஊன் உணவையே விரும்புகின்றன. இவற்றின் பற்கள் இரையைத் துண்டிப்பதற்கேற்ப, தட்டையாகவும், கூர்மையாகவும் உள்ளன. இரையைக் கண்டவுடன் கீரிகள் நேரிடையாகத் தாக்கி அவற்றைப் பிடிக்கின்றன. தூரத்திலுள்ள இரையை இவைகள் வாசனையால் அறிந்து அதனைத் தொடர்ந்து சென்று பிடிக்கின்றன. சில சமயங்களில் இரைகள் வளைகளினுள் இருப்பின் வளையைத் தோண்டி, உட்புகுந்து பிடிக்கின்றன. வளைகளினுட் புகுவதற்கேற்ப கீரிகளின் தலை கூர்மையாகவும், காதுகள் சிறியனவைகளாகவும் உள்ளன. அவற்றின் முன்னங் கால்களில் உள்ள நகங்கள் நீண்டு,

தோண்டுவதற்குத் தக்கவாறு உள்ளன. வளையினுட் புகும்போது மண்ணும் தூசியும் புகாதவாறு மூடிக்கொள்ளும் வகையில் அவற்றின் காதுகள் இருப்பது குறிப்பிடத்தக்கது. தொலைவில் உள்ள இரையைக் கண்டுணர இவைகள் பின்னங் கால்களில் உட்கார்ந்தும், நிமிர்ந்து நின்றும் சுற்றிலும் பார்ப்பதுண்டு. இவைகள் இரையைப் பிடித்தவுடன் அதனைக் கடித்துக் கொன்று தின்று விடுகின்றன. சில சமயங்களில் இரையின் இரத்தத்தை மட்டும் குடித்துவிட்டு இரையைப் போட்டுவிடுவதும் உண்டு. எலி, ஓணான், பறவை, பாம்பு போன்றவற்றைப் பிடித்துத் தின்கின்றன. கீரிகள்



படம் II—19.1. கீரி

பறவைகளின் முட்டைகளையும் தின்கின்றன. கீரிகள் பகலில் திரிந்து இரையைப் பிடிக்கின்றன. இவைகள் தோட்டங்களில் பயிர்களிடையேயும் வாழ்வதால், கோழிகளைப் பிடித்துத் தின்று விடுவதுண்டு.

கீரிகள் பாம்புகளைப் பிடித்துத் தின்பதுண்டு. இவைகள் நாகப் பாம்பையும் பிடித்துத் தின்னும். இவைகள் பாம்புகளை மிகத் திறமையாகப் பிடிக்கின்றன. பாம்பினைப் பிடிக்கும்பொழுது நேரிடையாக எதிர்த்துச் சென்று திடீரெனத் தலையைப் பிடித்துக் கொள்கின்றன. சில சமயங்களில், தக்க சமயம் பார்த்துப் பாம்பின் தலை கீழே தணியும் பொழுது தலையைப் பிடித்துக் கொள்ளும். பாம்பைப் பிடிக்கும் பொழுது கீரியின் மயிர்கள் சிலிர்த்துக்கொண்டு நேராக நிற்பதால், அதன் உடல் இரு மடங்கு பெரிதாகத் தெரிகிறது. இதனால் பாம்பு, கீரியின் உடலைச் சரியாகக் கண்டறிந்து கொத்த முடிவதில்லை.

கீரியின் உடலில் ஓரளவிற்கு விஷ எதிர்ப்புத் தன்மை (Immunity) உள்ளது. அதிக விஷமற்ற பாம்பு கடித்தால் இது இறப்பதில்லை. அதிக விஷம் அதன் உடலினுட் சென்றால் இறந்து விடுகிறது. பூனைகளும் பாம்புகளின் சாதாரண விஷத்தால் இறப்பதில்லை. பூனையைக் காட்டிலும் பன்றியின் உடலில் விஷ எதிர்ப்புத்

திறன் (Immunity) அதிகம். பாம்பால் கடிபட்டவுடன் கீரி ஒரு வகை வேரைத் தின்பதால் அது இறப்பதில்லை என்ற நம்பிக்கை கிராம மக்களிடையே உள்ளது. இந்த நம்பிக்கை சரியானதல்ல. கீரி, வேரைத் தின்பதில்லை. ''அது தன் பற்களைக் கூர்மையாக்கிக் கொள்ள வேரைக் கடிக்கிறது'' என திரு. பிரேடர் (Prater) கூறுகிருர்.

கீரிகள் பொதுவாக எல்லா மாதங்களிலும் இனப் பெருக்கம் செய்கின்றன. கீரிகள் இரண்டு அல்லது மூன்று குட்டிகள் போடுகின்றன. குட்டிகளை ஆண் கீரிகள் பராமரிப்பதில்லை. குட்டிகளைப் பாதுகாக்கும் பொறுப்பு பெண் கீரியினுடையதே. குட்டிபோடும் காலத்தில் பெண்கீரி தானே ஒரு வளையைத் தோண்டியோ அல்லது கரையான் புற்றினை விரிவுபடுத்தியோ அதனுள் குட்டிகளைப் போடுகிறது. தன் குட்டிகளைக் காப்பாற்ற, கீரி தன்னைவிடப் பெரிய விலங்குகளையும் எதிர்த்துத் தீவிரமாகச் சண்டையிடுகிறது.

கீரிகள் நம் நாட்டில் எல்லாப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. இவைகள் புதர்களிலும், கரையான் புற்றுக்களிலும் காணப்படுகின்றன. நம்நாட்டில் பொதுக்கீரி (Common Mongoose), சிறிய இந்தியக் கீரி (The small Indian Mongoose), வரிக் கழுத்துக் கீரி (The Striped Necked Mongoose), நண்டு தின்னும் கீரி (Crab Eating Mongoose) என்ற நான்கு கீரியினங்கள் உள்ளன.

# 20. கீரி

## (The Common Mongoose)

விலங்கியல் பெயர் : ஹெர்பெஸ்டிஸ் எட்வர்ஸி (Herpestes edwardsi)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : ஹெர்பெஸ்டிடே (Herpestidae)

கீரி வடக்கே இமயமலை அடிவாரத்திலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரை எல்லாப் பகுதியிலும் பரவியுள்ளது. இது மஞ்சள் கலந்த பழுப்பு நிறத்தில் இருக்கிறது. இதன் கழுத்தின் இரு மருங்கிலும் வரிகள் இல்லை. இதன் மயிர்களில் கருப்பும் வெளுப்பும் மாறி மாறி வளையங்களாக இருப்பதால் கீரியின் உடல் சாம்பல் நிறமாகத் தோன்றுகிறது. நன்கு வளர்ந்த கீரி தலையிலிருந்து வால் நுனிவரை 90 செ.மீ. நீளம் இருக்கிறது. இதன் வால் 45 செ.மீ. நீளம் இருக்கிறது.

இது திறந்த வெளிகளிலும் முட் காடுகளிலும் பயிர் நிலங்களிலும் காணப்படுகிறது. இது பாறைகளின் சந்துகளிலும், வளைகளிலும் மரப்பொந்துகளிலும் பதுங்கியிருக்கும். இது கிராமங்களிலும் நகரங்களிலும் சாக்கடை, வீட்டுக் கூரை, இன்னும் மற்றப் பாதுகாப்பான இடங்களிலும் வாழ்வதுண்டு. இதனை வீடுகளில் வளர்ப்பதுண்டு. இது இரவிலும், பகலிலும், தனித்தோ அல்லது இணையுடனோ இரை தேடும். சில சமயங்களில் பெண் கீரி தன் குட்டிகளுடன் இரை தேடித் திரியும். இது எல்லா வகை ஊன்களையும் தின்கிறது.

# 21. வரிக்கழுத்துக் கீரி

## (The Striped Necked Mongoose)

விலங்கியல் பெயர் : ஹெர்பெஸ்டிஸ் விட்டிகோலிஸ் (Herpestes vitticollis)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : ஹெர்பெஸ்டிடே (Herpestidae)

இதனைச் சாரைக்கீரி யென்று தமிழில் கூறுவர். இது தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சி மலையிலும் மற்றக் குன்றுகளிலும் காணப்படுகிறது.

சாரைக்கீரி, மற்ற கீரி இனங்களைக் காட்டிலும் பெரியது. இது சுமார் 90 செ.மீ நீளமும், 3.2 கி.கிராம் எடையும் இருக்கும்.

இதன் கழுத்தில், காதிலிருந்து தோள் வரையில் தெளிவான கருப்பு வரி ஒன்றுள்ளது. இதன் உடலின் முன் பகுதியில் செந்தவிட்டு நிறம் கலந்த நரைமயிர்கள் (Grizzled grey dipped with chestnut-red) உள்ளன. உடலின் பின் பகுதியிலுள்ள மயிர்களின் நுனி அதிகச் சிவப்பாக உள்ளன.



படம் II 21.1. வரிக்கழுத்துக் கீரி

இது பெரும்பாலும் காடுகளில் காணப்படுகிறது. மனிதர்களின் வாழ்விடங்களில் காணப்படுவதில்லை. சில சமயங்களில் இது விளைநிலங்களில் காணப்படுவதுண்டு. இது சிறிய விலங்குகளைப் பிடித்துத் தின்கின்றது.

# 22. கழுதைப் புலி
## (The Striped Hyaena)

விலங்கியல் பெயர் : ஹையேனு ஹையேனு (Hyaena hyaena)
வரிசை : ஊன் உண்ணி (Carnivora)
குடும்பம் : ஹையேனிடே (Hyaenidae)

கழுதைப் புலி நம் நாடு முழுவதும் பரவியிருக்கிறது. இவை அடர்த்தியற்ற முட் காடுகளிலும் மலைப் பகுதி, ஆற்றுப்பகுதி, பள்ளத்தாக்கு போன்ற இடங்களிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. இது அடர்ந்த காடுகளின் உட்பகுதியில் இருப்பதில்லை. பகல் நேரங்களில் பாறைகளின் சந்து, மற்ற விலங்குகள் தோண்டிய வளை அல்லது தானே தோண்டிய வளை ஆகிய இவற்றில் தங்கியிருக்கும்.

ஆண் கழுதைப்புலி சுமார் 150 செ.மீ. நீளமும் 90 செ.மீ, உயரமும் இருக்கும். பொதுவாகக் கழுதைப் புலியின் முதுகில். உடலின் மற்ற பகுதிகளைக் காட்டிலும் நீண்டு அடர்ந்த பிடரி மயிர்கள் (Dorsal crest) உள்ளன. இவைகள் வெளிர் மஞ்சள் நிறத்திலிருந்து பழுப்பு நிறம்வரை பல்வேறு நிறத்தில் உள்ளன. இவற்றின் உடலில் பல குறுக்குப் பட்டைகளும் உள்ளன.

உடல் அமைப்பிலும் வாழ்க்கை முறையிலும் கழுதைப் புலி, ஒரு வினோதமான விலங்கு. இதன் கால்களும் விரல்களும் நாயின் கால், விரல்களைப் போல உள்ளன. மண்டையோட்டின் அமைப்பும் பற்களும் ஃபிலிடே அல்லது பூனைப் பிரிவைச் சேர்ந்த மிருகங்களில் காணப்படுவது போல உள்ளன. இதன் உடல் கனமாக ஆழ்ந்து (Deep body) உள்ளது; காதுகள் நிமிர்ந்து கூர்மையாக உள்ளன. இதன் முன்னங்கால்கள் நீண்டு உறுதியாகவும், பின்னங் கால்கள் குட்டையாகவும் முட்டிக் காலுடன் உள்ளன. முதுகின் பின்பகுதி கீழ்நோக்கிச் சரிந்துள்ளது. இதன் ஒவ்வொரு காலிலும் நான்கு நகங்கள் உள்ளன. இவை கூர் மழுங்கியவை; உள் இழுத்துக்கொள்ள இயலாதவை. பொதுவாக, இதன் உடல் அமைப்பு மற்ற விலங்குகளைத் தாக்கும் வகையிலோ

அல்லது ஓடித்துரத்தி இரையைப் பிடிக்கும் வகையிலோ இல்லை. மற்ற விலங்குகள் பிடித்துக் கொன்ற இரையைத் தின்னும் வகையில் இதன் உடல் அமைந்துள்ளது.

மற்ற விலங்குகள் தின்று கழித்த எலும்பு, தேவையற்ற உடற் பகுதிகள் போன்றவற்றைத் தின்பதால், இது வன விலங்குகளின் "தோட்டியாகக்" (Scavenger) கருதப்படுகிறது. இதன் பற்களும், தாடைகளும் எலும்புகளைத் தின்பதற்கேற்ப உறுதியாக உள்ளன. இது எலும்புகளைத் தின்பதால் இதன் சாணம் எலும்புகள் நிறைந்து வெண்மையாகக் காணப்படுகிறது. இரவு நேரங்களில் உணவைத் தேடித் தின்கின்றது. இரவில் இதற்கு அதிகப்போட்டி யில்லை. பகல் நேரங்களில் மற்ற விலங்குகளோடு கழுகுகளும் இதற்குப் போட்டியாக உள்ளன.



படம் II—22.1. கழுதைப்புலி

இது இரவு நேரங்களில் சுடுகாடுகளில் பிணங்களைத் தேடித் தின்பதாகக் கிராம மக்கள் கூறக் கேட்டிருக்கிறேன். இது எவ்வளவு உண்மையென்று கூற இயலாது. இது பொதுவாக மனிதர்களைத் தாக்குவதில்லை. மத்தியப் பிரதேசத்தில் ஒரு பெண்ணைக் கொன்று, மற்றொரு பெண்ணைத் துன்புறுத்திய ஒரு கழுதைப் புலியைத் தாம் சுட்டுக் கொன்றதாக லெப்டினென்ட் கர்னல் R.W. பர்டன் (Burtan) குறிப்பிடுகிறார். சில கழுதைப் புலிகள் ஆடு, கன்று, நாய் போன்றவற்றைப் பிடித்துத் தின் கின்றன.

இது பல்வகை ஒலிகளை எழுப்பும்; அதில் உரக்கச் சிரிப்பது போல் (Laughing Chatter) ஒலிப்பதும் ஒன்று.

இவைகள் இணையாகக் காணப்படுவதும் உண்டு. இவைகள் குளிர் காலத்தில் கலவியில் ஈடுபடுவதாகவும் கோடைக் காலத்தில் குட்டிகள் போடுவதாகவும் தெரிகிறது. ஒவ்வொரு முறையும் 3 அல்லது 4 குட்டிகள் போடுகின்றன.

# 23. குள்ளநரி
## (Fox)

விலங்கியல் பெயர் : வுல்பெஸ் பெங்கலென்ஸிஸ் (Vulpes bengalensis)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : கேனிடே (Canidae)

குள்ளநரிகள் நாடு முழுவதிலும் பரவியுள்ளன. ஃபாலிடாலும் (Folidol) மற்ற நோய்க் கொல்லிகளும் (Pesticides) கையாளப் படுவதால் குள்ளநரிகள் அழிக்கப்பட்டுவிட்டன. இவற்றிற்கு மெலிந்த சிறிய உடலும், மெலிந்த கால்களும் உள்ளன. இவற்றின் வாலில் அடர்த்தியான மயிர்கள் வளர்ந்து கற்றையாக உள்ளன. வாலின் நுனி கருப்பாக உள்ளது. குள்ளநரிகள் பழுப்பு நிறம் கொண்டவை. வடக்குப் பகுதியிலுள்ள குள்ளநரி களுக்குக் குளிர்காலத்தில் அடர்த்தியாக மயிர்கள் வளர்கின்றன. இவைகள் கோழி, ஆடு, ஆட்டுக்குட்டி, மாட்டுக்கன்றுகள் போன்ற வற்றையே பிடிக்கும். சில சமயங்களில் காடுகளுக்கு அருகில் உள்ள ஊருக்குள் இரவில் நுழைந்து வீடுகளிலுள்ள கோழிகளைக் கூண்டிலிருந்து பிடித்துச் சென்று விடுவதும் உண்டு. இத்தகைய நிகழ்ச்சிகள் எங்கள் ஊரில் பலமுறை நிகழ்ந்திருக்கின்றன. பகல் நேரங்களில் ஆடுகள், ஆட்டுக் குட்டிகள், கன்றுகள் மேயும் இடத் தைச் சுற்றித்திரிந்து அவற்றைப் பிடித்துக் கொன்று விடுகின்றன. இவைகள் இரையின் தொண்டையையே முதலில் பிடித்துக் கடித்து மூச்சை இழக்கச் செய்கின்றன.

குள்ளநரிகள் பொதுவாகத் தனித்தும் அல்லது இணையாகவும் காணப்படுகின்றன. இவைகள் தாங்களே நிலத்தில் வளைகளைத் தோண்டி அதனுள் தங்குகின்றன. ஒரு வளையில் பல கிளை வளை களும் உள்ளன. இவைகள் இரவு நேரங்களில் முன்னிரவில் 'உக்கு' 'உக்கு' 'உக்கு' என்று ஊளையிடும். ஒரு நரி கத்தத் துவங்கியதும் இந்த ஒலியைக் கேட்ட தொலைவிலுள்ள மற்ற நரிகளும் ஊளையிடு கின்றன. இதனைக்கேட்டு வெவ்வேறு இடங்களிலுள்ள நரிகளும் ஒன்றன் பின் ஒன்றாக ஊளையிடத் துவங்கி விடும். இதனால் அவ்

வட்டாரத்தில் உள்ள எல்லா நரிகளும் ஊளையிடும். இரவில் நரிகள் ஊளையிடுவதை எங்கள் கிராமத்து வீட்டிலிருந்து கொண்டு பலமுறை கேட்டு அனுபவித்திருக்கிறேன். இவைகள், நீண்ட நேரம் தொடர்ந்து ஊளையிட்டுக் கொண்டிருக்கும். அதனுல் அப் பகுதியில் நரிகள் ஓலமே ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கும். குள்ள நரிகள் எங்கெங்கிருந்தாலும் ஒரு நரி ஊளையிடுவதைக் கேட்ட வுடன் மற்ற நரிகள் கத்தத் துவங்கிவிடுவதால் 'நரிச்சத்தம் கடலெட்டும்' என்னும் வழக்கு எங்கள் கிராமப் பகுதியில் வழங்கி வருகிறது.



படம் II—23.1. குள்ளநரி

இன்னொரு செய்தியையும் இங்கு கூறுவது சுவையாக இருக்கு மெனக் கருதுகிறேன். நாய்கள், குள்ளநரியைத் துரத்தி விரட்டி னுலும் அதனை அணுகிப் பிடிப்பதில்லை. பலமுறை எங்கள் நாயைத் தனியாக ஏவி விட்டும் அது நரியை முற்றிலும் துரத்தியதில்லை. தனியாகத் துரத்திவரும் நாயைக் கண்டு குள்ளநரி சிறிது தூரம் ஓடும். பின் மனிதர்களிடத்திலிருந்து போதிய தொலைவில் சென்றதும், நாயை எதிர்த்து நின்றுகொள்வதை நான் கண்டிருக் கிறேன். நாம் மேலும் அதனை நோக்கித் துரத்திச் சென்ருல் அது மேற்கொண்டு மெதுவாகவே நடந்து செல்லும். மிக அருகில் நாம் நெருங்கினுலன்றி அது ஓடுவதில்லை. இது மெதுவாக நடந்து செல்லும்பொழுது இதன் வால் கீழ்நோக்கித் தொங்கிக் கொண்டு இருக்கும். ஓடும்பொழுது படுகிடையாக இருக்கும். வேகமாக ஓடித் திரும்பும்பொழுது வால் மேலெழுந்து நிமிர்ந்து நிற்கும்.

நாய் இதனைப் பிடிக்காததற்கு, இது எதிர்த்து நிற்பது மட்டும் காரணமல்ல. சில சமயங்களில் இரண்டு அல்லது மூன்று நாய்கள் ஒரு குள்ளநரியைத் துரத்திச் சென்ருலும், அவைகள் குள்ளநரியை அணுகிப் பிடிப்பதில்லை. நாய்கள் துரத்தும்பொழுது குள்ளநரி ஓடிக்கொண்டே தன் மலப்புழை வாயிலாக மிகத் துர்நாற்றமுள்ள வாயுவொன்றை நாய்கள் வரும் பாதையில் வெளியிட்டுக்கொண்டே செல்வதால்தான், நாய்கள் அதனை அணுகிப் பிடிக்காததற்குக் காரணமென்று கிராம மக்கள் கூறுவதுண்டு. இது எவ்வளவு உண்மை என்று திட்டவட்டமாகக் கூற இயலவில்லை.

# 24. செந்நாய்

## (Wild Dog)

விலங்கியல் பெயர் : குவான் ஆல்பைனஸ் (Cuon alpinus)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : கேனிடே (Canidae)

செந்நாய்கள் நம் நாட்டின் பல பகுதிகளில் காடுகளில் வாழ்கின்றன. இவைகள் புலி, சிறுத்தை ஆகியவைகளைவிடப் பயங்கரமானவை. மான்களின் குறைவிற்குச் செந்நாய்களே காரணம். இந் நாய்கள் பிடித்துக் கொன்ற கடமான், (கடமை) புள்ளிமான் போன்றவைகளை, மாடு மேய்க்கக் காட்டிற்குச் சென்றவர்கள் அவைகளிடமிருந்து பறித்து வந்ததைப் பலமுறை நான் பார்த்து இருக்கிறேன். செந்நாய்கள் கூட்டம் கூட்டமாக வாழ்கின்றன. இவைகள் மோப்பத்தால் இரையை அறிந்து அதனைத் தேடிச் செல்கின்றன. இவைகள் பகலில் வேட்டையாடுகின்றன. இவைகள் மான், பன்றி போன்றவற்றைக் கண்டால் இரண்டு அல்லது மூன்று ஒன்று சேர்ந்து இரையை விரட்டுகின்றன. இந் நாய்கள் ஓடிக் களைத்துவிடின், வேறு இரண்டு அல்லது மூன்று நாய்கள் அவ்விரையைத் தொடர்ந்து விரட்டுகின்றன. இப்படி முறையிட்டு இரையைத் துரத்தி முடிவில் அதனைக் களைப்படையச் செய்து பிடித்துக் கடித்துக் கொன்றுவிடுகின்றன. இவைகள் மனிதர்களையும், வீட்டு விலங்குகளையும் தாக்குவதில்லை. இவைகள் சிறுத்தைகளையும் விரட்டிவிடுகின்றன. சிறுத்தைகள் இவற்றிற்குப்பயந்து மரத்தின் மீது ஏறி தப்பித்துக்கொள்கின்றன. இந்த நாய்கள் சிறுத்தைக்கும் புலிக்கும் போட்டியாக உள்ளன. சில சமயங்களில் புலி, சிறுத்தை, கரடி போன்றவற்றைத் தாக்கி அவற்றைக் கொன்றுவிடுகின்றன. சில பகுதிகளில் புலிகளும் சிறுத்தைகளும் இல்லாமல் போனதற்குக் காரணம், இந்நாய்களின் போட்டியே காரணமாகும். இந் நாய்களால் ஒரு நற்பயனும் உள்ளது. இவைகள் மான்களையும், மற்றத் தாவர உண்ணிகளையும்

துரத்துவதால் அவைகள் பயந்து இடம் விட்டு இடம் சென்று விடுகின்றன. அதனுல் அவைகளின் மேய்ச்சல் இடம் காக்கப் படுகின்றது.

செந்நாய்களின் உடல் நீண்டு மெலிந்துள்ளது; கால்களும் மூஞ்சியும் குட்டையாக உள்ளன. இவற்றின் காதுகளின் நுனி வட்ட வடிவமாகவும் வால் கற்றையாகவும் உள்ளன. பெண் நாயில் 12 அல்லது 14 பால் சுரப்பிக் காம்புகள் (Teats) உள்ளன. நன்கு வளர்ந்துள்ள செந்நாய் அதன் தோள்பட்டைக்கு அருகில் 43–55 செ.மீ. உயரம் இருக்கிறது. ஒரு நாயின் தலையும் உடலும் (Trunk) சேர்ந்து 90 செ.மீ. நீளமும் வால் 40-43 செ.மீ. நீளமும் இருக்கின்றன. ஆண் நாய் 20 கி.கிராம் எடை இருக்கும்.

இவற்றின் உடல் முற்றிலும் சிவப்பு நிறமாகவும், வால் மங்கியக் கருப்பாகவும் அதன் நுனி ஆழ்ந்த கருப்பாகவும் உள்ளன.



படம் II—24.1. செந்நாய்

இவற்றின் சிவப்பு நிறத் தோற்றத்தாலேயே இவைகள் செந் நாய்கள் எனப்படுகின்றது. இந்நிறம் இடத்திற்கு இடம் காலத் திற்குக் காலம் மாறுபடுகிறது. செந்நாய்களில் மூன்று சிற்றினங்கள் (Races) உள்ளன. இமயமலைப் பகுதிகளில் உள்ளவைகள் அடர்ந்த சிவப்பு நிறமாகவும், தீபகற்ப இந்தியாவில் உள்ளவைகள் பழுப்பு நிறமாகவும், இவ்விரு பகுதிகளுக்கும் இடையில் உள்ளவைகள் மங்கியச் சிவப்பு நிறமாகவும் உள்ளன.

நம் நாட்டில் இவைகள் உணவு, நீர், நிழல் மிகுந்துள்ள அடர்ந்த காடுகளில் உள்ளன. வெப்பக் காலங்களில் இவைகள்

வெம்மை தாங்காது நீரை அதிகமாகக் குடிக்கின்றன. மேலும் இவைகள் வெப்பம் தாங்காது நீரினுள் படுத்துக் கொள்கின்றன.

செந்நாய்கள் கூடி வாழ்கின்றன. ஒவ்வொரு கூட்டமும் ஒரு குடும்பத்தைச் சார்ந்தவைகளாகும். சில சமயங்களில் இரண்டு அல்லது மூன்று குடும்பங்கள் ஒன்று சேர்ந்து ஒரே கூட்டமாகக் காணப்படுகின்றன. இவைகள் எல்லா வகைத் தாவர உண்ணிகளையும் இரையாகப் பிடிக்கின்றன. பெரிய கூட்டங்கள் காட்டெருமை, கௌர் போன்றவற்றையும் பிடித்துக் கொன்று விடுகின்றன. காட்டுப் பன்றிகள் இவைகளின் சுவைமிக்க உணவு ஆகும்.

இவைகள் நவம்பர் டிசம்பர் மாதங்களில் கருவுற்று ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் 4-6 குட்டிகள் போடுகின்றன. இவைகள் குகை அல்லது பாறைகளின் இடைவெளிகளில், அல்லது நிலத்தைப் பரித்து வளைகளில் குட்டி போடுகின்றன. குட்டிகள் பெற்றோருடன் நீண்ட நாட்கள் சேர்ந்துள்ளன. கரு தரிக்காத கோடைக் காலங்களிலும், மழைக்காலங்களிலும் பல குடும்பங்கள் ஒன்று சேர்ந்து பெரிய கூட்டமாக வாழ்கின்றன.

# 25. ஓநாய்
## (Wolf)

விலங்கியல் பெயர் : கேனிஸ் லூபஸ் (Canis lupus)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : கேனிடே (Canidae)

ஓநாய்கள் இந்தியாவில் காஷ்மீரில் சில இடங்களிலும், லடாக் (Ladakh)கிலும், தீபகற்ப இந்தியாவில் பரந்த வறண்ட நிலங்களிலும், பாலைவனப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. இவைகள் பொதுவாக மணல் நிறத்தில் கருப்புக் கலந்து இருக்கின்றன. இந் நிறம் இடத்திற்கும் பருவகாலத்திற்கும் ஏற்ப மாறுபடுகிறது.



படம் II—25.1. ஓநாய்

குளிர்ப்பகுதியில் உள்ளவற்றிற்கு நீண்ட கருத்த மயிர்களும், அவற்றிற்குள் பழுப்பு நிற பளபளப்பான மென்மயிர்களும் உள்ளன. ஓநாய்கள் காடுகளில் வாழ்ந்தாலும் பரந்த தரிசு நிலங்களில் பொதுவாகக் காணப்படுகின்றன. காஷ்மீர் பகுதிகளில் உள்ள

ஓநாய்கள் கால்நடைகளுடன் சேர்ந்து குளிர்காலத்தில் பள்ளத் தாக்கின் மேற்பகுதிகளுக்கும் செல்கின்றன. குளிர் காலத்தில் இவைகள் குகைகள், மலையிடுக்குகள், வளைகள் ஆகியவற்றில் தங்கு கின்றன. பாலைவனங்களில் உள்ள ஓநாய்கள் மணல் மேடுகளில் (Sand Dunes) வளைகள் தோண்டி அவற்றினுள் வெப்பம் தாக்காது தங்குகின்றன. அடர்ந்த காடுகளில் வாழ்பவைகள், திறந்த நிலங்களிலும் நிழலிலும் தங்குகின்றன. இவைகள் பகலிலும், இரவிலும் எல்லாவகை விலங்குகளையும் வேட்டையாடுகின்றன. இவைகள் கால்நடைகளையும் பிடித்துத் தின்கின்றன. இரை கிடைக்காதபோது இவைகள் குழந்தைகளையும் பிடித்துத் தின் கின்றன. இவைகள் மழைக் காலத்திற்குப் பின் டிசம்பர் மாதத்தில் ஒரு தவணையில் 3-12 குட்டிகள் போடுகின்றன.

# 26. நீர் நாய்

## (The common otter)

விலங்கியல் பெயர் : லூட்ரா லூட்ரா (Lutra lutra)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : மஸ்டெலிடே (Mustelidae)

நீர் நாய்கள் காஷ்மீர், இமயமலைப் பகுதிகள், தென்னிந்தியா ஆகிய பகுதிகளில் காணப்படுகின்றன. இந்தியாவில் வேறு இடங்களில் காணப்படுவதில்லை. இவைகள் ஆறுகளிலும், மற்ற நீர் நிலைகளிலும் கூட்டம் கூட்டமாகக் கீச், கீச் என்று கத்திக்கொண்டு நீரில் நீந்தி, மூழ்கித் திரிவதும், திறமையாக மீன் பிடித்துத் தின்பதும் பார்ப்பதற்கு மிக இனிய காட்சியாகும்.



படம் II—26.1. நீர் நாய்

நீர்நாயின் உடல் நீண்டு, எளிதில் நெளிந்து வளையும் வகையிலும், நீரில் விரைவாக மூழ்கி நீந்தும் வகையிலும் அமைந்து உள்ளது. இதன் தலையும் உடலும் சேர்ந்து 60-80 செ.மீ. நீளமும் வால் சுமார் 45 செ.மீ. நீளமும் உள்ளது. உடலின் மீது சொர சொரப்பான மயிர்கள் உள்ளன. இம் மயிர்கள் மங்கிய பளபளப்பாக உள்ளன. இதன் அடர்ந்த வெளி மயிர்களும் உள் மயிர்களும் உடலில் நீர் படியாதபடி காக்கின்றன. இதன் வால் தடித்

துள்ளது; பின்னங்கால்கள் முன்னங்கால்களைக் காட்டிலும் சற்றுப் பெரியனவாக உள்ளன. இக் கால்கள் துடுப்பு போன்று நீரில் நீந்துவதற்கு உதவுகின்றன. நீரினுள் மூழ்கியிருக்கும்போது காதுகளினுள்ளும், மூக்கினுள்ளும் நீர் செல்லாத வகையில், காதுகள் மிகச் சிறியனவைகளாகவும், மூக்குத் துவாரங்கள் வால்வுகளால் மூடப்பட்டும் உள்ளன. முகத்தின் நுனியில் உள்ள தடித்த நீண்ட உணர் மயிர்கள்! இவைகள் நீரினுள் இருக்கும் பொழுதும் வளையாமல் நிமிர்ந்துள்ளன. நீரில் மீன்களைக் கண்டு துரத்திச் சென்று அவற்றைப் பிடிக்கும் வகையில் அதற்குக் கூரிய பார்வையுள்ளது.

இவைகள் மலையருவிகளிலும், ஏரிகளிலும் காணப்படுகின்றன. கரைகளின் அருகில் உள்ள பாறைச் சந்துகளிலும், மரவேர்களின் சந்துகளிலும், நாணல் புதர்களிலும் தங்குகின்றன. இவைகள் தங்கும் இடங்களில் மீன் எலும்புகளும், செதில்களும் இரைந்து கிடப்பதைக் காணலாம்.

இமயமலைப் பகுதிகளிலும், காஷ்மீரிலும் காணப்படும் நீர் நாய்கள், கோடைக் காலங்களில் மேல் மட்டங்களுக்குச் செல்லும் மீன்களைப் பின்தொடர்ந்து செல்கின்றன. மீன்கள் இவற்றின் முக்கிய உணவாகும். இவைகள் மீனைப் பிடிக்கும்பொழுது, பல அரை வட்டமாக ஒன்று சேர்ந்து மீன்களைத் துரத்தி ஒவ்வொன் றாகப் பிடித்துக்கொள்கின்றன. இவைகள் மீன்களையன்றி தவளை, எலி, நீர்ப்பறவைகள் போன்ற அனைத்தையும் பிடித்துத் தின் கின்றன. இவைகள் பொதுவாக இரவில் உணவு தேடிச் சென் றாலும் மனித சந்தடியற்ற இடங்களில் பகல் நேரங்களில் வெளி வருகின்றன. இவைகளை எளிதில் வளர்க்க முடிகிறது.

# 27. தேனுண்ணும் கரடி
## (Sloth bear)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | மெல்யூரஸ் உர்ஸினஸ் (Melurus ursinus) |
| வரிசை | : | ஊன் உண்ணிகள் (Carnivora) |
| குடும்பம் | : | உர்ஸிடே (Ursidae) |

தேனுண்ணும் கரடி நம் நாட்டில் இமயம் முதல் குமரி வரையி லுள்ள காடுகளில் உள்ளது. மற்ற இனக் கரடிகளைக் காட்டிலும் இதன் உடல் கட்டற்று இருக்கிறது. இதன் முகமும், கீழ் உதடும் நீண்டுள்ளன. இதன் உடலில் உள்ள மயிர்கள் தூய்மையும், ஒழுங்கும் அற்று உள்ளன (Unkempt). இதன் கால்கள் குட்டை யாக உள்ளன. இதன் மார்பில் 'V' வடிவில் வெள்ளை நிறக் குறி



படம் II—27.1. தேனுண்ணும் கரடி

இருக்கிறது. இதன் முக நுனியும், கால் நுனிகளும், மங்கலான வெண்மையாகவோ அல்லது மஞ்சள் நிறமாகவோ இருக்கின்றன. இதன் உடலைப் போர்த்துள்ள மயிர்கள் பொதுவாக வெளிர் பழுப்பு நிறத்தில் உள்ளன. சில சமயங்களில் நல்ல பழுப்பு

நிறமாகவும் இருக்கின்றன. கரடி அதன் தோளுக்கருகில் 65-85 செ.மீ. உயரமும், 140-170 செ.மீ. நீளமும் இருக்கிறது. ஆண், பெண்ணைக் காட்டிலும் பெரியது. இது 127-145 கி. கிராம் எடையிருக்கும். பெண் கரடி 64 கி, கிராம் எடைக்கு மேல் இருக்கிறது.



படம் II—27.2. தேனுண்ணும் கரடி

இது உணவு மிகுதியாகக் கிடைக்கும் காடுகளில் காணப்படுகிறது. பாறைகளும், பெரிய கற்களும் நீண்டுள்ள இடங்கள் மழைக்கும், வெயிலுக்கும் பாதுகாப்பாக உள்ளதால் அவைகளைத் தேர்ந்தெடுத்துக்கொள்கிறது. சூரியன் மறையுமுன் வெளிக் கிளம்பி, உணவு தேடி இரவு முழுவதும் திரிந்து, விடிந்ததும் தன் இடத்திற்குத் திரும்பித் தங்கி விடுகிறது. குளிர்ந்த பகற்பொழுதில்

இது வெளி வருவதுண்டு. மனிதச் சந்தடியற்ற இடங்களில் இது பகலிலும் திரியும். இது பழங்களையும், பூச்சிகளையும் உணவாகக் கொள்கிறது. தன் தேவைக்கேற்ற அளவு உணவு பெறுவதற்காக, இது மிக்கச் சிரமப்பட்டு அலைந்து தேடுகிறது. பருவக் காலத்தில் கிடைக்கும் உணவு வகைக்குத் தக்கவாறு, தன் உணவுப் பழக் கத்தை மாற்றிக் கொள்கிறது. வெயிற்காலங்களில் கிடைக்கும் பழங்களையும், தேனையும் விரும்பித் தின்கிறது. மரங்களில் ஏறிக் கிளைகளை அசைத்து, பழங்களைக் கீழே உதிரச்செய்து தின்கிறது. இதே போலத் தேன் அடையைக் கீழே விழச்செய்து, எடுத்துத் தின்கிறது. மழைக் காலங்களில் பூச்சிகள் அதிகம் கிடைப்பதால், மரக் கட்டைகளுக்கு அடியிலும், மரச் சந்துகளிலும், மரப்பட்டை களினுள்ளும், கற்களுக்கு அடியிலும் தேடி, அவற்றைப் பிடித்துத் தின்கிறது. இது பெரும்பாலும் கரையானை உணவாகக் கொள் கிறது. இதற்கு நுகர்ச்சித் திறன் அதிகமாயிருப்பதால் தனக்கு வேண்டிய உணவை எளிதில் கண்டுகொள்கிறது. கரையான்களைப் பிடிப்பதற்காக இது புற்றுக்களைத் தோண்டும்.

கோடைக் காலத்தில் இது இணை சேர்கிறது. ஏழு மாதங் களுக்குப்பின், டிசம்பர், ஜனவரி மாதங்களில் குட்டி போடுகிறது. குட்டிகளை முதுகில் சுமந்து கொண்டு உணவைத்தேடிச் செல்லும். தாய் முரட்டுக்குணம் படைத்ததால் திடீரெனத் தாக்கும். குட்டிகள் 2-3 ஆண்டுகள் தாயுடன் சேர்ந்துவாழ்கின்றன.

# 28. இமயக் கருப்புக்கரடி
## (The Himalayan Black Bear)

விலங்கியல் பெயர் : ஸெலினார்க்டோஸ் திபெடானஸ் (Selenarctos thibetanus)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : உர்ஸிடே (Ursidae)

இமயக் கருப்புக் கரடி நம்நாட்டில் காஷ்மீர், இமயமலைப் பகுதி, அஸ்ஸாம் ஆகிய இடங்களில் இருக்கிறது. இதற்குக் குட்டையான மயிர்களும், கருப்பு நகங்களும் இருப்பதால் இதனைத் தேனுண்ணும் கரடியிலிருந்து எளிதில் அடையாளம் கண்டு கொள்ளலாம். இதன் உடல் கட்டாக (Compact) உள்ளது. இது பொதுவாகக் கருப்பாக இருக்கிறது. இதன் முகம் பழுப்பு நிறத்திலும், தாடை வெள்ளை அல்லது அழுக்கு நிறத்திலும் உள்ளன.



படம் II—28,1. இமயக் கருப்புக்கரடி

இதன் மார்பில் வெள்ளை அல்லது மஞ்சள் அல்லது மாசு படிந்த வெள்ளை நிறத்தில் 'V' போன்ற குறியிருப்பது குறிப்பிடத்தக்கது. அஸ்ஸாம் பகுதியில் உள்ள கரடிகளின் மயிர்கள் குட்டையாகவும்,

அடர்த்தி இல்லாமலும் உள்ளன. இவற்றிற்கு அடியில் மென் மயிர்கள் (கம்பளம்-Wolly hairs) பொதுவாக இருப்பதில்லை; இருப் பின் மிகக் குறைவாகவே உள்ளன. மேற்கு இமயமலைப் பகுதியில் உள்ள கரடிகளுக்கு இக் கம்பளம் நன்கு வளர்ந்துள்ளது.

ஆண் கரடி சுமார் 140-165 செ.மீ. நீளமும்; 180 கி. கிராம் எடையும் இருக்கிறது.

இமயமலைக் கருப்புக் கரடி செங்குத்தாக உள்ள மலைக்காடு களில் காணப்படுகிறது. கோடையில் இமயமலையில் 3050-3660 மீட்டர் உயரப் பகுதிகளில் இருக்கிறது. குளிர்காலத்தில் பெரும் பான்மையான கரடிகள் கீழ்ப் பள்ளத்தாக்குகளுக்குச் சுமார் 1525 மீட்டர் உயரம் வரையும், அதற்குக் கீழும் வருகின்றன. அஸ்ஸாம் மலைக்காடுகளில் அவை இன்னும் கீழ்ப் பகுதிகளில் வாழ்கின்றன. இமயமலைக் கரடி பகலில் பாறைக் குகையிலும், மரப்பொந்திலும் தங்குகிறது. இது பகலிலும் வெளியில் திரிவதுண்டு. காஷ்மீர் மாநிலத்திலுள்ள டாசிகம் புகலரணில் (Dachigam Sanctuary) இது பகல் வேளைகளிலும் திரிந்ததைக் கண்டுள்ளனர்.

இதன் உணவு, பருவக் காலத்திற்கு ஏற்ப மாறுகிறது. கோடைக் காலத்தில் காய், கனிகளைத் தின்கிறது. இது மரத்தில் திறமையாக ஏறும். மரத்திலேயே உணவைப் பறித்துத் தின்னும். இப்பருவத்தில் தேனும் கிடைப்பதால், மரப் பொந்துகளிலுள்ள தேன் அடையை (Honey Comb) சிரமப்பட்டுச் சேகரித்துத் தின்கிறது. இது விளை நிலங்களுக்குச் சென்று, தானியங்களையும் தின்பதுண்டு. பூச்சிகள், அதன் இளம்உயிர்கள் (Larvae) போன்றவைகளும் இதன் உணவாகும். இது மற்ற இனக் கரடி களைக் காட்டிலும், தீவிரமான ஊன்உண்ணி. இது, கால் நடைகள் போன்றவற்றைக் கொன்று தின்றுவிடுகிறது. இது மனிதர்களைத் தாக்கித் துன்புறுத்துவதும் கொன்று விடுவதுமுண்டு.

இது இலையுதிர் காலத்தில் (Autumn) இணை சேர்கிறது. குளிர் காலத்தின் பிற்பகுதியிலும், வசந்த காலத்தின் முற்பகுதியிலும், குட்டிகள் பிறக்கின்றன. இது பாதுகாப்பான புதர், குகை அல்லது மரப்பொந்தில் குட்டி போடுகிறது. ஒரு முறையில் இரண்டு அல்லது அதற்கு மேலும் குட்டிகள் பிறக்கின்றன. குட்டிகள் ஒரு ஆண்டும், அதற்கு மேலும் தாயுடன் சேர்ந்துள்ளன. இதனால் ஒரு கூட்டத்தில் நான்கும் அதற்கு அதிகமாகவும் இருப்பதைக் காணலாம். சில சமயங்களில் அடுத்தடுத்துப் பிறந்த இரு ஈத்துக் குட்டிகளும் சேர்ந்து தாயுடன் இருக்கின்றன.

# 29. பழுப்புக்கரடி

## (The Brown Bear)

விலங்கியல் பெயர் : உர்சஸ் ஆர்க்டோஸ் (Ursus arctos)
வரிசை : ஊன் உண்ணிகள் (Carnivora)
குடும்பம் : உர்ஸிடே (Ursidae)

இது வடமேற்கு இமயமலைப் பகுதியிலும் மத்திய இமயமலைப் பகுதிகளிலும் உள்ளது. இதன் தடித்த உருவத்தாலும், பழுப்பு நிறத்தாலும் இதனை, இமயக் கருப்புக் கரடியிலிருந்து எளிதில் பிரித்துணரலாம். இதன் பழுப்பு நிறம் பருவக் காலத்திற்கேற்ப ஆழ்ந்த பழுப்பு நிறத்திலிருந்து வெளிர் பழுப்பு நிறம்வரை மாறக்



படம் II.—29·1. பழுப்புக்கரடி

கூடியது. இதன் மயிர்களின் நுனி வெண்ணிறமாக இருப்பதால், உடல் பளபளப்பாகத் தோன்றுகிறது. குளிர்காலத்தில் முதிர்ச்சி யடைந்த மயிர்கள் செம் பழுப்பு நிறமாகவும், கோடையில் புதிதாக வளர்ந்தவைகள் ஆழ்ந்த பழுப்பு நிறமாகவும் உள்ளன.

குளிர்காலத்தில் இம் மயிர்களுக்கிடையில் மென்மையான மயிர்கள் அடர்த்தியாக வளர்ந்துள்ளன. சாதாரணமாக ஒரு ஆண் கரடி 170 செ.மீ. நீளம் இருக்கும்.

இக்கரடி மரங்களற்ற பனிபடர்ந்த பகுதியில் வாழ்கிறது. குளிர்காலத்தில் இது ஆழ்ந்த உறக்கத்தில் ஈடுபட்டுவிடுகிறது. வசந்த காலத்தில் (Spring Season) எழுந்து புற்களை மேய்கிறது. பெரும்பாலும் கற்களைப்புரட்டி அவற்றினடியில் உள்ள பூச்சிகளைப் பிடித்துத் தின்கிறது. நிலத்திற்கடியிலுள்ள வோல் (Vole), மர்மூட் (Marmot) போன்றவற்றைத் தோண்டிப் பிடித்துத் தின்கிறது. அதிக உணவு கிடைக்காத காலங்களில் இறந்த விலங்குகளின் உடலையும் இது உணவாகக் கொள்கிறது. கோடைக் காலங்களில் மேயவரும் செம்மறியாடு, வெள்ளாடு போன்றவற்றை உணவிற்காக வேட்டையாடுகிறது. பழுப்பு நிறக் கரடியால் அதிகப்படியான கால்நடைகள் கொல்லப்படுகின்றன. இது மனிதர்களைக்கண்டு பயந்து விலகிச் சென்றுவிடுகிறது. இது மனிதர்களைத் தாக்கிக் கொல்லுவதில்லை. பழங்கள் உள்ள பருவத்தில், இது பழங்களை உணவாகக் கொள்கிறது. இது மரத்தில் ஏறுவதில்லை; நிலத்திலுள்ள பழங்களையே தின்கிறது. நிலத்தைப் பறித்துப் புல், வேர், கிழங்கு போன்றவற்றைத் தின்கிறது. குளிர்காலத்தில் பனிபெய்து நிலத்தை மூடிக்கொள்வதால், இதற்குப் போதிய உணவு கிடைப்பதில்லை. இச் சமயத்தில் பாறைகளுக்கு அடியில் அல்லது குகையில் அல்லது தானே தோண்டிய வளையில் பாதுகாப்பாகப் படுத்துத் தூங்குகிறது. இந்தச் சமயத்தில் பெண்கரடி தன் குட்டிகளுடன் இருக்கிறது.

# 30. காட்டுக்கழுதை
## (Wild Ass)

விலங்கியல் பெயர் : இக்வஸ் ஹெமிஓனஸ் (Equus hemionus)
வரிசை : பெரிஸோடேக்டிலா (Perissodactyla)
குடும்பம் : இக்விடே (Equidae)

காட்டுக் கழுதைகள் இன்று இந்தியாவில்தான் உள்ளன. இவைகள் வடமேற்கு இந்தியாவில் கத்தியவார் தீபகற்பத்தில் உள்ள சிறிய ராண் பகுதியில் (Little Rann of Kutch) காணப்படுகின்றன. இப்பகுதி சுமார் 1000 சதுர மைல் பரப்புள்ளது. இப் பகுதி பருவக் காலத்திற்கேற்ப அடிக்கடி மாறுதலடைகிறது.



படம் II—30.1. காட்டுக்கழுதை

மழைக் காலங்களில் இதில் மழை நீரும் கடல் நீரும் சுமார் 30-60 செ.மீ. ஆழம் நிற்கிறது. வறட்சிக் காலமான நவம்பர் முதல் ஜனவரிவரை இப் பகுதி வரண்டுவிடுகிறது. இதில் ஆங்காங்கே

இளகிய மண் பகுதிகள் உள்ளன. கத்தியவார் சிறிய ராண் பகுதியிலுள்ள பல கரடுகள் (குன்றுகள்) மழைக் காலத்தில் நீரினுள் மூழ்கிச் சிறு சிறு தீவுகள்போல் தோன்றுகின்றன. இத் தீவுகள் பெட்ஸ் (Bets) எனப்படும். இத் தீவுகளிலும் கடற்கரை ஓரங்களிலும் காட்டுக்கழுதைகள் உள்ளன. காட்டுக்கழுதைகள் வடமேற்கு இந்தியா, பாகிஸ்தான், தென்கிழக்குப் பெர்ஸியா போன்ற பகுதிகளில் பரவியிருந்தன. ஆனால் இன்று அவைகள் பெர்ஸியாவில் இருப்பதாகத் தெரியவில்லை. ஒரு சில மேற்குப் பாகிஸ்தானில் திரிந்துகொண்டுள்ளன. இன்று வடமேற்கு இந்தியாவில் கத்தியவார், சிறிய ராண் பகுதியில் மட்டுமே உள்ளன.

மார்ச் மாதத்தில் புற்களும் நீரும் காய்ந்து விடுகின்றன. இக் காட்டுக் கழுதைகள் நீரையும் உணவையும் தேடி அலைந்து அவைகள் உள்ள இடங்களில் ஒன்று சேர்கின்றன. இச்சமயத்தில் ஆண்கழுதைகள் தனித்தோ, இரண்டு அல்லது மூன்று சேர்ந்தோ திரிகின்றன. இவைகள் இரவில் மேய்கின்றன ; பகலில் வரண்ட பகுதிகளில் தனித்தோ அல்லது 10-30 வரை சேர்ந்தோ கூட்டமாகத் திரிகின்றன.

காட்டுக் கழுதைகளின் இனப்பெருக்கப் பழக்க வழக்கங்களைப் பற்றி டாக்டர் சலீம் அலி (Dr. Salim Ali) அவர்கள் கூறுவதை ஈண்டுக் காண்போம். காட்டுக் கழுதைகள் ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் கலவியில் ஈடுப்டுகின்றன. கலவியில் ஈடுபடும் பெண் கழுதை தன் கூட்டத்தைவிட்டுப் பிரிந்து ஒரு ஆண் கழுதையுடன் சென்றுவிடும். வேறு ஆண் கழுதைகள் அப்பெண் கழுதையை அடைய முடியாதவாறு ஆண் கழுதை சண்டையிட்டு விரட்டிவிடும். இவைகள் ஒன்றையொன்று பின்னங்கால்களில் உதைத்தும் வாயால் கடித்தும் சண்டையிடுகின்றன. சில நாட்களுக்குள் பிரிந்த பெண்கழுதை தன் கூட்டத்துடன் சேர்ந்து கொள்கிறது. அதன்பின் வேறு ஆண் கழுதைகள் தன்னை அணுகுவதைப் பெண் கழுதை அனுமதிப்பதில்லை. கர்ப்ப காலம் 11 மாதம் நீடித்து, ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் ஒரு குட்டி ஈனுகிறது.

நன்கு வளர்ந்த காட்டுக் கழுதை அதன் தோளுக்கருகில் சுமார் 110-120 செ.மீ. உயரம் இருக்கிறது, இது அழகும் வனப்பும் மிக்கது. நாட்டுக் கழுதை சுமார் 98 செ.மீ. உயரம் இருக்கிறது. காட்டுக் கழுதை நல்ல மணல் நிறத்தில் இருக்கிறது. பிடரி மயிர்கள் நிமிர்ந்து கருத்த பழுப்பு நிறத்தில் உள்ளன. இதன் முதுகில் கரும்பழுப்பு நிறப் பட்டையொன்று வால்வரை செல்கிறது. இதன் வயிற்றுப்பகுதி வெண்மையாக இருக்கிறது. காட்டுக் கழுதைகள் நாட்டுக் கழுதைகளுடன் சேர்ந்து இனப் பெருக்கம் செய்வதில்லை.

# 31. ரைனோசிரஸ்
(Rhinoceros)

## காண்டாமிருகம்

விலங்கியல் பெயர் : ரைனோசிரஸ் யுனிகார்னிஸ் (Rhinoceros Unicornis)
வரிசை : பெரிஸோடேக்டிலா (Perissodactyla)
குடும்பம் : ரைனோஸெரோடிடே (Rhinocerotidae)

சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன் சிந்துநதிச் சமவெளி முழுவதும் திரிந்துகொண்டிருந்த ரைனோசிரஸ், இன்று நம் நாட்டில் அஸ்ஸாம் மாநிலத்தில் மட்டுமே உள்ள நிலையை அடைந்திருக்கிறது. இந்திய ரைனோசிரஸ் புல்வெளிப் பிரதேசத்தில் வாழ்வது. காடுகளிலுள்ள மரங்கள் வெட்டப்பட்டதாலும், புல்வெளிகளில் கால்நடைகள் மேய்க்கப்பட்டதாலும் சூழ்நிலை மாற, ரைனோக்கள் வெகுவாகக் குறைந்துவிட்டன. இதே நிலையைத்தான் ஆப்பிரிக்காவிலும், மத்தியக் கிழக்கு நாடுகளிலும் உள்ள ரைனோக்கள் அடைந்துள்ளன. 16-ம் நூற்றாண்டில் இந்தியாவின் மேற்குப் பகுதியிலும் இவைகள் பரவியிருந்தன. மொகலாய அரசர் பாபர் ரைனோவை வேட்டையாடியதாகச் சான்றுகள் உள்ளன. காம்பேயின் அரசர் போர்ச்சுகல் அரசருக்கு ஒரு இந்திய ரைனோவைக் கோவாத் துறைமுகத்திலிருந்து கப்பலில் அனுப்பியதாக அறிகிறோம்.

இரு நாடுகளுக்கிடையில் நல்லுறவை ஏற்படுத்தும் சிறந்த தூதுவராக விலங்குகள் உள்ளன. சில ஆண்டுகளுக்குமுன் நமது காலஞ்சென்ற பாரதப் பிரதமர் நேரு அவர்கள் ஜப்பான் நாட்டுக் குழந்தைகளின் மகிழ்ச்சிக்காக ஒரு யானைக் குட்டியை அனுப்பி வைத்ததை நாம் அறிவோம். விலங்குகளுக்கு நாடு, மதம், மொழி போன்ற வேறுபாடுகள் கிடையா. இவற்றை எல்லா நாட்டு மக்களும் கண்டு களிப்புறுகின்றனர். ஒரு நாட்டின் அரிய

விலங்குகளைப் பல நாடுகளுக்கு அனுப்பிவைத்து நல்லுறவை ஏற்படுத்துவதால், நாடுகளுக்கு இடையில் ஏற்படும் போட்டியும், பொறாமையும் குறைய நல்ல வாய்ப்பிருக்கிறது.

ரைனோக்களைப் பலவாறாகக் கொன்றதாலும், பிடித்ததாலும், மற்றும் அவற்றின் வாழ்விடங்கள் அழிக்கப்பட்டதாலும் இந்தியாவின் மேற்குப் பகுதியிலும், கங்கைச் சமவெளியிலும் அவைகள் மறைந்துவிட்டன. 1960-ல் இவை அஸ்ஸாம், வடக்கு வங்காளம். வடக்கு பீகார், தென் நேபாளம் ஆகிய பகுதிகளில்மட்டும்



படம் II—31·1.
பெரிய இந்திய ஒற்றைக்கொம்பு ரைனோசிரஸ் (காண்டாமிருகம்)

காணப்பட்டன. அஸ்ஸாம் மாநிலத்தில் பிரமபுத்திரா பள்ளத் தாக்கில் அடர்ந்த காடுகளும், புல் வெளிகளும் இருந்தன. ஆனால் தேயிலைத் தோட்டங்கள், இருப்புப் பாதைகள், மக்கள் குடியேற்றம், மேய்ச்சல் நிலம் போன்றவைகளுக்காக இப் பகுதிகளிலிருந்த காடுகள் அழிக்கப்படவே, இங்கு வாழ்ந்த வனவிலங்குகளின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்தன. மனிதர்கள் வேட்டையாடியதால் ரைனோக்களின் எண்ணிக்கை மேலும் குறைந்தது.

ரைனோக்களைக் கொன்றதற்குக் காரணம் அவற்றின் கொம்பின் மீதுள்ள அலாதி மோகம்தான். ரைனோவின் கொம்பால் செய்யப்

பட்ட கோப்பையில் பானம் அருந்துவது உடல்நலத்திற்கு நல்லது என்ற கருத்து நிலவி வருகிறது. விஷம் கலக்கப்பட்ட பானம், ரைனோவின் கொம்பால் செய்யப்பட்ட கோப்பையில் இருந்தால் அதன் நச்சுத்தன்மை நீங்கிவிடும் என்று நம்பப்பட்டது. மேலும் அக் கோப்பையில் பானம் அருந்தினால் வாலிபம் திரும்பும், பால் உணர்வு நன்கு தூண்டப்படும் (Aphrodisiacal) என்ற தவறான கருத்துக்களாலும் ரைனோக்கள் கொல்லப்பட்டன. உடல் நலனுக்குத் தேவையான எவ்விதப் பொருளும் ரைனோவின் கொம்பில் இல்லையென இன்று அறிவியல் முறையில் ஆய்ந்து நிரூபிக்கப்பட்டுள்ளது.

இத்தகைய சிறப்பு மிக்க ரைனோவின் கொம்பைப் பற்றி அறிந்துகொள்வதில் ஆர்வம் இருக்குமல்லவா? மான், எருது போன்றவற்றின் கொம்புகள், அவற்றின் மண்டை எலும்பில் இருந்து தோன்றியவை. ரைனோவில், மயிர்கள் ஒன்று சேர்ந்து இணைந்து தடித்தக் கொம்பாக உள்ளன. இது, கெரடின் (Keratin) என்ற பொருளால் ஆனது. ரைனோவின் கொம்பு அதன் மண்டை எலும்புடன் இணைந்தில்லை. இது புறத்தோலிலிருந்து தோன்றிய தால் தசையில் பதிந்துள்ளது. பலமாகத்தட்டி இதைப் பெயர்த்து எடுத்து விடலாம். (புகைப்படம் II-31.2) கொம்பு நீக்கப்பட்ட இடத்திலிருந்து இரத்தம் கொட்டும். கொம்பு நீக்கப்பட்ட இடத்தில் ஒரு வருடத்திற்குள் புதிய கொம்பு ஒன்று முளைத்து விடுகிறது. இந்தியப் பெண் ரைனோவுக்கும் கொம்பு உள்ளது. இதனால், ரைனோக்களின் புறத்தோற்றத்திலிருந்து அவற்றின் பால் வேறுபாட்டைக் கண்டறிய இயலாது.

ரைனோவின் கொம்பைப்பற்றி வினோதமான நம்பிக்கைகள் கிழக்கு ஆசியாப் பகுதியில் நிலவுகிறது. அதன்படி, ரைனோவின் கொம்பை மகப்பேறு காலத்தில் பெண்ணின் படுக்கைக்கடியில் வைத்தால், மகப்பேறு எளிதாக நிகழ்வதாகக் கருதப்படுகிறது. இக் கொம்பு உள்ளவர்கள் அதனை நல்ல வாடகைக்குக் கொடுப்ப தாகவும் தெரிகிறது. மேலும் ரைனோக் கொம்பு ஊற வைத்த நீரைத் தினமும் ஒரு கரண்டி குடித்தால் முதுமை நீங்கி, வாலிபம் திரும்பும் என்ற கருத்தும் நிலவுகிறது.

இந்திய ரைனோவின் மிகப் பெரிய கொம்பு 24 அங்குல நீளம் உள்ளது. இக் கொம்பு பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலையில் (Museum) இருக்கிறது. இந்திய ரைனோ ஒற்றைக் கொம்புடைய தால் இது ஒற்றைக்கொம்பு ரைனோசரஸ் எனப்படுகிறது. கஜிரங் காக் காட்டில் இருந்த ஒற்றைக்கொம்பு ரைனோக்கள் பெருமளவில்

வேட்டையாடப்பட்டதால், 1908ல் சுமார் 12 ரைனோக்களே இருந்தன. அவற்றைப் பாதுகாக்கப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு, கஜிரங்காக் காடு, ரைனோக்களின் புகலரணாக ஆக்கப்பட்டுள்ளது.



படம் II—31.2
பெரிய இந்திய ஒற்றைக்கொம்பு காண்டாமிருகம். இதில் கொம்பு இல்லை

ரைனோவிற்கு நிலையான மன நிலையில்லை. இது மிக முரட்டுத் தன்மை உடையது. இது திடீரென்று மற்ற விலங்குகளையும், மனிதர்களையும் தாக்கும். குட்டியுடன் உள்ள பெண் ரைனோ அதிகக் கோபம் உடையது. யானைகளும் இதன் தாக்குதலுக்கு அஞ்சி ஓடிவிடுவதுண்டு. நன்கு பழக்கப்பட்ட வலுவுள்ள யானை எதிர்த்து நிற்கும்பொழுது, ரைனோ அதனை அணுகித் தாக்குவது இல்லை. ரைனோ யானையின் அருகில் நெருங்கியதும் திடீரென்று நின்று வேகமாகத் திரும்பி உறுமிக்கொண்டு ஓடிவிடுகிறது. இது மனிதர்களையோ அல்லது மற்ற விலங்குகளையோ முட்டும்பொழுது கொம்பினால் கொத்திக் கிழிப்பதில்லை. இது தன் கீழ்த் தாடையிலுள்ள பெரிய உளிப்பற்களை மேல்நோக்கிச் செலுத்திக் காயத்தை உண்டாக்குகிறது. ரைனோ சில சமயங்களில் தன் கொம்பை மரங்களிலும் நிலத்திலும் தேய்ப்பதுண்டு. இது தன் கொம்பை கூர்மைப்படுத்துவதற்காகத் தேய்ப்பதில்லை. கொம்பிலுள்ள

ஒட்டுண்ணிகளைப் போக்கவே கொம்பை மண்ணில் தேய்க்கிறது. ரைனோவின் உடலின் மீதுள்ள ஒட்டுண்ணிகளைப் பிடித்துத்தின்னப் பல பறவைகள் அதன் உடல் மீது உட்கார்ந்திருப்பதைக் காண லாம்.

ரைனோவின் தோல் தடித்து அகன்று தகடுகள் போன்று பெரிய மடிப்புக்களுடன் இருக்கிறது. இந்திய ஒற்றைக் கொம்பு பெரிய ரைனோவில் இம்மடிப்புக்கள் தோளின் முன்னும் பின்னும், தொடைகளின் முன்னும் உள்ளன. தோளுக்கு முன்னுள்ள மடிப்பு முதுகு வரை செல்வதில்லை. இது இந்திய ஒற்றைக் கொம்பு பெரிய ரைனோக்களில் மட்டும் காணப்படும் தனித் தன்மையாகும். தோலின் மடிப்புக்களிலுள்ள ஒட்டுண்ணிகளைப் போக்க ரைனோ சேற்றில் படுத்துப் புரண்டு தன் உடல் முழுவதிலும் சேற்றைப் பூசிக்கொள்ளும். ரைனோவின் தோலும், யானையின் தோலும் தடித்திருப்பதால் இவ்விரு விலங்குகளின் வேறுபாட்டை உணராது முன்பு ''தடித்த தோலிகள்"-பேசி டெர்மி (Pachy dermy) என்று வகைப்படுத்தினர். ரைனோக்களில் மூன்று விரல்கள் உள்ளன. யானைகளின் விரல்கள் வெளியில் தெரியாதபடி காலினுள் மறைக்கப்பட்டுள்ளன. யானையின் விரல்களின் எண்ணிக்கைக்கும் வெளியில் தெரியும் நகங்களின் எண்ணிக்கைக்கும் தொடர்பு கிடையாது. மற்ற வேறுபாடுகளும், யானையும் ரைனோவும் வெவ்வேறு வரிசைகளைச் (Orders) சேர்ந்தவைகள் என்பதை நன்கு புலப்படுத்துகின்றன.

யானையும், புலியும் ரைனோவைக்கண்டு அஞ்சுகின்றன. குட்டி ரைனோவைப் புலி பிடித்துக்கொள்வதுண்டு. ஆனால் பெரிய ரைனோவைத் தனியாக ஒரு புலி தாக்கிவிட முடியாது.

ஒரு யானையால் ஓடவோ, குதிக்கவோ, திடீரென்று வளைந்து திரும்பவோ முடியாது. இந்திய ரைனோவால் இவையனைத்தையும் சுறு சுறுப்பாகச் செய்ய முடிகிறது. ரைனோ தைரியமுடையது; எதிர்த்து நிற்கும் திறமையுடையது; விரைவில் செயல்புரிய வல்லது. இத்தகைய குணங்களால் இதனை ''விலங்குகளின் அரசன்'' என்று அழைப்பது மிகப் பொருந்தும் என்று, திரு. ஈ.பி. கி (E.P. Gee) அவர்கள் கூறுகிறார்.

இன்று உலகில் ஐந்து ரைனோ (சிறப்பு) இனங்களே உள்ளன. அவற்றில் இரண்டு (சிறப்பு) இனங்கள் ஆப்பிரிக்காவில் உள்ளன. ஆப்பிரிக்க ரைனோக்கள் இரு கொம்புடையவைகள். (புகைப்படம் II-31.3) ஆப்பிரிக்கக் கருப்பு ரைனோ (வளைந்த உதடு உடையது)

இலைகளைப் பறித்துத் தின்கிறது. ஆப்பிரிக்க வெள்ளை ரைனே (சதுர உதடு உடையது) புற்களை மேய்கிறது.

ஆசியாவிலுள்ள மற்ற மூன்று (சிறப்பு) இனங்களும் எண்ணிக்கையில் மிகக் குறைவாக உள்ளன. பெரிய இந்திய ஒற்றைக் கொம்பு ரினே சுமார் 625-ம், பர்மாவில் உள்ள ஆசியாடிக்



படம் II—31.3
இரண்டு கொம்பு ஆப்பிரிக்க காண்டாமிருகம்

(Asiatic) அல்லது சுமட்ரண் (Sumatran) இரண்டு கொம்பு ரைனே 170-ம், ஜாவான் (Javan) அல்லது சிறிய ஒற்றைக்கொம்பு ரைனே மேற்கு ஜாவாவில் 25–லிருந்து 50க்குள்ளும் இருக்கும் என திரு. ஈ.பி.கீ (E.P.Gee) அவர்கள் கூறுகிறார். ரைனேக்கள் அனைத்தையும் காப்பாற்ற உலகக்குழு (World committee) ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது.

உருவத்தில் (பருமனில்-Size) ஆப்பிரிக்கக் கருப்பு ரைனே மிகப் பெரியது. இந்திய ரைனே இரண்டாம் இடத்தையும், ஆப்பிரிக்க வெள்ளை ரைனே மூன்றும் இடத்தையும் பெறுகின்றன. நன்கு வளர்ந்த இந்திய ஒற்றைக் கொம்பு பெரிய ரைனே அதன் தோள்

அருகில் 180 செ.மீ. உயரம் இருக்கிறது. சராசரியாக சுமார் 170 செ.மீ. உயரமும், 335 செ.மீ. உடல் சுற்றளவும் உள்ளன. எல்லாவற்றிற்கும் சிறியது சுமத்ரன் ரைனோவாகும். இதைக் காட்டிலும் ஜாவான் ரைனோ பெரியது. இந்திய ரைனோ, தன் குட்டியுடன் செல்லும்பொழுது, தாய்க்கு முன் குட்டி செல்கிறது. அதேபோல் ஆப்பிரிக்க வெள்ளை ரைனோவின் குட்டியும் தாய்க்கு முன்னே செல்கிறது. இவைகள் புல்வெளியில் வாழ்வதால் புற்களின் மறைவிலிருந்து புலி, குட்டியைத் தாக்கிவிடாது பாது காக்க இந்திய ரினோவும், சிங்கம் தாக்காமல் இருக்க ஆப்பிரிக்க வெள்ளை ரைனோவும் மேற்கொண்டுள்ள பாதுகாப்பு முறையாகும்.

ஆசிய ரைனோவின் மூன்று (சிறப்பு) இனங்களும் இந்தியாவில் இருந்தன. ஜாவான் என்ற சிறிய, ஒற்றைக்கொம்பு ரைனோக்கள் வங்காளத்துச் சுந்தரவனச் சதுப்பு நிலக்காடுகளில் பெருவாரியாக இருந்தன. ஆனால் 1900ல் இவைகள் மறைந்துவிட்டன. சுமத்ரா இரண்டு கொம்பு ரைனோக்கள் 1935 வரையிலும் மீசோ (Mizo) மலைப் பகுதிகளில் வாழ்ந்து பின் மறைந்துவிட்டன. பெரிய இந்திய ஒற்றைக் கொம்பு ரைனோக்களும் மறையும் நிலையில் இருந்து பாதுகாக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வளவு பெரிய முரட்டு விலங்கு வெகுவாகக் குறைந்த தற்குக் காரணங்கள் என்ன என்பதைத் திரு. கீ (Gee) அவர்கள் கூறுவதைக் காண்போம். ரைனோ மந்தப் புத்தியுள்ள முட்டாள் தனமான வனவிலங்கு. மற்ற இந்திய வனவிலங்குகள் தங்களுக்கு ஆபத்து என்ற இயல் பூக்கத்தைப் பெற்றவுடன் (Instinct) ஓடி ஒளிந்து, தங்களைக் காப்பாற்றிக்கொள்ள முயல்கின்றன. ரைனோவோ ஆபத்து தன்னை நெருங்கும் வரையிலும் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபடாமல், மேய்ந்துகொண்டேயிருக் கிறது. ஆபத்து நெருங்கிய பின்னும் அதிலிருந்து தப்பித்துச் செல்லாமல் அதனை எதிர்த்துத் தாக்குகிறது'. மேலும், ரைனோ, குறிப்பிட்ட இடங்களிலுள்ள சாணக் குவியல்களுக்குச் சென்றே சாணம் போடும் பழக்கம் உள்ளது. சாணக்குவியலுக்குப் பின்புற மாக நகர்ந்து வந்து சாணம் போடுவதால், சாணக் குவியலின் மறுபுறத்தில் மறைந்திருந்து ரைனோவைப் பின்புறமாகத் தாக் குவது எதிரிக்கு எளிதாகிறது.

ரைனோக்கள் தனித்து வாழ்பவைகள். சில சமயங்களில் ரைனோக்கள் சேர்ந்து தென்பட்டாலும் அவைகள் எதேச்சை யாகச் சேர்ந்தவைகளேயாகும். இக் கூட்டம் அவைகள் கூடி வாழும் பண்பால் ஏற்பட்டதல்ல,

இந்திய ரைனோ பல்வேறு சந்தர்ப்பத்திற்கு ஏற்ப நான்கு வகை ஒலிகளை எழுப்புகின்றன என திரு ஈ. பி. கீ. அவர்கள் கூறுகிறார்.

மிக முதுமையடைந்த ஆண் ரைனோக்கள் இளம் காளைகளுடன் போட்டியிட்டு வாழ இயலாது. எனவே, அவைகள் காடுகளின் உட்பகுதியை விட்டு வெளியேறி, அவற்றின் ஓரங்களில் ஒதுங்கி வாழ்கின்றன.

முதிர்ந்த ரைனோக்கள் ஒன்றையொன்று துரத்திச் செல்வதைச் சில சமயங்களில் காணலாம். வலிவுமிகுந்த ஆண் ரைனோ வலிவற்ற ஒன்றைத் தாக்குவதற்காகத் துரத்துவது அல்ல. மாறாகக் கலவியை விரும்பிய இரு ரைனோக்களின் செயலாகும். பெரும்பாலும் பெண் ரைனோ ஆண் ரைனோவைத் துரத்திச் செல்கிறது. பருவ காலத்தில் 46–48 நாட்களுக்கு ஒருமுறை பெண் ரைனோ கருவுறும் நிலையை அடைகிறது. ரைனோவில் கர்ப்பக் காலம் $16\frac{1}{4}$-$16\frac{1}{2}$ மாதங்கள் நீடிக்கிறது. பல்வேறு மிருகக் காட்சிச் சாலைகளில் ரைனோக்கள் வளர்க்கப்படுகின்றன; அவ்வாறு வளர்க்கப்பட்டவைகள் கருவுற்றுக் குட்டிகளை ஈந்துமுள்ளன.

பொய்க் குழி தோண்டி ரைனோக்களைப் பிடிக்கின்றனர். பிடிக்கப்பட்ட ரைனோவைச் சக்கரங்கள் இணைக்கப்பட்ட பெரிய கூண்டில் வைத்து இழுத்துச் செல்கின்றனர். துவக்கத்தில் இவைகள் முரட்டுத்தனமாக நடந்துகொண்டாலும் நன்கு நடத்தப்படுவதால், நாளடைவில் பழக்கப்பட்டுச் சாதுவாக நடந்துகொள்கின்றன. ரைனோக்களின் வாழ்நாள் சரியாகத் தெரியவில்லையாயினும் யானைகளைப் போல இவைகளும் சுமார் 70 வருடங்கள் வாழும் எனக் கருதப்படுகிறது.

# 32. காட்டுப்பன்றி
## (Wild Boar)

விலங்கியல் பெயர் : ஸஸ் ஸ்க்ரோஃபா (Sus scrofa)
வரிசை : ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla)
குடும்பம் : ஸ்யூய்டே (Suidae)

காட்டுப் பன்றிகள் நாடு முழுவதும் பரவியுள்ளன. இவைகள் அடர்ந்த காடுகளிலும், புதர்க் காடுகளிலும் வாழ்கின்றன; தாவரங்களையும் மாமிசங்களையும் உண்கின்றன. பகலில் வெளி வருவதில்லை. இரவிலும், காலையிலும், மாலையிலும் உணவிற்காக வெளிவருகின்றன. இப்பன்றிகள் தங்கள் முகத்தினுல் நிலத்தைக் கிளறி வேர்களையும், மற்றத் தாவரங்களையும் தின்கின்றன. மேலும் தாங்கள் செல்லும் வழியில் கிடைக்கும் புழுப் பூச்சிகளையும் தின்கின்றன.

காட்டுப் பன்றிகள் கூட்டமாக (Sounder) வாழ்கின்றன. ஒரு கூட்டத்தில் சுமார் ஐம்பது உருப்படிகளும், அதற்கு அதிகமாகவும் உள்ளன. ஒரு சமயம் ஏப்ரல் மாதத்தில் ஆண், பெண் குட்டிகள் அடங்கிய சுமார் 50 எண்ணிக்கையுள்ள பன்றிகள் எங்கள் தோட்டத்து உலர்ந்த மிளகாய்ச் செடிகளில் தங்கிவிட்டன; பகல் சுமார் 11 மணிக்கு அவைகள் துரத்தப்பட்டன. இவைகள், செம்மண் சேற்றில் புரண்டெழுந்திருந்ததால் பல சிவந்த நிறத்தில் காணப்பட்டன. பன்றிக் கூட்டங்களில் பொதுவாகப் பெண் பன்றிகளும், குட்டிகளுமே உள்ளன. ஆண் பன்றிகள் கூட்டத்தை விட்டுப் பிரிந்து தனித்துச் சென்றுவிடுகின்றன. பருவ காலங்களில் ஆண்கள், பெண்ணை அடையச் சண்டையிடுவதுண்டு.

ஆண் பன்றியின் மேல்தாடைக் கோரைப் பற்கள் இரண்டும் நன்கு வளர்ந்து 'கொம்புகள்' போல் வெளியில் நீண்டுள்ளன. சில சமயங்களில் எதிரிகளின் உடலை இக் 'கொம்பினுல்' கிழித்து

விடுவதும் உண்டு. ஒரு சமயம் மாடு மேய்த்துக்கொண்டிருந்த ஒருவர், அடிபட்டு ஓடிவரும் காட்டுப் பன்றி ஒன்றினைத் துரத்தித் தடுக்க, வேதனையால் கோபம் கொண்ட பன்றி, அம்மனிதனின் வயிற்றைக் குறுக்காகக் கிழித்துவிட்டுச் சென்றதனைப் பார்த்திருக்கிறேன்.

பொதுவாகப் பன்றிகள் முரட்டுக் குணம் படைத்தவை. அதிலும் காட்டுப் பன்றிகள் அதிக முரட்டுத் தன்மை உள்ளவைகள். காட்டுப் பன்றி, தன்னைத் துன்புறுத்துபவர்களை எதிர்த்துத் தாக்கிவிடும். இதனாலேயே சாதுவான மான்களைத் திருட்டுத்தனமாக வேட்டையாடுபவர்கள் இப்பன்றிகளைச் சுடுவதில்லை.

எங்கள் ஊர்ப் பகுதியில் காட்டுப் பன்றிகள் மிக அதிகம். இவைகள் இரவில் பயிர்களைத் தின்னக் கூட்டம் கூட்டமாகவும்



படம் II—32.1. காட்டுப்பன்றி

தனித்தும் வருகின்றன. சோளம், கம்பு, கேழ்வரகு போன்ற தானியங்களை விரும்பி உண்ணும். இவைகள் தின்பது குறைவாயினும் பெரிய கூட்டம் பயிர்களுக்குள் புகுந்தால், அவற்றால் அழிக்கப்படுவது மிக அதிகமாகும். வேறு எந்த வன விலங்குகளும் காட்டுப் பன்றிகளைப்போல் விளை நிலங்களிலுள்ள பயிர்களை நாசம் செய்வதில்லை என்றும் அதனால் இப்பன்றிகளைக் காப்பாற்றும்படி கேட்டுக்கொள்வது இயலாத ஒன்று என்றும் திரு S. H. பிராட்டர் (S. H. Prater) அவர்கள் கூறுகிறார். இவற்றின் தொல்லையில் இருந்து பயிர்களைப் பாதுகாக்க இரவு முழுவதும் ஆட்கள் விழித்திருந்து காவல் காப்பார்கள். இதனால் எங்கள் வீட்டில் படுத்துக்கொண்டே, இரவில் தூங்காமல் காவல் புரிபவர்கள் பறை கொட்டுவது, பட்டாசுகள் வெடிப்பது, பந்தங்களைப் பிடித்துச் சுற்றிவருவது, தூக்கத்தைப் போக்குவதற்காகப் பாட்டுப் பாடுவது போன்ற அனைத்தையும் கேட்கலாம். எங்கள் பகுதி மக்களுக்கு இச்செயல் ஒரு பெரும் பிரச்சினை; வேதனையான அனுபவம். பகல் முழுவதும் நிலத்தில் உழைத்தவர்கள், இரவில் தூங்காமல்

கண் விழித்துக் காவல் புரியவேண்டியிருக்கிறது. சிறிது ஏமார்ந்து விடினும் காட்டுப் பன்றிகள் கதிர்களைத் தின்று, பயிர்களை மிதித்து சேதப்படுத்திவிடுகின்றன. பட்ட பாடெல்லாம் வீணுகி, ஏற் கெனவே அரை வயிற்றுக் கஞ்சி குடிக்கும் அம்மக்களின் வயிற்றுக்கு அதுவும் கிடைக்காமல் போய்விடுவதுண்டு. இந் நிகழ்ச்சி வருடம் முழுவதும் நடைபெறுகிறது. அவர்களுடைய வேதனை எப் பொழுது தீருமோ ?

இந் நிலை ஏற்படுவதற்குக் காரணம் என்ன? காடுகளின் பெரும் பகுதி அழிக்கப்பட்டுவிட்டதால், பன்றிகளுக்குத் தங்க இடமும் உணவும் கிடைப்பதில்லை. இதனுல் இவைகள் விளை நிலங்களைத் தேடி வருகின்றன. பன்றிகள் ஒரு தடவையில் அதிகக் குட்டிகள் போடுகின்றன. இவைகள் வருடத்திற்கு இரு முறை குட்டிகள் போடுகின்றன. இதனுல் பன்றிகளின் எண்ணிக்கையும் விரைவில் அதிகரித்துவிடுகின்றன. இவற்றைப் பிடித்துத் தின்னும் சிங்கம், புலி, சிறுத்தை மற்ற ஊன் உண்ணிகள் வெகுவாக அழிக்கப்பட்டு விட்டதால் இவைகளைப் பிடித்துத் தின்ன வேறு விலங்குகள் இல்லை. சிங்கங்கள் பன்றியை விரும்பித் தின்கின்றன. ஆனுல் கிர் புகல ரணில் பன்றிகள் குறைந்துவிட்டன. இதனுல் சிங்கங்கள் வீட்டு விலங்குகளைப் பிடிக்கின்றன. பன்றியை வேட்டையாடுவது எளி தல்ல. இது மனிதர்களின் வாடையை எளிதில் அறிந்து, விலகி ஓடிவிடுகின்றது. இதனை வேட்டையாடுபவர்கள் காற்றின் திசையை அறிந்து அதற்குத் தக்கபடி மறைந்திருக்க வேண்டும். அப்படியே மறைந்திருந்து, அதன் கூர்மைமிக்க கண்களின் மீது ஒளிமிக்க டார்ச்சு விளக்கைப் போட்டாலும், அதன் பார்வை வெளிச்சத்தினுல் பாதிக்கப்படுவதில்லை. இவ்வளவு தொல்லை களையும் கடந்து சுட்டாலும், அது சரியாக அடிபட்டு அதே இடத் தில் இறக்கவில்லையென்றுல் பெரும்பாலும் எதிர்த்து வந்து தாக் கவும் செய்கின்றன.

காட்டுப் பன்றிகள் பயிர்களைச் சேதப்படுத்துவதைத் தடுக்க வேருெரு வழியையும் கடைப்பிடிப்பதுண்டு. ''காட்டுத் தோட் டாக்களை'' ஆட்டின் குடல் போன்றவற்றுல் சுற்றி அவைகள் வரும் வழியில் வைத்துவிடுவார்கள். குடலின் வாசனையால் ஈர்க்கப் பட்டு அதனை எடுத்துக் கடிக்கும்பொழுது, தோட்டா வெடித்துப் பன்றியைக் கொன்றுவிடும்; அல்லது தாடையில் பலத்த காயத்தை ஏற்படுத்திவிடும். இதனைக் கண்டு பயந்த மற்றப் பன்றிகள் சில நாட்களுக்கு அத்திசையில் வராமலிருக்கும். இதனுல் இக்குடியான வர்களுக்குச் சிரமம் தீர்ந்துவிட்டதாகக் கருதமுடியாது. ஏனெனில் வேறு கூட்டம் பயிர்களை நாடி வரலாம் அல்லவா? மேலும் அதே கூட்டமும் சில நாட்களுக்குப்பின் மீண்டும் வரும்.

# 33. குள்ளம் பன்றி
## (Pygmy Hog)

விலங்கியல் பெயர் : ஸஸ் ஸால்வானியஸ் (Sus salvanius)
வரிசை : ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla)
குடும்பம் : ஸ்யூய்டே (Suidae)

குள்ளம் பன்றியும் முள் முயலைப் போலவே நம் நாட்டில் அழிந்துவிட்டதாகக் கருதப்பட்டு வந்தது. காரணம் சுமார் 15 ஆண்டுக்காலமாக இதனை யாரும் எங்கும் பார்த்ததாக எந்தவிதக் குறிப்பும் இல்லை. ஆனால் தற்போது அஸ்ஸாம் மாநிலத்தில் பிரமபுத்திரா நதிக்கு வடக்குப் பகுதியிலுள்ள தேயிலைத்தோட்டங்



படம் II—33.1. குள்ளம்பன்றி

களிலும், அதனை அடுத்துள்ள காடுகளிலும் இது இருப்பதாகத் தெரிய வருகிறது. பிரிட்டீஷாருக்குச் சொந்தமான அட்டரீகட் தேயிலைத் தோட்டத்திற்கு (Attareekhat tea estate) அடுத்துள்ள சிறு காடு ஒன்றை அப்பகுதியிலுள்ள சில மக்கள் தீ வைத்து அழித்தார்கள். அப்பொழுது அங்குள்ள குள்ளம் பன்றிகளும், முள் முயல்களும் தப்பித்துப் பாதுகாப்பான இடங்களுக்குச் செல்லும் பொழுது, அவற்றைக் கொன்றார்கள். இதனைக் கண்ட

அட்டரீகாட் தேயிலைத் தோட்டத்து நிர்வாகி (Manager) திரு. ரிசார்ட் கிரேவ் (Richard Grave) அவ் வனவிலங்குகளைக் கொல்ல வேண்டாம் எனக் கேட்டுக்கொண்டதோடு, சிலவற்றைத் தனக்குப் பிடித்துக்கொடுக்கும்படியும் கேட்டுக்கொண்டார்.



படம் II—33.2. குள்ளம்பன்றி.
(புகைப்பட உதவி திரு. ஜெரிமி ஜே. சி. மாலின்சன், துணை இயக்குனர், ஜெர்சி வனவிலங்கு பாதுகாப்பு நிறுவனம்.)

தற்போது அவர் 17 குள்ளம் பன்றிகளையும், ஒரு முள் முயலையும் பாதுகாப்பாகப் பராமரித்து வருகிறார். இவற்றின் வாழ்க்கையைப் பற்றி மேலும் அறிந்துகொள்ள, ஜெர்சி வனவிலங்குப் பாதுகாப்புக்

குழுவைச் சேர்ந்த திரு ஜெரிமி மல்லின்ஸன் (Jeremy Mallinson) மான்கல்டி உட்பிரிவிலுள்ளவற்றைச் (Mangaldai sub-division) சென்று பார்த்தார். புகைப்படம் II—33.2 இத்தகைய அரிய வனவிலங்குகளைப் பாதுகாக்கவேண்டி அஸ்ஸாம் தேயிலைத் தோட்டத்தினர் ஒன்றுகூடி ஓர் குழுவை ஏற்படுத்தியுள்ளனர். இந் நற்பணிக்கு உதவ உலக வனவிலங்குக் குழுவின் இந்தியக் கிளையும் ஆவன செய்து வருகிறது. அரசாங்கம் மட்டுமேயன்றி பொது மக்களும் இத்தகைய நற்பணியைச் செய்யவேண்டும் என்பதற்கு இது ஓர் சிறந்த எடுத்துக்காட்டாகும். பொதுமக்கள் இதனை நன்குணர்ந்து வனவிலங்குகளைப் பாதுகாக்க அரசுடன் ஒத்துழைக்க வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறேன்.

குள்ளம்பன்றி நம் நாட்டில் மட்டும் காணப்படுவதாகும். சுமார் 15 ஆண்டுகளுக்கு முன் உத்தரப்பிரதேசத்திலும் அஸ்ஸாம் மாநிலத்திலும், இமயமலை அடிவாரப் பகுதிகளிலும் காணப் பட்டது. இன்றைய மானஸ் (Manas) புகலரணுக்கு மேற்குப் பகுதியிலும், கிழக்குப் பகுதியிலும் இவைகள் முன்பு காணப் பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் இன்று வெகுவாக அழிந்து, அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களில் மட்டும் உள்ளன. இதனைக் காப்பது நம் அனைவருடைய கடமையாகும்.

குள்ளம்பன்றி எல்லா வகையிலும் காட்டுப் பன்றியைப் போலவே யிருப்பினும், நன்கு வளர்ந்த குள்ளம்பன்றி அதன் தோள் அருகில் சுமார் 25 செ.மீ உயரமே இருக்கிறது. பொது வாகப் பெண் பன்றியில் ஆறு ஜோடிப் பால் காம்புகள் (Teats) உள்ளன. ஆனால் பெண் குள்ளம் பன்றியில் மூன்று ஜோடிப் பால் காம்புகள் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதன் வால் குட்டையாக இருக்கிறது. இதன் சிறிய உருவம், மூன்று ஜோடிப் பால் காம்புகள், சிறிய வால் ஆகிய காரணங்களால், தனிப் பேரினமாக (பொதுவினமாக-Genus) முன்பு இது வைக்கப்பட்டி ருந்தது. குள்ளம் பன்றிகள் 5–20 வரை ஒன்று சேர்ந்து கூட்ட மாக வாழ்வதாகவும், இரவில் மட்டும் வெளி வருகின்றன வென்றும் திரு. ப்ரேட்டர் (S.H. Prater) குறிப்பிடுகிறார்.

# 34. புள்ளிமான்

(Spotted Deer—Chital)

விலங்கியல் பெயர் : ஆக்ஸிஸ் ஆக்ஸிஸ் (Axis axis)
வரிசை : ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla)
குடும்பம் : ஸெர்விடே (Cervidae)

அழகான மான் இனங்களில் புள்ளிமானும் ஒன்றாகும். இமய மலை அடிக்காடுகளிலும், தீபகற்ப இந்தியாவிலும் மிகுதியாகப் புள்ளிமான்கள் காணப்படுகின்றன. இது மேய்ச்சல் நிலமும்



படம் II—34.1.
புள்ளிமான் கூட்டம். ஆண் மான்களில் "கொம்புகள்" உதிர்ந்து மீண்டும் வளர்வதைக் காணலாம்.

அதிக நீரும் உள்ள காடுகளிலுள்ளது. நன்கு வளர்ந்துள்ள ஆண் மான், அதன் தோள்பட்டைக் கருகில் சுமார் 90 செ.மீ உயரம் இருக்கும். சுமார் 85 கி.கிராம் எடை இருக்கும். இதன் உடல்

வெண் புள்ளிகளுடன் சிவந்த நிறத்தை உடையது. மனிதர்களின் நிறத்தைக் குறிப்பிட ''மாநிறம் (மான் நிறம்)'' எனக் கூறுவதை நாம் அறிவோம். இதன் முதுகில் கருமை நிறம் படர்ந்துள்ளது. உடலின் இந்நிறம் மரங்களின் நிழலிலும், புதர்களிலும் இருக்கும் பொழுது, இதனை எளிதில் கண்டுகொள்ள இயலாத காப்பு நிறமாக இருக்கிறது. இதற்குப் பெரிய விழிகள், பயந்த குணம், மருண்ட பார்வை இருப்பதால்தான் பெண்களை மானுக்கு ஒப்பிடு வதை இலக்கியத்தில் காண்கிறோம். இப் புள்ளிமான்கள், நம் நாட்டிற்கே உரிய சிறப்பானப் பல விலங்குகளில் ஒன்றாகும். மாமிசம், தோல், கொம்பு ஆகியவற்றிற்காகத் தீங்கற்ற இம் மானைப் பலர் திருட்டுத்தனமாக வேட்டையாடிக் கொன்று வருகின்றனர். இது மிகவும் வருந்துதற்குரிய செயலாகும். ஏற்கெனவே வெகுவாக இதன் எண்ணிக்கை குறைந்துவிட்டது. இந் நிலையை நீடிக்க விடக்கூடாது. பொதுவாக ஓரளவிற்குப் பாதுகாப்பு இருந்தாலே, இம் மான்கள் நன்கு பெருகி, அதிகரித்து விடுவதால், இவற்றை எளிதில் காப்பாற்ற முடியும்.

காடுகள் வெகுவாக அழிக்கப்பட்டுவிட்டதால் இவைகள் காடுகளுக்கருகிலுள்ள விளைநிலங்களில் மேய்வதற்கு வருகின்றன. அச் சமயங்களில் இவற்றை வேட்டையாடி விடுவதுண்டு. மேலும் இதனை வேட்டையாடுபவர்கள், இவைகள் நீர் குடிக்கச் செல்லு மிடங்களிலும் இரவு நேரங்களிலும் மறைந்திருந்து சுடுவதுண்டு.

ஆணிற்குக் கொம்புகள் உள்ளன. பெண்ணிற்குக் கொம்புகள் இல்லை. மானின் கொம்புகள் வளரும் முறை மிகச் சுவையானது. குட்டி பிறந்த ஒரு வருடத்திற்குப் பின், ஆண் குட்டியின் தலையில் தோலால் மூடப்பட்ட சிறிய கொம்புகள் இரண்டு தோன்றி வளரும். ஆனால் இவைகள் சுமார் 10 செ.மீட்டர் நீளம் வளர்ந்த பின் விழுந்துவிடுகின்றன. இவைகளைத் ''தோல் கொம்புகள்'' என்பர். இவ்வாறு மூன்று முறை வளர்ந்து, உதிர்ந்த பின் நான்காவது முறையாக, உண்மைக் கொம்புகள் வளர்கின்றன. இக் கொம்புகள் தலை எலும்புடன் இணைந்துள்ளன. மேலும் நன்கு வளர்ந்த ஒவ்வொரு கொம்பிலும் மூன்று கிளைகள் உள்ளன. கொம்புள்ள ஆண் மான் கம்பீரமாகத் தோன்றுகிறது.

புள்ளிமான்கள் கூட்டமாக வாழ்கின்றன. ஒவ்வொரு கூட்டத் திலும் சுமார் 10-30 மான்கள் உள்ளன. ஒரு சில கூட்டங்களில் நூற்றுக்கணக்கான மான்கள் உள்ளன. சிறிய கூட்டத்தில் 2-3 ஆண்கள் உள்ளன. புள்ளிமான்கள் மற்ற வனவிலங்குக் கூட்டங் களுடன், சிறப்பாகக் குரங்குக் கூட்டங்களுடன் சேர்ந்து காணப்

படுவதுண்டு. பருவ காலமான ஏப்ரல், மே மாதங்களில் ஒரு பெண் மானை அடையும் பொருட்டு ஆண் மான்கள் அடிக்கடி தீவிரமாகச் சண்டையிடுகின்றன. இவைகள் மற்ற காலங்களிலும் கலவியில் ஈடுபடுகின்றன. ஒரு மான், ஒரு குட்டியே ஈனும்.



படம் II—34.2. புள்ளிமான்

புள்ளிமான்களை வீட்டில் விரும்பி வளர்ப்பதுண்டு. மரங்கள் நிறைந்த பரந்த இடத்தில் இவைகளைத் தன்னிச்சையாக விட்டு வளர்ப்பதுதான் சிறந்தது. கட்டி வைத்து வளர்ப்பது நல்லதல்ல. எங்கள் குடும்பத்திலும் மான்களை வளர்த்தோம்; மற்றவர்கள், வளர்த்ததையும் நானறிவேன். காடுகளிலுள்ள இளங்குட்டிகளை நாய்கள் சில சமயங்களில் பிடித்து விடுவதுண்டு. நாயிடமிருந்து விடுவித்த, காயம் படாமல் உள்ள அல்லது சிறிய காயங்கள் மட்டும் உள்ள குட்டிகளை வளர்ப்பது எளிது. சில சமயங்களில்

குட்டி ஈன்ற சமயத்தில் அதனைப் பார்த்தவர்கள் எடுத்து வந்து விடுவதும் உண்டு. மிக இளங்குட்டிகளாயினும், துள்ளி விரைந்து ஓடுவதும் அவற்றிற்குரிய தற்காப்புக் குணமாகும். இளம் குட்டிகள் எளிதில் மனிதர்களுடன் பழகிக்கொள்கின்றன.

தாயைப் பின்தொடர்ந்து செல்வதுபோல, வளர்ப்பவர்களைப் பின்தொடர்ந்து மான்குட்டிகள் செல்வதைக் காணலாம். ஒரு மான் குட்டியும், நாயும் மிக நெருங்கிப்பழகியதை நான் அறிவேன். அம் மான் குட்டி சென்றவிடமெல்லாம் அதற்குப் பாதுகாப்பாக அந் நாய் செல்வதுண்டு. அம் மான் குட்டியை வேறு நாய்கள் தாக்குவதைத் தடுத்தும், குழந்தைகளும், மற்றவர்களும் அக் குட்டிக்குத் தொல்லை தருவதைத் தடுத்தும் அந் நாய் பாதுகாத்து வந்ததை, நேரில் பார்த்து அறிந்தவர்களே போற்றமுடியும். வயது முதிர முதிர மான் குட்டிகள் மனிதர்களிடமிருந்து பிரிந்து செல்ல முற்படுகின்றன. கொம்பு முளைக்கும் பருவம் வந்த ஆண் மான்கள் குழந்தைகளையும், முதியவர்களையும் முட்டித் தாக்குவதுண்டு.

# 35. கடமை சாம்பர்
## (Sambar)

விலங்கியல் பெயர் : ஸெர்வஸ் யுனிகோலார் (Cervus Unicolor)
வரிசை : ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla)
குடும்பம் : ஸெர்விடே (Cervidae)

இந்திய மான்களிலேயே மிகவும் பெரியது கடமை (சாம்பர்) மானுகும். இது மிக்க வளமான கொம்புகளைப் பெற்றுள்ளது. அதன் தோளருகில் 150 செ.மீ. உயரமிருக்கிறது. நன்கு வளர்ந்த மான் 225-320 கி.கிராம் எடை இருக்கிறது.

கடமையின் உடல் முரட்டு மயிர்களால் போர்த்தப்பட்டு உள்ளது. ஆணின் கழுத்தின் கீழ்ப் பகுதியிலும் மயிர்கள் வளர்ந்து பிடரி மயிரைப்போல் உள்ளன. பொதுவாக இம் மயிர்கள் மஞ்சள் அல்லது சாம்பல் கலந்த பழுப்பு நிறத்தில் உள்ளன. வயிற்றுப்பகுதி மங்கிய நிறத்திலுள்ளது. பெண்மான் சிறிது வெளிரிய நிறத்தில் இருக்கிறது. கொம்புகள் கரடு முரடான புற அமைப்புடன் தடித்துள்ளன.

காடுகளில் உள்ள குன்றுகளில் விளை நிலங்களுக்கு அருகில் இவைகளை மிகுதியாகக் காணலாம். புல், இலை, காய், கனி போன்ற அனைத்தையும் உணவாகக் கொள்கிறது. பெரும்பாலும் இரவில் மேய்ந்து, பகலில் மறைவான இடத்தில் தங்குகிறது. இதற்குக் கூரிய நுகர்ச்சித் திறனும் செவிப்புலனும் உள்ளன. கட்புலன் சிறப்பாக இல்லை. அடர்ந்த காட்டினுள் சிறு சந்தடியு மின்றிச் செல்லும் திறமை மிக்கது; நீரில் நன்கு நீந்திச்செல்ல வல்லது. நீரில் நீந்தும்பொழுது உடல் முழுதும் நீரில் மூழ்கி, தலை மட்டும் கொம்புகளுடன் வெளியில் தெரிகிறது. மத்திய, தென்னிந்தியப் பகுதிகளில் உள்ள மான்களுக்கு மார்ச், ஏப்ரல் மாதங்களில் கொம்புகள் விழுந்துவிடுகின்றன. மே மாதத்தில் கொம்புகள் வளரத் துவங்கி, மழைக் காலத்தில் வெல்வெட்

போன்றுள்ளன. நவம்பர் மாதத்திற்குள் வெல்வட் நீங்கிவிடுகிறது. ஆண்கள் தங்கள் கொம்புகளை மரத்தில் தேய்த்துச் சுத்தப்படுத்திக் கொள்கின்றன. ஒவ்வொரு ஆணும் தனக்கென்று ஒரு எல்லையைப் பள்ளத்தாக்குப் பகுதிகளில் ஏற்படுத்திக்கொள்கிறது. மற்ற மான்கள் தன் எல்லைக்குள் நுழையாதபடி, தீவிரமாகப் பார்த்துக் கொள்கிறது. தன் எல்லையைக் காக்க இது மற்ற மான்களுடன் எதிர்த்துச் சண்டையிடுகிறது. வெற்றி பெற்ற ஆண் அவ்வெல்லை



படம் II—35.1. கடமை (கடமான்-சாம்பர்)

யினுள்வரும் பெண்மானைத் தன் உரிமையாக்கிக்கொள்கிறது. ஒரு ஆண்மான் சில பெண்மான்களைத் தன்னுடைமையாக்கிக் கொள்கிறது.

இணை கூடுதல், நவம்பர்-டிசம்பர் மாதங்களில் நடைபெறு கிறது. அதற்குப்பின் ஆண் தனித்துச் சென்றுவிடுகிறது. மழைக் காலத் துவக்கமாகிய, மே அல்லது ஜூன் மாதத்தில் குட்டி போடுகிறது. கடமைகள் பெருங்கூட்டமாகச் சேர்ந்து வாழ்வ தில்லை. ஒரு கூட்டத்தில் 4 அல்லது 5லிருந்து 12 வரை இருக் கின்றன. ஆண் மானும், பெண் மானும் தனித்து இருப்பதுண்டு. சில சமயங்களில் கூட்டத்தில் பெண்களும் குட்டிகளுமே உள்ளன. ஆண் மான்கள் கூட்டத்தில் காணப்படுவதில்லை.

# 36. காஷ்மீர் மான்
## (Kashmir stag)

விலங்கியல் பெயர் : ஸெர்வஸ் இலாஃபஸ் ஹங்குலு
(Cervus elaphus hangulu)
வரிசை : ஆர்ஷியோடக்டைலா (Artiodactyla)
உள் வரிசை : ருமினன்ஷியா (Ruminantia)
குடும்பம் : ஸெர்விடே (Cervidae)

காஷ்மீரின் அழகுக்கு அழகு கூட்டுவதுள் காஷ்மீர் மான் ஒன்ருகும். ஆனல் காஷ்மீர் மான்கள் வெகுவாக வேட்டையாடப் பட்டு அழிக்கப்பட்டு விட்டன. இவைகள் "அரசர்களின் வேட்டை விலங்குகள்" எனப்பட்டன. 1947-ல் சுமார் 2000 இருந்தன. ஆனல் 1962-ல் சுமார் 175-200 மட்டுமே இருந்ததாக திரு. கீ (Gee) அவர்கள் குறிப்பிடுகிருர். இவ் வருந்தத்தக்க நிலைக்குக் காரணம் என்ன?

கருப்புக் கரடியும் (Black bear) சிறுத்தையும் (Leopard) இவற்றின் இயற்கை எதிரிகளாகும். ஆனல் இவைகள் மற்ற விலங்குகளால் கொல்லப்பட்டதைக் காட்டிலும், மனிதனல் வேட்டையாடப்பட்டு அழிந்தவைகளே அதிகம். இப் பகுதியில் இராணுவம் அதிகமாக முகாம் செய்வதால் இவற்றின் இயற்கைச் சூழ்நிலை பாதிக்கப்பட்டு, இவைகள் வெகுவாக அழிந்து விட்டன. மேலும் காவநடைகளை மேய்த்து, அவற்றின் வாழ்விடங்கள் (Habitats) அழிக்கப்பட்டுவிட்டன.

நன்கு வளர்ந்த மான் சுமார் 125 செ.மீ. உயரமும், 180 கி. கிராம் எடையும் உள்ளது. நன்கு வளர்ந்த கொம்புகள் 100 செ. மீ. நீளம் உள்ளன. பொதுவாகக் கொம்புகளில் 5 கிளைகளே உள்ளன. சில சமயங்களில் 11-13 கிளைகள் கொண்டவைகளும் உள்ளன. காஷ்மீர் மானின் தோல், வெளிர் பழுப்பு நிறத்தி லிருந்து கருத்த பழுப்பு நிறம் வரையில் உள்ளது. இதன் தாடை, வயிற்றுப் பகுதி, தொடையின் பின்பகுதி (Buttocks) ஆகிய பாகங்கள் மங்கிய வெண்மை நிறத்தில் உள்ளன. இதன் நிறம்

கோடையில் மங்கியுள்ளது. குளிர் காலத்தில் மயிர்கள் அடர்ந்து வளர்ந்து நல்ல நிறத்துடன் உள்ளது. குட்டிகளில் புள்ளிகள் உள்ளன. காஷ்மீர் மான்கள் கூட்டமாக வாழ்கின்றன. இக் கூட்டத்தில் பெண் மான்களும், குட்டிகளுமே உள்ளன. ஆண்



படம் II—36.1. காஷ்மீர் மான்

மான்கள் கூட்டத்தைப் பிரிந்து தனித்து வாழ்கின்றன. பருவ காலங்களில் மட்டும் இவைகள் பெண் மான்களுடன் சேர்ந்து வாழ்கின்றன.

இவைகள் சாதுவான விலங்குகள்; வளர்ப்பதற்கு ஏற்றவைகள். இவைகள் தற்போது டாசிகம் புகலரணில் காணப்படுகின்றன. இவைகள் பருவ காலத்திற்கேற்ப இடம் மாறுகின்றன. கோடைக் காலங்களில் மலையின் 3700 மீட்டர் உயரமுள்ள பகுதிகளுக்குச் சென்று வாழ்கின்றன. இவைகள் கோடை வாழ்நிலங்களுக்குச் செல்லும் முன், மார்ச்சு, ஏப்ரல் மாதங்களில் கொம்புகள் உதிர்ந்துவிடுகின்றன. இவைகள் குளிர்காலத்திற்காக நவம்பர் மாதத்தில் கீழ் டாசிகம் (Lower dachigam) பகுதிக்குத் திரும்பிவிடுகின்றன. இச் சமயத்தில் இவைகளின் கொம்புகள் நன்கு வளர்ந்துள்ளன. காஷ்மீர் மான்கள் நம் நாட்டிற்குரிய சிறப்பு வனவிலங்குகளில் ஒன்றாகும். இவைகள் ஐரோப்பாவில் உள்ள சிவப்பு மான்களுக்கு (Red deer) இணையானவை. இவைகளை அழிய விடுவது மனித சமுதாயத்தின் அலட்சியமே ஆகும்.

# 37. சதுப்பு மான்

## (Swamp deer)

### பாராஸிங்கா (Barasingha)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | ஸெர்வஸ் டுவௌஸிலி (Cervus duvuauceli) |
| வரிசை | : | ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla) |
| குடும்பம் | : | ஸெர்விடே (Cervidae) |

சதுப்பு மான்கள் இந்தியாவில் மட்டுமே உள்ளன. இவற்றைப் பாராஸிங்கா (Barasingha) என்றும் கூறுவர். இவைகள் இன்று



படம் II—37.1. சதுப்பு மான்

மத்தியப் பிரதேசத்தில் கன்ஹா (Kanha) தேசிய வனத்தில் வெகுவாகக் காணப்படுகின்றன. மேலும் இவைகள் உத்திரப் பிரதேசத்தின் வடபகுதி, அஸ்ஸாம் மாநிலத்தின் சதுப்பு

நிலப்பகுதி இவைகளில் வாழ்கின்றன. இப் பகுதிகளில் வாழும் மானின் குழம்புகள் வெளிப்புறமாக விரிந்து சதுப்பு நிலத்தில் திரிவதற்கு ஏற்ப அமைந்துள்ளன. கன்ஹா பகுதியில் தரை கடினமாக உள்ளது. இம் மான்கள் இத்தகைய கடினமான நிலத்திலும் நன்கு வாழ்ந்துவருகின்றன. இம் மான்கள் புல் வெளிகளில் கூட்டமாக வாழ்கின்றன. இவைகள் மிகப்பெரிய கூட்டமாகக் காணப்படுவதுண்டு. ஒரு கூட்டத்தில் ஆயிரம் எண்ணிக்கையும் இருப்பதுண்டு.

நன்கு வளர்ந்த ஆண் மான் தோள் பட்டைக்கருகில் 135 செ. மீட்டர் உயரமும், 170–180 கிலோ கிராம் எடையும் இருக்கும். இதன் மயிர்கள் மிருதுவாக மெத்தென்று இருக்கின்றன. இதன் நிறம் பழுப்பிலிருந்து மஞ்சள் வரையிருக்கிறது. ஒரே பால் இனத்தைச் சேர்ந்தவைகளோ அல்லது ஒத்த வயதுடையவை களோ ஒன்று சேர்ந்து கூட்டங்களாகத் திரிகின்றன. ஆண் மான் களின் கூட்டம், பெண் மான்களின் கூட்டம். ஆண் குட்டிகளின் கூட்டம், பெண் குட்டிகளின் கூட்டம் எனத் தனித்தனியே அனைத்தும் அமைதியாக வாழ்வதைக் காணலாம்.

பெண்மானின் கூட்டங்கள் ஒவ்வொன்றும் ஒரு ஆண் மானின் தலைமையில் உள்ளது. ஆண் மான்கள் ஒன்றுடன் ஒன்று சண்டை யிட்டு முடிவில் வெற்றி பெறும் மான், பெண் மான்களின் கூட்டத் திற்குத் தலைமை தாங்குகிறது. போரிட்டுத் தங்கள் தகுதியை இழந்த மான்கள் அனைத்தும் அமைதியாக வெற்றி பெற்ற மானுடன் வாழ்வதைக் காணலாம்.

சதுப்பு மான்களின் பல உள் (சிறப்பு) இனங்கள் (Sub-species) உள்ளன. எடுத்துக்காட்டாக அஸ்ஸாம் பகுதியில் வாழும் சதுப்பு மான்களும், மத்தியப் பிரதேசத்தில் வாழும் சதுப்பு மான்களும் வெவ்வேறு உட்சிறப்பினங்களைச் சேர்ந்தவை. சதுப்புநில மான்கள் இன்று குறைந்துவருகின்றன. இவைகளின் வாழ்விடங்கள் அழிக்கப்பட்டதால் இவைகள் வெகுவாகக் குறைந்துவிட்டன. மேலும் இவைகள் வேட்டையாடப்பட்டும் அழிக்கப்பட்டு வருகின்றன. இந்நிலை நீடித்தால் இவைகள் முற்றிலும் அழிந்து மறைந்துவிடும் என்பதனை நாம் உணரவேண்டும்.

# 38. குரைக்கும் மான்
## (Barking deer)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | முன்டியாகஸ் முன்ட்ஜாக் (Muntiacus muntjak) |
| வரிசை | : | ஆர்ஷியோடக்டைலா (Artiodactyla) |
| குடும்பம் | : | ஸெர்விடே (Cervidae) |

குரைக்கும் மான் நம் நாடு முழுவதிலும் அடர்ந்த காடுகளில் பரவியுள்ளது. இது இமயமலையிலும், தென்னிந்தியாவிலும் 1500-2450 மீட்டர் உயரமுள்ள பகுதிகளில் காணப்படுகிறது. சில சமயங்களில் இன்னும் உயரமான இடங்களிலும் உள்ளது.



படம் II 38,1. குரைக்கும் மான்

ஆண் மான் தோள் அருகில் சுமார் 50-70 செ.மீ. உயரமும், 22-23 கி.கிராம் எடையும் உள்ளது. வயதான ஆண், பழுப்பு

நிறத்தில் இருக்கிறது. ஆணின் மேல் தாடைக் கோரைப்பற்கள் நன்கு வளர்ந்து தற்காப்பு ஆயுதங்களாகப் பயன்படுகின்றன. கொம்புகள் சிறியதாகவும், கிளைகளற்றும் உள்ளன. இவைகள் மயிர் சூழ்ந்த எலும்புக் காம்புகளின் மீதுள்ளன. இவ் வெலும்புக் காம்புகள் முகத்தின் இரு பக்கங்களிலும், கீழ்நோக்கித் தடிப்பாகச் (Ridge) செல்கின்றன. பெண் மானில், கொம்புகளுக்குப் பதிலாகத் தடித்த மயிற்கற்றைகள் உள்ளன.

குரைக்கும் மான்கள் தனித்தோ அல்லது இணையாகவோ அல்லது சிறு குடும்பக் கூட்டமாகவோ காணப்படுகின்றன. இவைகள் அடர்ந்த காடுகளில் உள்ளன. இவைகள் காடுகளின் ஓரங்களுக்கும், திறந்த புல்வெளிகளுக்கும் மேயச் செல்கின்றன. இவைகள் பகற்பொழுதிலேயே அலைகின்றன. இலைகள், புற்கள், காய்கனிகள் போன்றவைகள் இவற்றின் உணவாகும்.

இது கத்துவதைத் தூரத்திலிருந்து கேட்கும்பொழுது, நாய் குரைப்பதுபோல் (Barking of a dog) இருக்கிறது. இடைவெளி விட்டுவிட்டு இது கத்துகிறது. பொதுவாகக் காலை, மாலை வேளைகளிலும், முன் இரவிலும் இது கத்துகிறது.

இம் மான் எல்லாப் பருவங்களிலும் இனப் பெருக்கம் செய்கிறது. குளிர்ந்த கால நிலையின் (Cold weather) போது கலவி நடைபெறுகிறது. பொதுவாக ஒன்று அல்லது சில சமயங்களில் இரண்டு குட்டிகளை மழைக்காலங்களில் இது ஈனுகிறது.

# 39. கஸ்தூரி மான்
## (Musk deer)

விலங்கியல் பெயர் : மொஸ்கஸ் மொஸ்சிஃபெரஸ் (Moschus moschiferus)
வரிசை : ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla)
குடும்பம் : ஸெர்விடே (Cervidae)

கஸ்தூரி மான் காஷ்மீரில் மேல் டாசிகம் (Upper dachigam) பகுதியிலுள்ளது. இது ஒரு அழகிய சிறிய மான்; தோள்பட்டைக் கருகில் சுமார் 50 செ.மீ. உயரமிருக்கிறது. இது முற்றிலும் வளர்ச்சி பெருத மான் இனத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது. மற்ற மான் இனங்களில் ஆணுக்குக் கொம்புகள் உண்டு; கஸ்தூரி மான்களில் ஆண் மான்களுக்கும் கொம்புகள் இல்லை. இதனை ஈடு செய்யும் வகையில் இதன் கோரைப் பற்கள் நீண்டு வளர்ந்து 'கொம்புகள்' போல் வெளியில் காணப்படுகின்றன. மேலும் இதற்கு முகச் சுரப்பிகள் (Face glands) இல்லை. மற்ற மான் இனங்களில் முகச் சுரப்பிகள் உள்ளன. மற்ற இன மான்களில் பித்தப்பை (Gall bladder) இல்லை; கஸ்தூரி மானில் பித்தப்பை உள்ளது. மேலும் வால் சுரப்பியும் (Caudal gland) கஸ்தூரிச் சுரப்பியும் (Musk gland) உள்ளன. ஆண் மானின் வயிற்றுப் புறத்தில் தோலுக்கடியில் கஸ்தூரிச் சுரப்பி இருக்கிறது. இச் சுரப்பி நன்கு வளர்ந்திருப்பதிலிருந்து, கலவிக் காலத்தில், பெண் மான் ஆண்மானைத் தேடிச் செல்கின்றது, என்பதனை அறிகிறோம். பனிச் சரிவிலும் வளவளப்பான பாறைகளிலும் எளிதில் நடந்து செல்லும் வகையில் கஸ்தூரி மானின் கால்களில் உள்ள மையக் குழம்புகள் நீண்டு கூர்மையாகவும், பக்கக் குழம்புகள் பெரிய தாகவும் உள்ளன.

கஸ்தூரி மானின் வால் விநோதமானது. மலப்புழைப் பகுதி யிலுள்ள நீண்ட மயிர்கள் வாலை மூடிக்கொண்டு உள்ளன. வாலின் நுனியில் ஒரு கற்றை மயிர்கள் உள்ளன. வாலின் துவக்

கத்திலுள்ள மற்றொரு கற்றை மயிர்கள் வாலின் மேற்பகுதியையும் பக்கங்களையும் போர்த்துக் கொண்டுள்ளன. பொதுவாக வாலின் பெரும்பகுதி மயிர்களற்று இருக்கிறது. வாலின் மருங்கிலுள்ள (Lateral surface) மெத்தென்ற தோலில் காணப்படும் சிறு பிளவு வழியாக வால் சுரப்பி திறக்கிறது.

கஸ்தூரி மானின் உடல் தடித்த முரட்டு மயிர்களால் போர்த் தப்பட்டிருக்கிறது. இதன் தோல் பழுப்பு நிறப் புள்ளிகளுடன் கருமையான பழுப்பு நிறத்தில் உள்ளது.

கஸ்தூரி மான் சிறு குழி பரித்து அதனுள் பகல் நேரத்தில் ஒளிந்துகொள்கிறது. அது காலையிலும் மாலையிலும் உணவைத்



படம் II—39.1. கஸ்தூரி மான்

தேடி வெளியே வருகிறது. இது புல், இலை, பூ போன்ற அனைத் தையும் தின்கின்றது. கஸ்தூரி மான் தனித்தோ அல்லது இணையா கவோ திரிகின்றது. இதன் கலவிக்காலம் ஜனவரி என்றும், குட்டி ஈனும் காலம் ஜூன் என்றும் கருதப்படுகிறது.

கஸ்தூரி மான்கள், இயற்கை எதிரிகளான சிறுத்தை, பனிச் சிறுத்தை ஆகியவைகளுக்குப் பலியாகி அழிந்ததைக் காட்டிலும், மனிதனின் நாகரீக மோகத்திற்கு இலக்காகி அழிந்ததே அதிகம்.

ஆண் மானில் உள்ள கஸ்தூரி என்ற வாசனைப் பொருளைப் பெறுவதற்காக இவைகள் வெகுவாகக் கொல்லப்பட்டுவிட்டதால் இவற்றின் எண்ணிக்கை மிகக் குறைந்துவிட்டது. மேலும் காஷ்மீர் பகுதியில் இராணுவம் அடிக்கடி அதிகமாக முகாமிடுவதால் இவற்றின் வாழ்விடம் பாதிக்கப்பட்டு இவைகள் மறைந்து வருகின்றன. இந்நிலை நீடிக்குமாயின் இவைகள் முற்றிலும் மறைந்து விடுங்காலம் வெகு தொலைவில் இல்லை.

சமீபத்தில் கஸ்தூரி சேகரிப்பதற்காக வேண்டி இம்மான்களைப் பாதுகாக்கும் நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டுள்ளது.

# 40. சருகுமான் (சுண்டெலி மான்)
## (Mouse deer)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | ட்ராகுலஸ் மெமின்ன (Tragulus meminna) |
| வரிசை | : | ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla) |
| குடும்பம் | : | செர்விடே (Cervidae) |

சருகு மான்கள் தென்னிந்தியக்காடுகளில் காணப்படுகின்றன. இவைகள் சுண்டெலி மான், குறுமான் எனவும் அழைக்கப்படுகின்றன. இவைகள் சுமார் 1850 மீட்டர், உயரம் வரை உள்ள காடுகளில் பரவியுள்ளன. பொதுவாகப் புற்கள் நிறைந்த பாறை



படம் II—40.1. சருகுமான் (சுண்டெலி மான்)

களுள்ள மலைகளிலும், காடுகளிலும் இவைகள் உள்ளன. இவைகள் தோள்பட்டைக் கருகில் சுமார் 25–30 செ.மீ. உயரமே உள்ளன. இவற்றின் பின்பகுதி சற்று உயர்ந்தும் கால்கள் மெலிந்தும் உள்ளன. இவற்றின் தோல் ஆலிவ் நிறம் கலந்த பழுப்பு நிறத்தில் மஞ்சள் புள்ளிகளுடன் இருக்கிறது. இவைகள் சிறிய உருவமும்,

பயந்த குணமும் உள்ளவை. இவைகள் பாறைகளின் இடைவெளி களில் மறைந்து வாழ்வதால், நாம் அவற்றை எளிதில் காண முடிவதில்லை. இவைகள் பகல் நேரங்களில் வெளியே வருவது இல்லை.

இவற்றிற்குக் கொம்புகள் இல்லை. கோரைப்பற்கள் வெளியே ''கொம்புகளாக'' வளர்ந்துள்ளன. இக் கொம்புகள், பெண் மான்களைக் காட்டிலும் ஆண் மான்களில் நன்கு வளர்ந்துள்ளன.

பருவ காலங்களைத் தவிர, மற்றக் காலங்களில் ஆண் தனித்தே வாழ்கிறது. பெண் பொதுவாக இரு குட்டிகளை ஈனுகின்றது.

# 41. கௌர்

## (Gaur)

## 'இந்தியக் காட்டெருமை'

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | பாஸ் (Bos) கௌரஸ் (gourus) |
| வரிசை | : | ஆர்ஷிடோடேக்டைலா (Artiodactyla) |
| குடும்பம் | : | போவிடே (Bovidae) |

கௌர், விலங்கியல்படி காட்டெருமையல்ல. காட்டெருமை புபாலிஸ் (Bubalis) பேரினத்தைச் (Genus) சேர்ந்ததாகும். கௌர், போஸ் (Bos) (பொதுவினத்தைச்) பேரினத்தைச் சார்ந்தது.



படம் II—41.1. கௌர் (இந்தியக் காட்டெருமை)

அதாவது கௌர் பசுமாடு பேரி(பொதுவினத்தைச்) சார்ந்தது. இதன் கொம்புகள் குறுக்குவெட்டுத் தோற்றத்தில் வட்ட வடிவ

மாக இருக்கின்றன. இக் கொம்புகள் இரு பக்கமும் பின்னேக்கிச் சென்று உள்நோக்கி வளைந்து இரு முனைகளும் நெருங்கி ஏறக் குறைய ஒரு வளையம்போல் இருக்கின்றன. இக் கொம்புகள் மிகக் கனமானவை.

இது தென்னிந்தியாவின் மலைக்காடுகளிலும், மத்திய இந்தியா, வட இந்தியா, கிழக்கிந்தியா ஆகியவற்றின் சில பகுதிகளிலும்



படம் II—41.2. கௌர்

காணப்படுகிறது. வடமேற்கு இந்தியாவில் இது இல்லை. தென்னிந்தியாவில், தமிழ் நாட்டில் முதுமலைப் புகலரணிலும் மைசூர் மாநிலத்துப் பண்டிப்புர் புகலரணிலும் இது காணப்படுகின்றது. இவ்விரு புகலரண்களும் அடுத்தடுத்திருப்பதால், மாநில வேறுபாடின்றி இரு புகலரண்களுக்கும் தாங்கள் விருப்பம்போல் இவை சென்று வருகின்றன. இவ்விரு புகலரண்களையும் ஒன்றாக இணைத்து தமிழ்நாடு-மைசூர் அரசுகள் இதனை ஒன்றாகப் பராமரிப்பது, மாநிலங்களுக்கிடையில் ஒற்றுமையை ஏற்படுத்தும் பல்வேறு

வழிகளில் ஒரு சிறந்த வழியாகும் என்ற கருத்தினை இந்திய வன விலங்குக் குழு கூறியிருப்பது வரவேற்கத்தக்கதாகும். மேலும் இவ்விரு புகலரண்களையும் சேர்த்து இதை ஒரு தேசிய வனமாக உயர்த்த இயலும். தென்னிந்தியாவில் 1830 மீட்டர் உயரப் பகுதிகளில் உள்ள அடர்ந்த காடுகளிலும், வட இந்தியாவில் இமயமலை அடிவாரப் பகுதிகளிலும் கௌர் வாழ்கின்றது. இது முக்கியமாகப் புற்களையும், சில சமயங்களில் இலைகளையும் மரப் பட்டைகளையும் தின்கின்றது. அதிகாலையிலும் குளிர்ந்த பகற் பொழுதிலும் மேய்கின்றது. வெப்பமிக்கப் பகற்பொழுதில் அடர்ந்த நிழலில் தங்கிவிடுகின்றது.

வட அமெரிக்கா, ஐரோப்பாவில் காணப்படும் உண்மையான காட்டெருமையைக் காட்டிலும் கௌர் பெரியதாகவும் கம்பீரத் தோற்றத்துடனும் இருக்கிறது. இதற்குப் பெரிய தலையும், தாழ்ந்த பெரிய உடலும், வலிய கால்களும் உள்ளன. இது தோள்பட்டைக்கருகில் 195 செ.மீ. உயரம் இருக்கிறது. நன்கு வளர்ந்த கௌர் சுமார் 900 கி.கிராம் எடை இருக்கும், தோள் பட்டையிடத்திலிருந்து முதுகின் பாதிநீளம் வரையிலும், திரண்ட மைய நீளத் தசைத்தடிப்பு (Ridge) ஒன்று 'திமிழ்' போன்று இருக் கிறது. முதிர்ந்த கௌர், உடலில் ரோமங்கள் அற்று, நல்ல பள பளப்பானக் கறுப்பு நிறத்திலிருக்கும். நெற்றிப் பகுதி சாம்பல் நிறத்திலும், கால்களின் கீழ்ப்பகுதி வெண்மை அல்லது வெளிர் மஞ்சள் நிறத்திலும் உள்ளன, கண்கள் பழுப்பு நிறத்தில் உள்ளன. புதிதாகப் பிறந்த கன்று பொன் மஞ்சள் நிறத்தில் (Golden yellow) இருக்கிறது.

கௌர் பெரும்பாலும் கூட்டமாக வாழ்கின்றது. ஒரு கூட்டத்தில் 6 முதல் 20 வரையிலும் சாதாரணமாகக் காணப் படும். சில கூட்டங்களில் அதிக எண்ணிக்கைகளும் உள்ளன. முதிர்ந்த ஆண் கௌர், பொதுவாகக் கூட்டத்தை விட்டுப்பிரிந்து தனித்து வாழ்கின்றது. ஆகையால் கூட்டத்தில் பெண்களும், கன்றுகளும், இளம் ஆண்களுமே இருக்கின்றன. பருவகாலங்களில் ஆண்கள் கூட்டத்துடன் சேர்ந்து மற்ற இளம் ஆண்களைத் துரத்தி விட்டு எல்லையை (Territory) ஏற்படுத்திக்கொள்கின்றன. பருவம் எய்தித் துடிப்புடன் இருக்கும் ஆண், ஆழ்ந்த மூச்சுவிட்டுக் கொண்டும், கத்திக்கொண்டும் இருக்கும். பருவகாலம் முடிந்ததும் கௌர் பெண்களைவிட்டுத் தனித்துச் சென்று விடுகிறது. பின் இளம் காளைகள் கூட்டத்துடன் சேர்ந்து கொள் கின்றன. இவைகள் பகல் வேளைகளில் அடர்ந்த நிழலில் தங்கி யிருந்து காலையிலும், மாலையிலும் மேய்வதற்கு வருகின்றன.

கௌர் மனிதர்களைத் தாக்குவதில்லை. மனிதர்களைக் கண்டால் மிரண்டு சென்று விடுகிறது. இதன் பருத்த உருவமும் நுகர்ச்சித் திறனும் இதற்குப் பாதுகாப்பாக உள்ளன. இதற்கு ஒலித்திறனும், கண்பார்வையும் சிறப்பாக இல்லை.

# 42. காட்டெருமை
## (Wild Buffalo)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | புபாலஸ் புபாலிஸ் (Bubalus bubalis) |
| வரிசை | : | ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla) |
| குடும்பம் | : | போவிடே (Bovidae) |

நம் நாட்டில் காட்டெருமைகள் அஸ்ஸாம், மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களின் சதுப்பு நிலப் பகுதிகளிலுள்ளன. இக் காட்டெருமைகளை நீர் எருமைகள் (Water Buffaloes) என்றும் கூறுவர். புற்களும் நீரும் நிழலும் நிறைந்த,



படம் II—42.1. காட்டெருமை

உயர்ந்து வளர்ந்துள்ள காடுகளில் இவ்வெருமைகள் வாழ்கின்றன, இவைகள் வெப்பம் தாங்கமாட்டாது பெரும் நேரம் நீரிலும், சேற்றிலும் படுத்திருக்கின்றன. இவை கூட்டம் கூட்டமாக வாழ்கின்றன.

நன்கு வளர்ந்த காளை, அதன் தோள் அருகில் 170 செ.மீ. உயரம் இருக்கிறது; சுமார் 900 கி.கிராம் எடை இருக்கிறது. காட்டெருமை கறுப்பு நிறமுடையது. கால்கள் முழங்காலுக்குக் கீழ் மாசு படிந்த வெண்மையாக உள்ளன. புதிதாகப் பிறந்த கன்று வெளிரிய நிறத்திலுள்ளது. காட்டெருமைகளுக்குக் கொம்புகள் நன்கு கம்பீரமாக வளர்ந்திருக்கின்றன. இக் கொம்புகள் வெளிநோக்கிப் பின் சாய்ந்து, பின் மேல் நோக்கி உட்புறமாக வளைந்து அநேகமாக முற்றுப்பெறாத ஒரு பெரிய வட்டம் போல் தோன்றுகின்றன. சிலவற்றில், கொம்புகள் படுகிடையாக (Horizontally) வெளிச் சென்று, நுனிகள் மேல் நோக்கியும் உள்நோக்கியும் வளைந்துள்ளன. இவ்விரு வகைப்பட்ட கொம்புள்ளவைகளும் ஒரே கூட்டத்தில் காணப்படுகின்றன. இக் கொம்புகள் தட்டையாகவும், குறுக்கு வெட்டுத் தோற்றத்தில் அநேகமாக முக்கோண வடிவத்திலும் உள்ளன.

பொதுவாகக் காட்டெருமைகள் முரட்டுக்குணம் படைத்தவைகள். தனித்து வாழும் ஆண் எருமையும், கன்றுடன் வாழும் பெண் எருமையும் எவ்விதத் துன்புறுத்தல் இல்லாவிட்டாலும் மனிதர்களையும் மற்ற விலங்குகளையும் தாக்கும். சிறிய ஊன் உண்ணிகள் இவைகளைத் தாக்கிப் பிடிக்க முடிவதில்லை. இவைகளின் எதிரி என்று சொல்லக்கூடியது புலி ஒன்றுதான். புலியும் வலிமைமிக்க காளையைப் பிடிக்க மிகச் சிரமப்படும்.

மற்ற விலங்குகளைப் போலவே நம்நாட்டுக் காட்டெருமைகளும் வேட்டையாடப்பட்டதாலும், அவற்றின் வாழ்விடங்கள் அழிக்கப்பட்டதாலும் வெகுவாகக் குறைந்துவிட்டன. இவ்வெருமைகளைப் பாதுகாக்கவேண்டித் தற்போது, மத்திய பிரதேசத்தில் பாஸ்டார் மாவட்டத்திலுள்ள (Bastar District) இந்திராவதி நதிக் கரையின் இரு மருங்கிலுமுள்ள பைராம்கார் (Bhairamgarh) காடு, காட்டெருமைகளின் புகலரணாக மாற்றப்பட்டுள்ளது. நம் நாட்டில் காட்டெருமைகளைப் பாதுகாக்க வேண்டி முதன் முதலில் தோற்றுவிக்கப்பட்ட புகலரண் இதுவேயாகும். இப் புகலரணில் 330 காட்டெருமைகள் உள்ளன. ஒரிஸ்ஸா மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியில் மகாநதி (Mahanadi river) ஆற்றுப் பகுதியிலும் காட்டெருமைகள் உள்ளன. இவைகள் அனைத்தும் காப்பாற்றப்படவேண்டும்.

சிங்கங்களின் பாதுகாப்பிற்காகக் கிர் புகலரணும், ரைனோக்களுக்காகக் கஜிரங்கா புகலரணும், புலிகளுக்காக முண்டந் துறையும் உள்ளதுபோல், காட்டெருமைகளுக்காக மத்தியப் பிரதே

சத்தில் பைராம்கார் காடு புகலரணாக ஆக்கப்பட்டது வரவேற்கத் தக்கது. இதே போன்று வெவ்வேறு வனவிலங்குகளுக்கும் தனித் தனிப் புகலரண்கள் ஏற்படுத்துவது மிகச் சிறப்புடையதாகும். தற்போது பெரியாறு புகலரண் என்னும்பொழுது யானையும், முதுமலைப் பண்டிப்பூர் புகலரண்களைக் குறிப்பிடும்பொழுது கௌரும், டாசிகம் புகலரனுடன் மானும் நினைவிற்கு வருவது இயற்கையே. இது போலவே, ஒவ்வொரு காட்டையும் அதில் சிறப்பாகவுள்ள ஒரு விலங்கினத்தின் புகலரணாகக் கொள்வது பல்வேறு விலங்கினங்களையும் பாதுகாப்பதற்கு ஏற்ற செயலாகும். இதனால் ஒவ்வொரு இனத்தின் வாழ்க்கையையும், வாழ்விடத்தையும் நன்கு ஆராய்ந்து அறிய இயலும்.

# 43. வரை ஆடு
## (Nilgiri Tahr)

விலங்கியல் பெயர் ; ஹெமிட்ரேகஸ் ஹைலோக்ரியஸ் (Hemitragus hylocrius)
வரிசை : ஆர்ஷியோ டேக்டைலா (Artiodactyla)
குடும்பம் : போவிடே (Bovidae)

வரையாடு தென்னிந்தியாவில் நீலகிரியிலிருந்து ஆனைமலை வரையிலும், அதற்குத் தெற்கிலுள்ள மேற்கு மலைத் தொடரிலும் ஆங்காங்கே காணப்படுகிறது. இது 1220-1830 மீட்டர் உயரப் பகுதிகளில் வாழ்கிறது. இது வெள்ளாட்டு வகையைச் சேர்ந்தது.



படம் II—43·1. வரை ஆடு

இது அடர்த்தியற்ற காடுகளிலும் மலைச் சரிவுகளிலும் உள்ளது. வரையாடுகள் சிறு கூட்டமாக வாழ்கின்றன. ஒரு கூட்டத்தில் 6-ம் அல்லது சற்று அதிகமாகவும் உள்ளன.

வரையாட்டின் உடல் மயிர்கள் குட்டையாக, அடர்த்தியாக, அழகாக உள்ளன. இதன் கொம்புகள் உருண்டையாக வளைய அமைப்புக்களுடன் தோன்றுகின்றன. இதற்கு இரண்டு பால் காம்புகள் (Teats) உள்ளன. இதன் உடல் கருமை கலந்த மஞ்சட் பழுப்பு நிறத்தில் உள்ளது. வயிற்றுப் பகுதி மங்கிய வெண்மை நிறமாகத் தோன்றுகிறது. பெண் ஆடுகளும் இளம் ஆண் குட்டி களும் சாம்பல் நிறத்திலுள்ளன. முதிர்ந்த ஆண் ஆடு ஆழ்ந்த பழுப்பு நிறமாக, முதுகில் வெளிரிய சேணம் போன்ற பகுதியுடன் உள்ளது. ஆண் அதன் தோளருகில் சுமார் 100-110 செ.மீ. உயரமிருக்கிறது. ஆண், பெண்ணைக் காட்டிலும் பெரியதாகவும் எடை அதிகமானதாகவும் இருக்கிறது. ஆணின் கொம்பு சுமார் 44·5 செ.மீ. நீளமிருக்கிறது. கொம்புகளிரண்டும் அடிப்பகுதியில் ஒன்றையொன்று மிக நெருங்கி, இணையாக மேல் நோக்கிச்சென்று பின் வளைந்துள்ளன.

வரையாடுகள் அதிகாலையிலும், மாலையிலும் மேய்கின்றன. வெயில் நேரத்தில் அடர்ந்த பகுதிகளில் ஓய்வெடுக்கின்றன. இவைகள் பாறைகளின்மீது உறுதியாக அடிவைத்துத் திறமையாக நடந்து செல்கின்றன. இவற்றிற்குக் கூர்மையான பார்வை யுள்ளது. ஓய்வெடுக்கும்பொழுது ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பெண் ஆடுகள் காவல்புரிகின்றன, வரையாடுகள் நிலத்திலிருந்து வரும் ஆபத்தை மிகக் கவனமாகக் கண்காணிக் கின்றன. ஆனால் மேலிருந்து வருவதை அவைகள் உணர்வதில்லை. இவைகள் சிறுத்தை, புலி போன்ற ஊன்உண்ணிகளால் வெகுவாக அழிக்கப்பட்டுவிட்டன. மேலும் வேட்டையாடுபவர்களும் இதனைப் பெருமளவு அழித்துவிட்டார்கள். நீலகிரி வனவிலங்குக் குழுவின் 1963-ம் ஆண்டு கணக்கெடுப்புப்படி 292 வரையாடுகள் இருப்பதாகவும், நீலகிரிப் பகுதியில் மொத்தம் சுமார் 400 ஆடுகளே இருக்கலாமெனவும் அறிகிறோம். இவைகள் தென் பகுதியில் காணப்படும் தொல் விலங்குகளிலொன்று. இதனைக் காப்பாற்ற வேண்டியது நம் அனைவருடைய கடமையுமாகும். இவற்றை வேட்டையாடாமலிருந்தால் இவைகள் கணிசமான அளவு பெருகிவிடும். இனியாவது யாரும் வேட்டையாடாம லிருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும்.

இவற்றின் சேய்ப் பெருக்கத்தைப் பற்றிச் சரியாக தெரியத் வில்லை. இது பொதுவாக ஒரு குட்டி ஈனுகிறது. சில சமயங் களில் இரண்டு குட்டிகள் ஈனுவதுண்டு. குட்டிகள் எல்லாப் பருவங்களிலும் காணப்படுகின்றன. வெயிற் காலத்தில் வயதான ஆண், கூட்டத்தைவிட்டுப் பிரிந்து தனித்து வாழ்கிறது.

# 44. இரலைமான் (கருமான்)
## (Black Buck)

விலங்கியல் பெயர் : ஆண்டிலோப் செர்விகேப்ரா (Antilope Cervicapra)
வரிசை : ஆர்ஷியோடேக்டைலா (Artiodactyla)
குடும்பம் : போவிடே (Bovidae)

இரலை மான்கள், இந்தியாவில் மட்டுமே உள்ள அழகுமிக்க வனவிலங்குகளில் ஓரினமாகும். இவைகள் இமயத்தின் அடிவாரத்திலிருந்து கன்னியாகுமரி வரையிலுள்ள பரந்த புல்வெளிப் பகுதிகளில் பரவியுள்ளன. இவைகள் இலைகளைத் தின்னும்; புற்களையும் மேயும். இவைகள் காடுகளுக்கருகிலுள்ள விளைநிலங்களுக்குச் சென்று பயிர்களை மேய்வதால் திருட்டு வேட்டையாடுபவர்கள். இவற்றை வெகுவாகக் கொன்றுவிடுகின்றனர். துங்கபத்திராப் பகுதியில் மிகக்கொடிய முறையில் கண்ணிவைத்துப் பிடிக்கப்படுகிறது. இதனால் இவ்வழகுமிக்க விலங்குச் செல்வம் வெகுவாகக்குறைந்துவிட்டது. இவைகளை நன்கு பாதுகாக்காவிடின், இவ்வினம் விரைந்து அழிந்துவிடும்.

நன்கு வளர்ந்த ஒரு இரலைமான் அதன் தோள்பட்டை அருகில் சுமார் 80 செ.மீ உயரம் இருக்கும். வட இந்தியாவிலுள்ளவை சற்றுப் பெரிதாக உள்ளன. முதிர்ந்த இரலைமான், கரும் பழுப்பாக இருக்கிறது. இதனை ஆங்கிலத்தில் கருமான் (Black Buck) என்பர். தமிழில் முருகுமான், கலைமான் எனக் கூறப் படுகிறது. மேலும் இது திறந்த வெளிகளில் காணப்படுவதால் வெளிமான் என்றும் கூறப்படுகிறது. இவ்வினத்தில் ஆணின் (ஏனம்) கொம்புகள் சுருள் சுருளாக வளைந்து கூர்மையாகக் கருப்பு நிறத்தில் மிக அழகாக உள்ளன. ஒரு சில பெண்களிலும் (அரிணம்) கொம்புகள் உண்டு. முகத்திலுள்ள முகச்சுரப்பிகள், நீள் பிளவுகளின் வாயிலாக வெளியே திறக்கின்றன. கால்களிலும், சுரப்பிகள் உள்ளன. இதன் கால்கள் நீண்டு மெலிந்து, வலிமை

மிருந்து மிக வேகமாக ஓடுவதற்கேற்ப அமைந்துள்ளன. இதன் தசைகள் மிகத் துரிதமாக இயங்கக் கூடியவை. இதன் குளம்புகள் (Hoofs) கடினமின்றி, நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையுடையன. இத்தகைய அமைப்பால், உலகத்து விலங்குகள் அனைத்திலும், இரலைமான்களே மிக வேகமாக ஓடக்கூடியவைகள். திரு. எம். கிருஷ்ணன் அவர்கள் கூறுவதுபோல், இரலைமான் மணிக்குச் சுமார் 45 மைல் வேகத்தில், 10 மைல் தூரமும் அதற்கு



படம் II—44·1. இரலைமான் (கருமான்) கூட்டம்

மேலும் ஓடும் திறமை மிக்கது. குறுகிய தூரங்களைச் சில சமயங்களில் மணிக்கு 60 மைல் வேகத்தில் கடந்து செல்லும் அபாரத் திறமை கொண்டது. அது மட்டுமன்று, அது ஓடும் நிலத்தில் எவ்வித மோட்டார் வாகனங்களும் அதன் வேகத்திற்குச் சமமாகச் செல்ல இயலாது என்று திரு. எம். கிருஷ்ணன் அவர்கள் கூறுகின்றார்.

இரலைமான்கள் கூட்டமாக வாழ்கின்றன. இவைகள் பகற்பொழுதில் திரியும் விலங்குகள் கூட்டத்திலுள்ள பெண்மான்களே மிகக் கவனமாக அவ்வப் பொழுது தலையைத் தூக்கித் தங்களுக்கு ஏதாவது ஆபத்து நெருங்குகின்றதா எனப் பார்த்துக்கொள்

கின்றன. இவற்றின் கண் பார்வை மிகக் கூர்மையாக உள்ளன. எதிரிகள் தங்களை நெருங்கும் பொழுது, இவைகள் ஓடத்துவங்கும். ஆனால் துவக்கத்திலேயே துரிதமாக ஓடுவதற்குப் பதிலாக இவைகள் பலமுறை உயரத்தில் குதிக்கின்றன. இவைகள் 6—10 அடி உயரம் மேலே குதிக்கும் சக்தி படைத்தவை. இவ்வாறு குதித்த பின்பே இவைகள் ஓடத்துவங்கும். இது இரலைமான் களிடத்தில் காணப்படும் ஒரு பண்பாகும். இச்செயல் இவை களுக்கு ஆபத்தையே தேடித் தருகின்றன. செடிகளுக்கும், புதர் களுக்கும் மறைவிலுள்ள இவைகள், உயரக் குதிப்பதால், தொலை விலுள்ள எதிரி இவற்றின் இருப்பிடத்தை எளிதில் அறிய முடிகிறது. வேகமாக ஓடும்பொழுது சுமார் 20 அடி தூரத்தை நீளவாட்டில் தாண்டிச் செல்லும் திறமை இவைகளுக்கு உண்டு. ஆனால் ஓடுவதற்கு முன், உயரத்தில்சிலமுறை குதிப்பதால் அந்த நேரத்தைப் பயன்படுத்தி எதிரி இவற்றை நெருங்கிவிடுகிறது. இருப்பினும் இப்படிக் குதிப்பதால் சூழ்நிலையை அறிந்து ஓட வேண்டிய திசையை அறிந்துகொள்ள ஏதுவாகிறது.

புலி, சிறுத்தை, வேங்கை (சீட்டா) போன்றவைகளே இவற்றின் எதிரிகள். இருப்பினும் வேங்கையே இவற்றைத் துரத்திப் பிடிக்கும். வேங்கை, குறைந்த தூரமே வேகமாக ஓடக் கூடியது. நீண்ட தூரம் தொடர்ந்து ஓடும் உடல் வலிமை வேங்கைக்கு இல்லை. இதனால், இரலைமான்கள், உயரமாகக் குதிக்கும் நேரத்தில் அவற்றை, எதிரி அணுகித் துரத்திப் பிடித்துக் கொள்கின்றது. தப்பிச் செல்லும் இரலையை அது சிறிது தூரம் கடந்து செல்வதற்குள்ளேயே, எதிரி துரத்திப் பிடித்துவிடும். பிடிக்க முடியவில்லையென்றால் "சீச்சீ இந்தப் பழம் புளிக்கும்" என்ற முடிவுதான்.

வேகமாக ஓடித் தப்பித்துக்கொள்ளக்கூடிய இரலையிடம் மற்றொரு குறையும் இருக்கிறது. அக்குறையே அதன் அழிவிற்கு மேலும் காரணமாகின்றது. எதிரியிடமிருந்து தப்பி ஓடிய இரலை மான்கள், பின் ஒரு கோணத்தில் திரும்பி, எதிரிக்குக் குறுக்கே ஓடுவதால், இவைகள் எதிரிக்கு எளிதில் பலியாகிவிடுகின்றன என்று கூறப்படுகின்றது. ஆனால் "இரலைமான்கள் குறுக்காக ஓடுவதில்லை; மாறாக வளைந்து, வளைந்து ஓடுகின்றன என்று திரு. எம். கிருஷ்ணன் அவர்கள் கூறுகின்றார். இது எப்படியிருப்பினும், இவைகள் விரைந்து ஓடித் தப்பிக்கும் திறமை பெற்றிருந்தும், அதனைப் பயன்படுத்தாமல், எளிதில் எதிரிக்கு இலக்காகி விடுவது இவற்றின் பெருங்குறையே.

இரலைமான்கள் கூட்டம் கூட்டமாக வாழ்கின்றன. சில கூட்டங்களில் இவைகள் 50க்கும் மேல் உள்ளன. ஒவ்வொரு கூட்டத்திலும் ஆண்கள் (ஏனம்), பெண்கள் (அரிணம்), குட்டிகள் அனைத்தும் உள்ளன. இக் கூட்டத்தில் உள்ள வலிய இரலை மான்கள் சுமார் 20 ஏக்கர் பரப்பில் தங்கள் எல்லையை அமைத்துக் கொள்கின்றன. இவ்வெல்லைக்குள் மற்றக் கூட்டத்து இரலை மான்கள் புகாதபடி விரட்டிவிடுகின்றன. பொதுவாக இரலை மான்கள் சண்டையிடுவதில்லை.

இரலைகள் எல்லாப் பருவங்களிலும் ஈனுகின்றன. இருப்பினும் பிப்ரவரி–மார்ச் மாதங்களில் இவை அதிகமாக இணைகூடுகின்றன. இக் காலத்தில் ஆண்களுக்கிடையில் சண்டை ஏற்படுவதுண்டு. இச்சமயத்தில் ஆண் தன் தலையைத் தூக்கிக் கொம்புகளை முதுகின் மீது படும்படி வைத்துக்கொண்டு பீடு நடையுடன் செல்லும். தன்னுடன் வாழ்ந்த பல பெண் இரலைகளில் ஒன்றைத் தேர்ந் தெடுத்து இணையும். ஒரு தடவை ஒன்று அல்லது இரண்டு குட்டிகளை ஈனும். தாய், தன் குட்டிகளைப் புற்களுக்கிடையே மறைத்து வைக்கும். குட்டிகள் விரைவில் கூட்டத்துடன் கலந்து விடுகின்றன.

# 45. யானை
## (Elephant)

விலங்கியல் பெயர் : எலிஃபஸ் மேக்ஸிமஸ் (இண்டிகஸ்)
(Elephas maximus (indicus)
வரிசை : ப்ரொபோஸிடியா (Proboscidea)
குடும்பம் : எலிஃபெண்டிடே (Elephantidae)

நிலத்தில் வாழும் விலங்குகள் அனைத்திலும் மிகப் பெரியது யானை. இது மிகக் கம்பீரமான தோற்றத்தை உடையது. எவ்வளவு முறை யானையைப் பார்த்திருந்தாலும், மீண்டும் மீண்டும் பார்ப்பதில் யாருக்கும் சலிப்பு ஏற்படுவதில்லை. யானை ஒரு வனவிலங்காயினும், அதனை மனிதன் பிடித்துப் பழக்கித் தனக்குப் பயன்படும்படி வளர்ப்பு விலங்காகவும் ஆக்கிவிட்டான். நம்நாட்டில் யானை இந்துக்களின் மதத்தோடும், வாழ்வோடும் ஒன்றிவிட்டது. விநாயகர், இந்துக்கள் போற்றி வணங்கும் மிகச் சிறப்புடைய கடவுளாகும். யானை ஐராவதி, இந்திரனின் வாகனமாகவும் கருதப்படுகிறது.

யானைகளைப் பழங்காலத்தில் அரசர்கள் தங்கள் படைகளில் ஒரு பிரிவாக வைத்திருந்தார்கள். இவைகளைக் கோவிலில் வைத்துப் பராமரித்துத் தேர்த் திருவிழாவிற்கும், மற்றச் சிறப்பு நிகழ்ச்சிகளுக்கும் பயன்படுத்துவது நாம் அறிந்ததே. யானைகளைச் சர்க்கஸில் வைத்துப் பலவித விநோத விளையாட்டுக்கள் செய்து காட்டுகிறார்கள். இன்று யானைகளை நம்நாட்டில் பலவிதக் கடின வேலைகள் செய்யப் பயன்படுத்துகிறோம். பெரிய மரங்களைக் காடுகளில் இழுத்துச் செல்வதற்கும், பாரம் ஏற்றுவதற்கும் மற்றும் போக்குவரத்திற்கும் யானைகள் பயன்படுத்தப்படுகின்றன. பெரிய காடுகளில் யானை மீது ஏறிச் செல்வது பயனுள்ளதாக இருக்கிறது. யானையின் தந்தம் விலை உயர்ந்த பொருளாகக் கருதப்படுகிறது.

யானைகள் ஒரு சமயம் உலக முழுவதும் பரவியிருந்தன. இன்று ஒரு பேரினம் ஆப்பிரிக்காவிலும் மற்றொரு பேரினம் இந்தியா, பர்மா, மலேயா, ஸயாம், போர்னியோ, சுமத்திரா போன்ற தென்கிழக்கு ஆசியப் பகுதிகளிலும் உள்ளன. யானைகள் முதன் முதலில் தென்கிழக்கு ஆசியாவில் தோன்றியிருக்கவேண்டும், எனக் கருதப்படுகிறது. இவ்விரு பேரினங்களில் ஆப்பிரிக்காவிலுள்ளது ஆப்பிரிக்க யானை (லாக்ஸோடான்டா ஆஃப்பிரிக்கானு—Loxodonta Africana) என்றும், படம் II—45.2. ஆசியாவிலுள்ளதை ஆசிய (இந்திய) யானை என்றும் பாகுபடுத்தி அழைக்கப் படுகின்றன. ஆசிய யானை, ஆப்பிரிக்க யானையிலிருந்து வெகுவாக



படம் II—45.1. இந்திய யானை

வேறுபட்டுள்ளது. ஆசிய யானை (இந்திய யானை) உயரத்திலும் எடையிலும் சிறிது குறைந்துள்ளது. இந்திய (ஆசிய) யானையின் காதுகள் சிறியவை; ஆப்பிரிக்க யானையின் காதுகள் அகன்றுள்ளன. இந்திய யானையின் முதுகு குவிந்துள்ளது; ஆப்பிரிக்க யானையின் முதுகு அகன்று தட்டையாக உள் வளைந்து இருக்கிறது. ஆப்பிரிக்க யானையின் கால்களில் மூன்று நகங்களும், இந்திய யானையின் கால்களில் நான்கு நகங்களும் உள்ளன. ஆப்பிரிக்க யானையின் துதிக்கை நுனியில் இரு ''உதட்டுப் பிளவுகளும் (Lips)'' இந்திய யானைக்கு ஒரு ''உதட்டுப்பிளவும் (Lip)'' உள்ளன. படம் II-45.3(a) &(b) இந்திய யானையின் தலை இரு பகுதிகளாகப் பிரிந்துள்ளது. இவற்றின் நடுவில் ஒரு குழிவுள்ளது. மேலும் நெற்றிப்பகுதி வெளியில்

சற்றுப் புடைத்துள்ளது. ஆப்பிரிக்க யானையின் தலை இவ்வித அமைப்பில் இல்லை. இந்திய யானைகள் நம் நாடு முழுவதும் இமயம் முதல் குமரிவரை அடர்ந்த காடுகளில் காணப்படுகின்றன. நம் நாட்டில் சுமார் ஏழாயிரம் வனயானைகள் இருப்பதாகக் கருதப்படுகிறது. அவற்றில் சுமார் 3000 யானைகள் தென்னிந் தியக்காடுகளில் இருக்கலாமென்று நம்பப்படுகிறது. யானையைப் பற்றிய சரியான எண்ணிக்கை நம் நாட்டில் இல்லை.

யானைக்கு மிகக்கூரிய அறிவும், சிறந்த நினைவாற்றலும் இருப்பதாகக் கூறுவது மிகைப்படுத்துவதேயாகும். யானையின் தோல் மிகத் தடித்திருப்பினும் (2 செ.மீ), உணர்ச்சி மிக்கது. தோலின் கனம் இடத்திற்கு இடம் மாறுபட்டுள்ளது.



படம் II—45.2. ஆப்பிரிக்க யானை

யானையின் தோல் உடலின் பின் பகுதியிலும், அதன் அடிப்பகுதி யிலும் தொள, தொளவென்று தொங்கிக்கொண்டிருக்கிறது. யானையின் கண்கள் சிறியவையாயினும், கூரிய பார்வை உள்ளவை. யானை, தன் தடித்த குட்டையான கழுத்தைப் பக்கவாட்டத்தில் அசைக்கவியலாததினுல் பின்புறம் உள்ளவற்றைப் பார்க்க முடிவ தில்லை. இதனை ஈடு செய்யும்படி இதன் நுகர் உணர்வும், ஒலி யுணர்வும் மிகக் கூர்மையாக உள்ளன. ஏதாவது அரவம் கேட்டால் யானை முதலில் மரம் செடிகளின் மறைவில் சந்தடி யின்றி பதுங்கி நின்றுவிடும். அதன் அருகில் நெருங்கினுலோ

அல்லது அது பயப்படும்படி இருந்தாலோ பிளிறும். இது எதிரி களைத் தாக்கும்பொழுது பிளிறுகிறது.

இந்திய யானைகளில் ''கொம்புகள்''—தந்தங்கள் இரண்டு உள்ளன. பெண் யானைக்குத் தந்தங்கள் இல்லை. சில ஆண் யானை களுக்கும் தந்தங்கள் இல்லை. தந்தங்களற்ற ஆண் யானைகளை மோனை என்பர். யானைகளின் தந்தங்களிரண்டும் அவற்றின் மேல் தாடை வெட்டுப் பற்களேயாகும். இப் பற்கள் தொடர்ந்து வளருவதால் அவைகள் வெளியே நீண்டு கொம்புக (தந்தங்க) ளாக உள்ளன. அவற்றின் மொத்த நீளத்தில் சுமார் 2/3 பகுதி வெளியில் தெரிகின்றன. நன்கு வளர்ந்த தந்தம் சுமார் 2.6 மீட்டர் நீளமும், அதிகக் கனமான தந்தம் 46 கி.கிராம் எடையும் இருந்ததாக அறிகிறோம்.

யானைகள் வேகமாக ஓட இயலா. இவைகள் சுமார் 2.15 மீ. தூரம் அடியெடுத்து வைத்து விரைந்து நடக்கின்றன. இவைகள் மலையில் மேலும் கீழும் மிகக் கவனமாக ஏறி இறங்கும் திறமை கொண்டவை.

யானைகள் அடிக்கடி வரும் காட்டிற்கு அருகில் எங்கள் ஊர் இருப்பதால், காட்டிற்குள் கால்நடைகள் மேய்ப்பதற்காககவும், மற்றும் வேறு வேலைகளுக்காகச் செல்பவர்களும் யானையைப் பற்றிக் கூறியதை ஈண்டு எடுத்துச் சொல்வது சுவையாக இருக் கும். மாடுகள் மேய்ந்துகொண்டிருக்கும் இடத்திற்கு யானைகள் அறிந்து வருவதில்லை. சில சமயங்களில் யானை இருக்கும் இடத் திற்குப் பசுமாடுகளை மேய்த்துக்கொண்டு சென்று அதனைப் பார்க்க நேர்ந்துவிடின், பசுமாடுகள் திடீரென்று மிரண்டு செல்வது இயற்கை. பொதுவாகக் கால்நடைகளை யானை விரட்டுவதில்லை. இதனால் யானை காட்டிலிருக்கிறது என்று அறிந்த இடையர்கள் பசுமாடுகளின் கூட்டத்துடனேயே நெருங்கிச் செல்வார்கள். யானை சிறிது தொலைவில் இருப்பதை நுகர்ந்தறிந்து பசுமாடுகள் விலகிச் சென்றுவிடுகின்றன. இடையர்களுடன் செல்லும் நாய்கள் சில சமயங்களில் யானை இருப்பதையறிந்து குரைத்து யானையின் கோபத்தைத் தூண்டி விடுவதும், யானை நாய்களையோ அல்லது மனிதர்களையோ துரத்தி விரட்டுவதுமுண்டு. ஒரு சமயம் எங்கள் குடும்பத்திற்குச் சொந்தமான நாய் ஒன்று யானையால் துரத்தப்பட்டு மிகச் சிரமப்பட்டு, தோட்டம் வந்தடைவதற்கே சக்தியற்றுச் சோர்வுற்றுத் திரும்பியதாக என் தந்தை கூறியிருக் கிறார்.

யானைகள் மலையடிவாரத்தில் இருப்பதையறிந்து, மலையின் மீதுள்ளவர்கள் பெரிய பாறைகளையும், கற்களையும் உருட்டி விடுவதைக் கண்டு, கற்கள் மோதாமல் தப்பிக்க அவைகள் அங்கு மிங்கும் சென்று துடிப்பதைக் காணலாம். ஒரு யானையினால் 2 மீட்டர் அகலமும், 1.8 மீட்டர் ஆழமும் உள்ள குழியைத் தாண்ட இயலாது. யானைகள் நன்கு நீந்தும்.

யானையின் வாழ்வுக் காலம் 60 முதல் 70 ஆண்டுகளாகும். யானையின் வயது அதிகரிக்க அதிகரிக்க அதன் காதின் விளிம்பு மடிந்துகொண்டே வரும். இளம் வயதில் காதின் விளிம்பு நேராக இருக்கும். முதிர்ந்த யானையின் முகம், துதிக்கை, காதுகள் அனைத்திலும் வெளிர் சிவப்பு நிறப்புள்ளிகள் உள்ளன. இத்தகைய முகத்தையுடைய யானை ''புகர் முக யானை'' எனப்படும். இத் தோற்றம் நல்ல யானைக்கு இருக்கவேண்டிய குணங்களில் ஒன்று எனக் கருதப்படுகிறது.




படம் II—45.3.

a) ஆப்பிரிக்க யானையின் துதிக்கை நுனி

b) இந்திய யானையின் துதிக்கை நுனி

யானையின் பற்களின் தேய்வு அதன் வயதை நிர்ணயிக்க உதவுகிறது.

நன்கு வளர்ந்த ஒரு ஆண் யானை 2.7 மீட்டர் உயரமும், பெண் யானை 2.4 மீட்டர் உயரமும் இருக்கின்றன. யானையின் சராசரி உயரம் 2.2 மீட்டர் என நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. நன்கு வளர்ந்த யானை சுமார் 3630 கி.கிராமுக்கும் அதிகமாக இருப்பதாகச் சான்று உள்ளது. பொதுவாக யானை தன் உடல் கனத்தைத் தாங்குவதற்காகக் காலை மாற்றி மாற்றி நிற்பது வழக்கம். சில சமயங்களில் பல மணி நேரங்கள் அசைவற்று நிற்கும் திறன் அதற்குண்டு. யானையைப் பார்ப்பவர்கள் அதன் துதிக்கை, சிறப்பாக அதன் நுனிப்பகுதியும், காதுகளும் வாலும் அசைந்து கொண்டே இருப்பதைக் காணத் தவறமாட்டார்கள்.

எறும்பு, யானையின் காதினுட் சென்றால், யானை உடனே இறந்து விடும் என்றும், அவ்வாறு நேராமலிருப்பதற்குத்தான் அது எப்பொழுதும் தன் காதுகளை அசைத்துக் கொண்டேயிருக்கிறது என்றும் பாமர மக்கள் கருதுகிறார்கள். காரணம் இதுவல்ல. நாம் எப்படி இமை கொட்டுகிறோமோ அப்படித்தான் யானை தன் காதுகளை அசைக்கிறது. அதாவது செயலியலின்படி (Physiologically) இது ஒரு அனிச்சையச் செயல் (Reflex action) ஆகும்.

யானை, பொதுவாக நின்றுகொண்டேயிருக்கும். இரவில் மிகக் குறுகிய நேரம் மட்டுமே படுக்கிறது. பகல் நேரங்களில் சோர்வு ஏற்படின் படுக்கும். யானைகள் பொதுவாக மிகக்குறுகிய நேரமே தூங்குகின்றன என்ற கருத்து நிலவுகிறது. போதிய ஓய்வு கிடைப்பின் அது இரவில் 11 மணிமுதல் காலை 4 மணிவரை நன்கு படுத்துத் தூங்குகிறது. பொதுவாகச் சில சமயங்களில் அசைவற்று நின்ற நிலையிலேயே சிறிது தூங்கும்.

யானைகளை மனிதன் பழக்கித் தன் வேலைகளுக்குப் பயன்படுத்து கிறான். யானைகளின் உபயோகத்தை இக்கட்டுரையின் முற்பகு தியிலே கண்டோம். நன்கு பயிற்சி பெற்ற கொம்புள்ள யானைகள் நல்ல விலைக்குப் போகின்றன, ஒரு சிறந்த யானைக்கு, நடுத்தர உயரமும், பரந்த மார்பு, சுருக்கம் கொண்டதோல், பெரியதலை, அகன்ற நெற்றி, பெரிய காதுகள், அதிக நீர் வடிதல் இல்லாத ஒளிமிக்கக் கண்கள் இருக்கவேண்டும்; புள்ளிகளுடன் அடிப்பகுதி அகன்று, நீண்ட துதிக்கை இருக்கவேண்டும்; பெரிய, குட்டை யான கழுத்து இருக்க வேண்டும். முதுகு நீண்டு, நேராக இருத்தல் வேண்டும். முன்னங்கால்கள் குட்டையாக, முன்பகுதி குவிந்து இருத்தல் வேண்டும். பின் பகுதி நன்கு எடுப்பாகச் சரிவுடன் தடித்த குட்டையான கால்களுடன் இருக்கவேண்டும். எளிதாக நீண்ட அடியெடுத்து நடக்கவேண்டும். வால் நீண்டு நுனியில் அதிக மயிர்களுடன் இருக்கவேண்டும். வளைந்துள்ள முதுகும், பெரிய முதுகெலும்பு முட்களும், வெளிரிய நிறமும் நீண்ட கால் களும் உள்ள யானைகள் விரும்பப்படுவதில்லை.

யானையின் இனப்பெருக்கத்தைப் பற்றிச் சரியான குறிப்புக்கள் இல்லை. பழக்கப்பட்ட யானைகள் மிக அரிதாகக் குட்டிகள் போடு கின்றன. காடுகளில் மேய்வதற்காகவோ அல்லது சுற்றி வருவ தற்காகவோ விடப்படும் பெண் யானை காட்டு ஆண் யானையுடன் இணைந்து கரு தரிக்கிறது. வன ஆண் யானைகள் பழக்கப்பட்ட பெண் யானைகளைத் தேடிக்கொண்டு அவற்றின் இருப்பிடங்களுக்கு

வந்த சான்றுகள் பல உள்ளன. பெண் யானை எட்டாவது வயதிலிருந்து 15 வயதிற்குள் கரு தரிக்கும் நிலையை அடைகிறது. இது 70 வருடங்கள் வரையிலும் குட்டி ஈனும். பெண் யானை $2\frac{1}{2}$ அல்லது 3 ஆண்டுகளுக்கொருமுறை குட்டி ஈனுகிறது. ஒரு பெண் யானை தன் வாழ்நாளில் சுமார் 15 அல்லது அதற்கு மேலும் குட்டிகள் போடுகிறது. யானைகள் ஒரு ஈத்தில் இரட்டைக் குட்டி ஈனுவது மிக அரிது. சமீபத்தில் முதுமலைப் புகலரணில் உள்ள பழக்கப்பட்ட தேவகி என்ற யானை இரட்டைக் குட்டிகளை ஈன்றுள்ளது.



படம் II.—45·4.
முதுமலை வனவிலங்குப் பாதுகாப்பு நிலையத்தில் தன் இரட்டைக் குட்டிகளுடன் தேவகி என்ற யானை

யானைகள் மற்ற பாலூட்டிகளைப் போன்றே கலவியில் ஈடுபடுகின்றன. அவற்றைப் பற்றிய வேறுவிதமானக் கருத்துக்கள் தவறானவையாகும். யானைகளின் உடலமைப்பு நிலத்தில் வாழும் மற்ற பாலூட்டிகளிலிருந்து சில வகையில் மாறுபட்டு உள்ளது. எடுத்துக் காட்டாக, ஆண் யானையின் விந்தகங்களும், விந்தகப் பையும் உடலுக்கு வெளியில் தெரிவதில்லை. பெண் யானைக்கு, மார்புப் பகுதியின் வயிற்றுப் புறத்தில் முன்னங்கால்களுக்குச்

சற்றுப்பின், இரு பால் சுரப்பிகள் மட்டுமுள்ளன. பெண் யானையின் கலவிப் புழை மற்றப் பாலூட்டிகளில் இருப்பதுபோல் மலப்புழைக்குச் சற்று பின் தள்ளி அடிப்புறத்தில் இல்லாது, வயிற்றுப் பகுதியில் ஆணின் கலவியுறுப்பு உள்ள இடத்தில் காணப் படுகிறது.

யானைகளுக்கு மதம் பிடிப்பதுண்டு. இதைப் பற்றிச் சரியான விளக்கம் இல்லை. பழக்கப்பட்ட ஆண் யானைக்கும் ஒவ்வொரு வருடமும் மதம் பிடித்து, சுமார் 3 வாரங்கள் நீடிக்கிறது இந் நிலையில் இது மற்ற யானையுடன் சண்டை பிடிக்க விரும்புவதாக நம்பப்படுகிறது. சில சமயங்களில் கலவிக்கு முன் வேறு யானை களுடன் சண்டையிட்டு அதனைக் கொன்று விடுவதுமுண்டு. யானைக்கு மதம் பிடிப்பது கலவியில் ஈடுபடுவதற்கான அறிகுறி யல்ல என்பதை அது மதமற்ற காலங்களிலும் கலவியில் ஈடுபடுவ திலிருந்து அறியலாம். மதம் பிடித்த ஆண் யானைக்குப் பெண் யானை மீது ஆர்வம் இருப்பதாகத் தெரியவில்லை என்றும், கலவிக்குப் பின்னும் மதம் அடங்கியதாகத் தெரியவில்லை யென்றும் திரு. ஈ. பி. கீ (E. P. Gee) அவர்கள் குறிப்பிடுகிறார். பெண் யானைக்கும் மதம் பிடிப்பதுண்டென திரு. எம். கிருஷ்ணன் அவர்கள் கூறுகிறார். பெண் யானையின் குணம் மதம் பிடிப்ப தனால் அவ்வளவாக மாறிவிடுவதில்லை. பழக்கப்பட்ட, மதம் பிடித்த யானையைக் கட்டிவைத்துவிடுகிறார்கள். மதம் பிடித்த நிலையில் பாகனையே கொன்றுள்ள யானைகள் உள்ளன. இச்சந் தர்ப்பத்தில் இதனை அதிகக் கடினமான வேலையில் ஈடுபடுத்துவ துண்டு. மதம் பிடித்த காலங்களில் கண்களுக்கும் காதுகளுக்கும் இடையிலுள்ள ஒரு சுரப்பியிலிருந்து ஒருவிதக் கரிய எண்ணெய் வடிகிறது. இதனை மதநீர் வடிதல் எனக் கூறுவர். இது மதம் பிடிக்காத காலங்களிலும் கசிவதைக் காணலாம். மதம் பிடிப்ப தற்கும் இந்நீர் வடிவதற்கும் தொடர்பு இல்லையெனத் தெரிகிறது.

பெண்யானை கலவியில் அதிக ஆர்வம் காட்டுவதில்லை. கலவிக் காலங்களில் ஆணும், பெண்ணும் சேர்ந்து வாழ்கின்றன. அவைகள் இனக் கவர்ச்சி விளையாட்டுக்களில் (Sex Play) அதிகமாக ஈடுபடுகின்றன. இந்நிலையில் தங்களுடைய துதிக்கை, காதுகள், வால் போன்ற உறுப்புக்களை அதிகமாக அசைக்கின்றன. இது அவற்றின் உணர்ச்சி வேகத்தைக் காட்டுகிறது.

மற்ற பாலூட்டிகளில் நடைபெறுவது போலவே யானை யிலும், கலவி நடைபெறுகிறது. ஆண்யானை பெண்ணின் பின்னிருந்து, தன் முன்னங் கால்களைத் தூக்கி, பெண்ணின்

முதுகுப் புறத்தில், தோள் பகுதியில் இரு புறமும் இருக்கும்படி வைத்துக் கொள்கிறது. ஆனால் ஆண் தன் முன்னங் கால்களால் பெண்ணைப் பற்றிக்கொள்வதில்லை. கலவித் தொடர்பு ஏற்பட்ட பின் தன் பின்னங்கால்களை மடித்து மெதுவாகக் கீழ் நோக்கிப் பின்புறமாக வளைத்து உட்கார்ந்திருக்கும் நிலையை ஆண் யானை அடைகிறது. பிறகு ஆண் மெதுவாக நிமிர்கிறது. கலவி சுமார் ஒன்று அல்லது சற்று அதிக நிமிடங்களே நீடிக்கிறது. கலவிக்குப் பின் ஆண் யானை விலகிச் சென்று அமைதியாக நின்று கொள்கிறது. பெண்யானை உணர்ச்சி வசத்தால் மெதுவாக பிளறிக்கொண்டும், காதுகளையும், வாலையும் அசைத்துக் கொண்டும் நிற்கும்.

கருவுற்ற யானை 18—22 மாதங்களுக்குள் குட்டி ஈனுகிறது. குட்டி போட்ட 8—10 மாதங்களுக்குப் பின், பெண் யானை மீண்டும் கலவியில் ஈடுபடுகிறது.

குட்டிபோடும் தருணத்தில் பெண்யானை தலையை அசைத்துக் கொண்டும், துதிக்கையைக் காற்றில் தூக்கி அசைத்துக் கொண்டும் ஒரு பதட்ட நிலையிலிருக்கிறது. குட்டி வெளி வருவதற்குச் சுமார் ஒரு மணி நேரத்திற்கு முன்பிருந்து ஒரு கசிவு தோன்றுகிறது. இந்நிலையில் பெண்யானை மெத்தென்றுள்ள அமைதியான இடத்தைத் தேர்ந்தெடுக்கிறது. யானைக் கூட்டங்களிலுள்ள சில பெண் யானைகள் அப் பெண் யானையைச் சுற்றி நின்று காவல் புரிகின்றன. குட்டி ஈனும் பெண் யானை, மலங்கழிக்கும் நாயைப் போல நின்றுகொள்கிறது. குட்டியின் தலையும் முன்னங்கால் களும் முதலில் வெளி வருகின்றன.

குட்டி வெளிவந்த ஒரு மணி நேரத்திற்குப் பின், கழிவுகள் வெளியேறுகின்றன. குட்டி சுமார் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் படுத்திருந்தப் பின் எழுந்து நின்று நடக்கத் துவங்குகிறது. புதிதாகப் பிறந்த குட்டி சுமார் 100 கி. கிராம் எடை இருக்கிறது. குட்டி எழுந்து பால் குடித்த பின் சுறுசுறுப்பாக விளையாடும். குட்டி இளமையில் துரிதமாக வளர்கிறது.

பெண் யானைக்குத் தன் குட்டியின்பால் தாய்ப் பாசம் மிகுதி. ஒற்றை ஆண் யானையைக் காட்டிலும் குட்டியுடன் உள்ள பெண் யானை மிக ஆபத்தானது. தன் குட்டியைப் பாதுகாக்க வேண்டி மனிதர்களையும், நாய்களையும் துரத்தித் துன்புறுத்துவதுண்டு.

யானை, தொடர்ந்து உணவைத் தின்றுகொண்டேயிருக்கும். இது இலைகள் மூங்கில்தளிர் பசும்புற்கள் போன்ற அனைத்தையும்

தின்னும், மேலும் ஆல் அரசு இலைகளையும், வாழை, தென்னை, கரும்பு போன்றவைகளையும் விரும்பித் தின்கிறது. நவம்பர்—ஜனவரி முடிய பல சமயங்களில் எங்கள் ஊர்ப் புஞ்சைக் காடு களிலும், தோட்டங்களிலும் யானைகள் இரவில் வந்து பயிர்களை மேய்ந்து அழித்துச் செல்வது பொதுவாக ஒவ்வொரு வருடமும் நடைபெறுவதாகும். இரவில் காடுகளிலும் தோட்டங்களிலும் விளைச்சல் காலங்களில் காவல் இருந்து அவற்றைப் பாதுகாக்க நேரிடுகிறது. இரவு முழுவதும் கண் விழித்துக் காட்டு யானைகள் பயிர்களை நாசம் செய்யாமல் இருப்பதற்காக தீ வளர்த்துக் கொண்டும், பந்தங்கள் வைத்துக்கொண்டும், பறையடித்துக் கொண்டும் மிகக் கவனமாகக் காவல் புரிவார்கள். சில சமயங்களில் கூட்டமாக யானைகள் வந்து விளை நிலங்களில் புகுந்துவிடின். அவைகள் தின்று அழிப்பதைக் காட்டிலும், மிதித்து நாசம் செய்வது அதிகமாகிவிடுவதால் விவசாயிகளுக்கு யானைகளினுல் மிக அதிகச் சேதம் ஏற்படுகிறது. விளை நிலங்களில் புகுந்துள்ள யானைக் கூட்டத்தை வெளியேற்றுவது எளிதென்றும், ஒற்றை யானையை வெளியேற்றுவது மிகச் சிரமமென்றும் காவல் புரிபவர்கள் தங்கள் அனுபவத்தைப் பலமுறை கூறக் கேட்டிருக் கிறேன். காட்டு யானைகள் உப்புமண் இடங்களைத் தேடிச் சென்று உப்பு மண்ணைத் தின்பதுண்டு. வளர்ப்பு யானைகள் நாம் உண்ணும் எல்லாவகைச் சைவ உணவுகளையும் விரும்பித் தின்கின்றன. அரிசிச் சோறு, கோதுமை உணவு, வெல்லம் போன்ற அனைத்தும் அவை களுக்கு மிக விருப்பமான உணவாகும். காட்டு யானைகள் பொதுவாக 24 மணி நேரமும் நின்றுகொண்டே இருக்கின்றன.

யானையின் உணவுப்பாதை சுமார் 30 மீ. நீளம் இருக்கிறது. இது, அதன் உடலின் அளவிற்குத் தகுந்த அளவில்லை. இது தின்னும் உணவு சரியாகப் பற்களால் அறைக்கப்படுவதில்லை. மேலும் இரைப்பையிலும், சிறு குடலிலும் உணவு சரியாகச் செரிக்கப்படுவதில்லை. இதனுல் இது போடும் சாணத்தில் நீண்ட நார்களும், குச்சிகளும் செரிக்கப்படாமல் இருப்பதைக் காண லாம். ஒரு சமயத்தில் சுமார் 5 அல்லது 6 உருண்டைச் சாணம் போடும். இவைகள் சுமார் 2 கி. கிராம் எடையிருக்கும். ஒரு நாளைக்கு ஒரு யானை சுமார் 110 கி. கிராம் சாணம் போடுகிறது. யானைச் சாணத்தின் சூடு குறைவதற்குள் அச்சாணத்தின் மீது நிற்பது உடலுக்கு நல்லது என்று எங்கள் கிராமமக்கள் கருது கிறுர்கள். இதனுல் ஏற்படும் நன்மை என்னவென்று தெரிய வில்லை. சில பருவங்களில் யானைச் சாணத்தில் விளாம்பழங்கள் முழுதாக இருப்பதைக் கண்டு, ஆவலோடு எடுத்து உடைத்துப் பார்க்க அவற்றினுள் ஒன்றும் இல்லாமல் வெறுமையாக இருப்

பதைப் பலமுறை கண்டிருக்கிறேன். யானைகள் விளாம்பழத்தை (Wood Apple) நன்கு விரும்பித் தின்கின்றன. அவைகள் விளாம் பழத்தை முழுதாகவே விழுங்கிவிடுகின்றன. பழத்தினுள் உள்ள சதைப்பற்றுக் கரைந்து உணவுடன் கலந்துவிட, முழு ஓடு உடையாமல் சாணத்தின் மூலம் வெளிவந்து விடுகிறது.

ஒரு யானை ஒரு சமயத்தில் கழிக்கும் சிறுநீர் சுமார் 5 லிட்டர் இருக்கும். ஒரு நாளில் சுமார் 50 லிட்டர் சிறுநீர் கழிக்கிறது. யானைகளுக்குத் தூய்மையான நன்னீர் தேவை. நன்கு வளர்ந்த யானை நாளொன்றுக்கு சுமார் 190 லிட்டர் நீர் குடிக்கிறது. ஒருமுறை குடிக்கச் சுமார் 70 லிட்டர் நீர் தேவைப்படுகிறது. நீரைத் தன் துதிக்கையில் உறிஞ்சி எடுத்து வாயினுள் வைத்துத் தொண்டையினுள் ஊற்றிக்கொள்கிறது. யானைகளுக்கு உணவைப் போலவே நீரும் மிக இன்றியமையாதது. கோடைக் காலங்களில் அவைகள் நீர் நிலைகளை அடுத்தே அலைந்துகொண்டிருக்கின்றன. சில சமயங்களில் நீருக்காக வெகுதொலைவு அலைந்து செல்கின்றன. சுமார் 25 வருடங்களுக்குமுன், ஒருநாள் இரவு எங்கள் அண்டை வீட்டாரின் முற்றத்தில் பசு மாடுகளுக்காகத் தொட்டியில் வைக்கப்பட்டிருந்த நீரை ஒரு காட்டுயானை குடித்துச் சென்றுவிட்டது.

கோவை மாவட்டம் சத்தியமங்கலத்திலிருந்து மைசூர் செல்லும் நெடுஞ்சாலையில் சுமார் 12 கிலோ மீட்டர் தொலைவில், மலைச்சாலையின் துவக்கத்தில் பன்னாரி மாரியம்மன் என்ற பிரசித்தி பெற்ற கோவில் இருக்கிறது. அக்கோவிலைச் சுற்றி காடு இருக்கிறது. கோவிலுக்கு அருகில் ஒரு ஓடை இருக்கிறது. பருவ மழை நன்கு பெய்திருந்தால் அதில் நீர் இருக்கும். யானைகள் வெயிற் காலத்தில் பெரும்பாலும் அங்குவந்து நீர் குடித்துச் செல்வதுண்டு. ஓடையில் நீர் இல்லையென்றால் பக்தர்களுக்காகத் தேக்கிவைத்திருக்கும் தொட்டியிலுள்ள நீரைக் குடித்துவிட்டுச் செல்வதுமுண்டு. தொட்டியில் நீர் இல்லையெனில் ஏமாற்றமடைந்து கோபம்கொண்ட யானை நீர்க்குழாய், விளக்குக் கம்பங்கள் போன்றவற்றைப் பிடித்து இழுத்துச் சேதப்படுத்தி விட்டுச் செல்வதுண்டு. இது போன்ற நிகழ்ச்சி சில மாதங்களுக்கு முன்புகூட நடந்தது அங்குள்ளவர்களுக்குத் தெரியும்.

கோடைக் காலங்களில் வெப்பம் தாங்காத யானைகள் நீரில் படுத்துக்கொள்ளும். இவைகள் துதிக்கையில் நீரை எடுத்துத் தங்கள் தலையிலும் முதுகிலும் ஊற்றிக்கொள்கின்றன. நீர் நிறைந்த ஆறு குளங்களில் யானைக்கூட்டம் நீரில் விளையாடுவதும்

உண்டு. நீரில்லையென்றால் வெப்பத்தைத் தணிக்கச் சேற்றில் படுத்துப் புரள்கின்றன. இதனால் உடல் முழுவதும் சேறு பூசப் பட்டிருக்கும். சில சமயங்களில் செம்மண் நிலத்தில் உள்ள நீரில் படுத்துப் புரளுமாதலால், அவைகள் பார்ப்பதற்குச் சிவந்த நிறத்திலுள்ளன.

யானைகள் பொதுவாக நோய் வாய்ப்படுவதில்லை. ஆனால் நோய் வந்துவிடின் அவைகள் மிகவும் மோசமான நிலையை அடைகின்றன. குணமடைய நீண்ட நாட்களாகின்றன. யானையின் வெப்பநிலை 36·3°—36·6° சென்டிகிரேடு வரையிலிருக்கும். யானை அதிக வெயிலைத் தாங்குவதில்லை.

யானைக்குப் பல நோய்கள் வருவதுண்டு. அவற்றில் ஆந்த்ராக்ஸ் (Anthrak), ட்ரிபொனஸோமியாஸிஸ் (Tryponasomiosis), கால் நோய், வாய் நோய், யானை அம்மை, ராபீஸ் (Rhabies) போன்றவைகள் யானைக்கு வரும் ஒருசில நோய்களாகும்.

பொதுவாக ஆண் யானை தனியாகத் திரியும். கலவிக் காலங்களில் கூட்டத்துடன் சேர்ந்துகொள்ளும். கூட்டத்திற்குத் தலைமைவகிப்பது பொதுவாக முதிர்ந்த அனுபவமிக்க பெண் யானைதான். வலிமைமிக்க ஆண் மற்ற ஆண்களுக்குத் தலைமை தாங்கும். இது அடிக்கடி கூட்டத்தைவிட்டுத் தனித்துச் சென்று, தன் விருப்பப்படி வந்து சேர்ந்துகொள்ளும்.

நம் நாட்டில் பல மாநிலங்களில் யானை பிடிக்கப்பட்டாலும், மைசூர் மாநிலத்தில் அதிகமாகப் பிடிக்கப்படுகிறது. யானைகளைப் பிடிக்கும் முறைக்கு 'கெடா' என்பர்.

# 46. முள்ளம் பன்றி

## (Porcupine)

விலங்கியல் பெயர் : ஹிஸ்ட்ரிக்ஸ் இண்டிகா (Hystrix indica)
வரிசை : ரோடன்ஷியா (Rodentia)
குடும்பம் : ஹிஸ்ட்ரிஸிடே (Hystricidae)

முள்ளம் பன்றி நம் நாடு முழுதும் இமயம் முதல் குமரிவரை பரவியுள்ளது. இருப்பினும் இதன் எண்ணிக்கை விரைந்து குறைந்துவருகிறது. முள்ளம் பன்றி என்றதும் முதலில் நம் நினைவிற்கு வருவது அதன் முட்களேயாகும். இம் முட்கள்தான்



படம் II—46.1. முள்ளம் பன்றி

இவ்விலங்கிற்குப் பாதுகாப்பாக அமைந்துள்ளன. முட்கள் இல்லாவிடின், இது எளிதில் ஊன் உண்ணிகளுக்கு இரையாகி இன்று முற்றிலும் மறைந்திருக்கும். முள்ளம் பன்றியின் முட்கள் அதன் உடல் மயிர்களின் மாறுபாடுகளேயாகும் (Modification).

இம் முட்கள் தலையின் உச்சியிலிருந்து உடலின் பின்பகுதி முழுதும் உள்ளன. தலையில் உள்ள முட்கள் எளிதில் வளைந்து நிமிரக் கூடியவைகளாகப் பின்நோக்கி அமைந்துள்ளன. இவைகள் எதிரிகளைத் தாக்குவதற்குகந்ததல்ல. உடலின் முன் பகுதியில் உள்ள முட்கள் சுமார் 30 செ.மீ நீளத்தில் நீண்டு தடித்துக் கூர்மையாக உள்ளன. இவைகள் வில் போன்று வளைந்து நிமிரும் தன்மையுடையன. முதுகின் பின் பகுதியிலும், உடலின் பின் பகுதியின் இரு பக்கங்களிலும் குட்டையான, தடித்த கூர்மை யான முட்கள், நீண்ட முட்களுக்கு இடையிடையே உள்ளன. இவைகள் எதிரிகளின் உடலில் பதிந்தால் ஆழ்ந்த காயங்களை உண்டாக்கும். இம்முட்களில் கருப்பு வெள்ளை வளையங்கள் மாறி மாறி உள்ளன. வாலுக்கு மேல் உள்ள முட்கள் குட்டையாகக் கடினமாக, வெண்மையாகக் கூர்மையுடன் உள்ளன. இவைகள் மிக ஆபத்தானவை. வால் நுனியில் நீண்டு மெலிந்த காம்புள்ள குழல் வடிவான முட்கள் உள்ளன. படம் II—46 2. இவைகளால் இவ்விலங்கிற்குப் பாதுகாப்பு கிடையாது. இவைகள் அசைக்கப் படும்பொழுது ஒரு சலசலப்பு ஒலியை (Rattle) உண்டாக்கு கின்றன.



படம் II—46.2. முள்ளம் பன்றியின் வால்முட்கள்

முள்ளம் பன்றியைத் தாக்கும் விலங்குகள் அதன் தலையைத் தாக்குவதுதான் ஆபத்தற்றது. எதிரி தன்னைத் தாக்க வரும் போது சில சமயங்களில் இது திடீரெனத் திரும்பிப் பின்புறமாக விரைந்து சென்று எதிரியைத் தாக்கி அதன் முகத்திலும் உடலி லும் தன் முட்களை ஆழப் பதித்துக் காயங்களை உண்டாக்கும்.

புலி, சிறுத்தை போன்ற ஊன் உண்ணிகள் இதன் மாமிசத்தை விரும்பித் தின்னும். இவைகள் முள்ளம் பன்றியைப் பிடிக்க முயலும்போது அதன் முட்களால் தாக்கப்பட்டு ஆழ்ந்த காயங் களை அடைகின்றன. சில சமயங்களில் முள்ளம் பன்றியின் முட்கள் எதிரியின் முகத்தில் ஆழப் பதிந்திருப்பதைக் காணலாம். மனிதர் களும் முள்ளம் பன்றியின் மாமிசத்தை விரும்பி உண்ணுகின்றனர். முள்ளம்பன்றி மாமிசத்திற்காகவும் முட்களுக்காகவும் கொல்லப் படுவதால் இவைகள் வெகுவாகக் குறைந்துவிட்டன.

முள்ளம் பன்றியின் கால்கள் குட்டையானவை. ஆனால் அது விரைந்து செல்லும். இது தன் முட்களைச் சிலிர்த்தும், உடலின் மீது படியவைத்தும் சந்தர்ப்பத்திற்கேற்பத் தன் உருவத்தைப் பெரியதாகவும், சிறியதாகவும் தோன்றச் செய்யும். புகைப்படம் II—46.3.



படம் II—46.3. முள்ளம் பன்றி

முள்ளம் பன்றிகள் கற்கள் நிறைந்த குன்றுகளில் உள்ளன. இது எல்லாவகை இடங்களிலும் வாழும் திறமை பெற்றது. இது 2400 மீட்டர் உயரம் வரை பரவியுள்ளது. இது பகல் நேரத்தில்

கற்களிடையே உள்ள சந்து, தானே தோண்டிய வளை அல்லது மற்ற விலங்குகளின் வளையில் தங்கியிருக்கும். விளை நிலங்களுக் கருகில் உள்ள புதர்களிலும் தங்குகின்றது. இது நிலத்தில் தோண்டிய வளையில் பல கிளைகள் உள்ளன. இது தாவர உண்ணி; எல்லாவகைத் தாவர உணவையும் தின்கிறது. இது கொம்பு களையும் எறும்புகளையும் தின்கிறது. இவற்றிலிருந்து கிடைக்கும் சுண்ணும்புப்பொருள் (Calcium) முட்கள் வளர்வதற்கு உதவுகிறது. இது இரவில் உணவைத் தேடி வெளிவருகிறது. இதன் கண்களின் மீது 'டார்ச்' ஒளியை அதிகமாகப் பாய்ச்சினுலும், இது நிலை தவருது, திசை மாருது ஒடிவிடும். மேலும் தன்னைப்பின் தொடர்பவர்களிடமிருந்து தந்திரமாகத் தப்பித்துக்கொள்ளும் திறமையும் இதனிடம் உண்டு.

இது பொதுவாகத் தனித்தே வாழ்கிறது. பருவ காலத்தில் மட்டும் இணைந்து வாழ்கிறது. இணைகள் சேர்ந்து ஒரே வளையில் தங்கியிருக்கின்றன. ஒரு முறையில் 2—4 குட்டிகள் போடுகிறது. பிறந்த குட்டியின் கண்கள் திறந்துள்ளன. குட்டியின் உடல் குட்டையான மென்மையான முட்களால் போர்த்தப்பட்டுள்ளது.

# 47. பெரிய பறக்கும் அணில்
## (Giant Flying Squirrel)

விலங்கியல் பெயர் : பெடௌரிஸ்டா பெடௌரிஸ்டா (Petaurista petaurista)
வரிசை : ரோடென்ஷியா (Rodentia)
குடும்பம் : ஸ்யூரிடே (Sciuridae)

பாலூட்டிகளில் வௌவாலுக்கு அடுத்தபடியாகப் பறக்கும் திறமையுள்ளது ஒரு சில அணில்களே. இவற்றைப் பொதுவாக நாம் பறக்கும் அணில்கள் என்கின்றோம். இவைகள் உண்மையாகப் பறப்பவைகளல்ல. இவைகளுக்குச் சிறகுகள் இல்லை. இவற்றின்



படம் II—47.1. பெரிய பறக்கும் அணில்

உடலின் இரு பக்கங்களிலும் தோல் படலம் அல்லது பாராசூட் உள்ளது. இப் படலம் முன்னங்கால்களையும் பின்னங் கால்களையும் இணைக்கிறது. இப்படலத்தின் உதவியால் இவ்

வணில்கள் காற்றில் மிதந்து சறுக்கிச் செல்கின்றன. இவைகள் சுமார் 35 மீட்டர் இடைவெளியை இவ்வாறு மிதந்து கடக்கும் திறமை பெற்றவை. இவைகள் நடந்து செல்லும்போது மற்ற அணில்களிலிருந்து எவ்வித மாறுபாடும் தெரிவதில்லை. ஆனால் மற்ற அணில்களைப்போலத் துரிதமாகச் செயல் புரிவதில்லை. இவற்றின் கால்களை இணைத்துக் கொண்டுள்ள படலம் வேகத்தைக் கட்டுப்படுத்துகிறது. இவைகள் ஓய்வாக இருக்கும்பொழுது இப் படலம் தெரிவதில்லை. இப்படலம் மீள் திறன் கொண்டுள்ளதால் சுருங்கி உடலுள் படிந்துகொள்கிறது. ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்குத் தாவிக் குதிக்கும்பொழுது இப்படலம் விரிந்துகொள்வதால் இவைகள் லாகவமாக மிதந்து செல்கின்றன. இவைகள் பறக்கின்றன என்று கூறுவதைக் காட்டிலும் நீண்ட தொலைவு தாவிச் செல்கின்றனவெனக் கூறலாம். இவைகள் உயரமான இடத்திலிருந்து தாழ்ந்த இடத்திற்குத் தாவிச் செல்கின்றன என்பதிலிருந்தும், திடீரெனத் தங்கள் திசையை மாற்றிக் கொள்ள இயலாது என்பதிலிருந்தும், இவைகள் பறப்பதில்லையென்பதை அறியலாம். இவைகள் கால்களின் நிலையை மாற்றுவதால், படலத்தின் அமைப்பு மாற்றப்பட்டு விரும்பிய திசையை நோக்கிச் செல்ல ஏதுவாகிறது. இவைகள் அடைய வேண்டிய மரத்தை நெருங்கியதும் மேல் நோக்கிச் சுழன்று வேகத்தைக் குறைத்து மெதுவாகக் கிளையிலோ அல்லது அடிமரத்திலோ அமர்கிறது.

நன்கு வளர்ந்த பெரிய அணில் தலையும் உடலும் சேர்ந்து 45 செ.மீ நீளமிருக்கிறது. வால் மிக நீண்டு (சுமார் 60 செ.மீ நீளம்) அடர்ந்த மயிர்களுடன் உள்ளது. பறக்கும் அணில்கள் அடர்ந்த காடுகளில் உயர்ந்த மரங்களில் வாழ்கின்றன. இவைகள் இரவில் வெளி வருவதால் இவற்றை நாம் எளிதில் காண முடிவதில்லை. இவைகள் பொதுவாக மரப் பொந்துகளிலோ அல்லது அடர்ந்த கிளைகளிலோ தங்குகின்றன. இவைகள் தூங்கும் பொழுது தலையை முன்னங்கால்களுக்கிடையில் வைத்துக் கொண்டு சுருண்டு படுத்துக்கொள்கின்றன.

இவைகள் பழங்கள், விதைகள் போன்றவற்றை உணவாகக் கொள்கின்றன. மேலும் பிசின், ரெசின், மரப்பட்டை போன்றவற்றையும் தின்கின்றன. இவைகள் பூச்சி, இளவுயிர்கள் போன்றவற்றையும் தின்பதுண்டு. இவைகள் கூனி உட்கார்ந்துகொண்டு முன்னங்கால்களால் உணவைப் பற்றிக்கொண்டு தின்கின்றன. இவைகள் பல்வகை ஒலி எழுப்புகின்றன.

பெரிய பறக்கும் பெண் அணில் மரப்பொந்தில் இலை, மயிர் போன்ற மென்மையான பொருட்களைக் கொண்டு கூடு கட்டுகிறது. இவ்வணிலின் சேய்ப் பெருக்கத்தைப் பற்றித் தெளிவாகத் தெரியவில்லை.

# 48. மலை அணில்
## (Indian Giant Squirrel)

விலங்கியல் பெயர் : ரேட்டுஃபா இண்டிகா (Ratufa indica)
வரிசை : ரோடென்ஷியா (Rodentia)
குடும்பம் : ஸ்யூரிடே (Sciuridae)

மலையணில் தென்னிந்தியாவில் அடர்ந்த காடுகளில் காணப்படுகிறது. இது கவர்ச்சியான நிறமுடையது. உயர்ந்த மரங்களில் வாழ்கிறது; பொதுவாக இது கீழே வருவதில்லை. கால்களை விரித்துக்கொண்டு மரத்திற்கு மரம் தாவிச் செல்கிறது.



படம் II—48.1. மலை அணில்

சுமார் 7 மீட்டர் தூரத்தை ஒரே தாவாகத் தாண்டிக் கடக்கக் கூடியது. இது எப்பொழுதும் சுறுசுறுப்பும் விரைந்து செய

லாற்றும் தன்மையுங் கொண்டது. பொதுவாகக் காலையிலும், மாலையிலும் அதிகச் சுறுசுறுப்பாக உள்ளது. மதியத்தில் கிளையில் அமர்ந்து வாலைக் கீழ்நோக்கித் தொங்கவிட்டுக்கொண்டு, கால்களைக் கிளைக்கு இருபுறமும் பரப்பிக்கொண்டு தூங்கும். குளிர்காலத்தில் கூட்டில் சுருண்டு படுத்துக்கொள்கிறது.

மலையணில் ஒதுங்கி வாழும் தன்மையுள்ளது. இதன் ஒலியைக் கேட்க முடிகிறது. ஆனால் இதனை எளிதில் காண வியலாது. சூழ்நிலையில் திடீரென ஏதாவதொரு மாற்றம் காணின், இது உடனே கத்தத் துவங்கிவிடுகிறது. இதை அச்சுறுத்தும்பொழுது, ஓடிவிடாமல் கிளையில் பதுங்கிப் படுத்துக் கொள்கிறது ; அல்லது கிளையின் மறுபுறத்திற்கு நகர்ந்து மறைந்துகொள்கிறது.

மலை அணில் பொதுவாகத் தனித்தோ அல்லது இணையுடனோ வாழ்கிறது. இது சிறு கிளைகளுக்கிடையில் குச்சிகளையும் இலைகளையும் கொண்டு பெரிய உருண்டையான கூடு கட்டுகிறது. இக்கூடு சிறு கிளைகளின் நுனியில் இருப்பதால் வேறு ஊன்உண்ணி விலங்குகள் கூட்டினை அணுகவியலாது. இக்கூடு இலையுதிர்ந்த மரத்திலிருக்கும்பொழுது நன்கு தெரிவதைக் காணலாம். ஒரு அணில் ஒரு சமயத்தில் பல கூடுகளை அருகருகில் கட்டி, ஒன்று தூங்குவதற்கும், மற்றொன்று சேய்ப் பெருக்கத்திற்குமாக இப்படிப் பல தேவைகளுக்குப் பயன்படுத்துகிறது. இதன் சேய்ப் பெருக்கத்தைப் பற்றித் தெளிவாக ஒன்றும் தெரியவில்லை.

# 49. முள்முயல்
## (Hispid Hare)

விலங்கியல் பெயர் : கேப்ரோலாகஸ் இஸ்பிடஸ் (Caprolagus Hispidus)
வரிசை : லகோமார்ஃபா (Lagomorpha)
குடும்பம் : லிபோரிடே (Leporidae)

நம் நாட்டில் மறைந்துவிட்டதாகக் கருதப்படும் பல வன விலங்குகளில் முள்முயலும் (இஸ்பிட் முயலும்) ஒன்று. 1956 லிருந்து இது காணப்படவில்லையென்று பல வன விலங்கு வல்லுனர்கள் கூறுகின்றனர். இன்று இது அழிந்திருந்தால் நாம் வேதனையும், வெட்கமும் படவேண்டியதொன்ருகும். ஒரு உயிரை அழிய விட்டுவிடுவதும், அழித்துவிடுவதும் எளிது. ஆனுல் ஒரு சிறு உயிரைக்கூட நம்மால் உண்டாக்க முடியாது. இந்நிலையில் ஒரு உயிரை நம் கவனக் குறைவாலோ அல்லது தீய செயல்களாலோ அழியவிடுவது பெருங்குற்றமாகும். இது அந்நாட்டிற்கு மட்டுமல்ல, மனித சமுதாயத்திற்கே செய்த பெருந்தீங்காகும். இத்தகையத் தீய செயல்களில் ஈடுபடுபவர்களின் மீது தக்க நடவடிக்கை எடுத்துத் தண்டிக்கவேண்டும். அழிந்த பின் குற்றவாளிகளின் மீது நடவடிக்கை எடுப்பதைக் காட்டிலும் இயற்கைச் செல்வங்கள் அழிந்துவிடாமல் இருக்க ஆவன செய்தலே சிறந்ததாகும்.

சுமார் 15 ஆண்டுகளாக இதனை யாரும் கண்டதாகச் சான்றுகள் இல்லை. இந்நிலையில், தற்போது உலக வன விலங்கு மானியக் குழுவின் (World Wild Life Fund) உதவியால் இன்று முள்முயல் (இஸ்பிட் முயல்) அஸ்ஸாம் தேயிலைத் தோட்டப் பகுதிகளில் இருப்பதாக அறிகிருேம். 1971 ஏப்ரல் 22ந் தேதி திரு. வீரேந்திர சிங் (Veeranthra Singh) என்பவர் அஸ்ஸாம் மாநிலத்தில் ராஜகர் காட்டிற்கும் அட்டரீகாட் தேயிலைத் தோட்டத்திற்கும் இடையிலுள்ள புதர்ப் பகுதியில் ஓர் முதிர்ந்த

ஆண் முள்முயலைப் பிடித்தார். இம் முள்முயலைத் திரு. ஜெரிமி ஜே. சி. மாலின்சன் கண்டு ஆய்ந்தார். தேயிலைத் தோட்டத்து உரிமையாளர்கள் முள் முயல்களைப் பாதுகாக்க முன் வந்திருப்பது மிகவும் போற்றுதற்குரியது. வனவிலங்குகளின் பாதுகாப்பில் அக்கறை உள்ளவர்கள் அனைவரும் தங்கள் நன்றியைத் தெரிவிப்பார்களென்பதில் ஐயமில்லை. இந்நற் செயலால், வனவிலங்குகளைக் காப்பது அரசின் பொறுப்பு மட்டுமின்றி, பொது மக்களுடைய கடமையுமாகும் என்பதனை அனைவரும் அறிவது நலம்.



படம் II—49.1. முள் முயல்
(புகைப்பட உதவி திரு. ஜெரிமி ஜே. சி. மாலின்சன். துணை இயக்குனர், ஜெர்சி வனவிலங்கு பாதுகாப்பு நிறுவனம்)

முள்முயல் முன்பு உத்திரப்பிரதேசம் முதல் அஸ்ஸாம் மாநிலம் வரையிலுள்ள இமயமலையின் அடிவாரப் பகுதியில் பரவி இருந்தது. இதன் உடலில் தடித்த முரட்டு ரோமங்கள் உள்ளன. இதன் காதுகள் சிறியவை. திரு. ஸடெர்ன்டேல் (Sterndale) அவர்களின் விளக்கப்படி முள்முயல்களுக்குச் சிறிய கண்களும், குட்டையான பின்னங்கால்களும், தடித்த முட்களைப் போன்ற முரட்டு ரோமங்களும், அவற்றினிடையிடையே நீண்ட கருத்த

ரோமங்களும், முதுகுப்புறம் கரும் பழுப்பு நிறமும், வயிற்றுப் பகுதி அழுக்குப் படிந்த வெண்மை நிறமும், பழுப்பு நிற வாலும் உள்ளன. முள் முயல் அளவில் முயலைப் போன்றே இருக்கும். ஆனால் அதன் காதுகள் சுமார் 3 அங்குலம் குட்டையாக உள்ளன. இதன் வால் சுமார் 2 அங்குல நீளம் இருக்கிறது.

திரு. ஷெப்பீர் (Shebbeare) அவர்கள் 1907—1911 வரை அஸ்ஸாம் மாநிலத்திலுள்ள கோல்பாரா காட்டுப் பிரிவில் (Gaolpara Forest Division) பல முறை இதனைப் பார்த்ததாகவும், 3 முதல் 4 அடி உயரம் வளரும் உலு (Ulu) என்னும் புற்களினூடே இது காணப்பட்டதாகவும் குறிப்பிடுகிறார். இது உத்திரப் பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களில் பரவியிருந்தது, இதனைப் பலர் பலமுறை பார்த்திருக்கின்றனர். இதற்குச் சான்றுகள் உள்ளன. ஆனால் 1956ம் வருடத்திற்குப் பின், தற்போது உலக வனவிலங்கு மானியக் குழு கண்டுபிடித்த நாள் வரையில் இதனை யாரும் பார்த்ததாகத் தெரியவில்லை. இதிலிருந்து இது வெகுவாகக் குறைந்துவிட்டதென்று நன்கு புலனாகிறது. தற்போது எஞ்சியுள்ளவற்றை அழித்துவிடாமல், தக்க நடவடிக்கை எடுத்துப் பாதுகாக்கவேண்டும். இதனைப் பாதுகாக்கப் பொது மக்களும் ஒத்துழைக்க வேண்டும்.

# 50. அலங்கு (பங்கோலின்)
## (Pangolin)

விலங்கியல் பெயர் : மேனிஸ் க்ராஸ்ஸிகாடேடா (Manis Crassicaudata)
வரிசை : ஃபோலிடோட்டா (Pholidota)

அலங்குகள் நம் நாடு முழுவதிலுமுள்ள மலைப் பகுதிகளிலுள்ளன. அவைகள் பகலில் பொந்துகளிலும், பாறைகளுக்



படம் II—50.1.
அலங்கு (பங்கோலின்) உடல்மீது எறும்புகள் உள்ளதைக் காணலாம்.

கிடையிலுள்ள சந்துகளிலும், சுருண்டு படுத்துக்கொள்வதாலும்,

இரவில் மட்டுமே வெளிவருவதாலும் இவைகள் நமக்கு அதிக மாகத் தென்படுவதில்லை.

அலங்கின் உடல் கடினமான செதில்களால் போர்த்தப் பட்டுள்ளது. பாலூட்டிகளில் உடல் முழுதும் செதில்கள் கொண்ட விலங்கு இது ஒன்றே. தலையின் மேற்பகுதி, உடலின் முதுகுப் பகுதி, பக்கங்கள், வால், கால்களின் வெளிப் பகுதிகள்



படம் II—50.2. அலங்கு (பங்கோலின்) சுருண்டு படுத்துள்ள நிலை.

ஆகிய அனைத்தும் ஒன்றன் மீது ஒன்று படிந்துள்ள பெரிய பெரிய செதில்களால் போர்த்தப்பட்டுள்ளன. இச் செதில்கள், இதன் மயிர்களின் மாறுபாடுகளே (Modifications) ஆகும். வயிற்றுப் புறத்திலும், செதில்களுக்கு இடையிலும் முரட்டு மயிர்கள் பரவ லாக வளர்ந்துள்ளன. இது துன்புறுத்தப்பட்டால் சுருண்டு உருண்டையாகப் படுத்துக்கொள்கிறது. சுருண்டுப் படுத்துக் கொள்ளும் அலங்கைப் பிரிப்பது இயலாத காரியம்.

அலங்கு, எறும்புகளையும், கரையான்களையும் தின்கிறது. எறும்புப் புற்றையும், கரையான் புற்றையும் தோண்டுவதற்கேற்ப இதன் முன்னங்கால்களில் உறுதியான மழுங்கிய பின்னோக்கி வளைந்துள்ள நகங்கள் உள்ளன. இது எறும்புகளைத் தின்பதற்காக மரங்கள் மீது ஏறுவதும் உண்டு. இது எறும்புகளையும், கரையான்களையும் நுகர்ந்து அறிந்துகொள்கிறது. இதன் கண்களும், காதுகளும் மிகச் சிறியனவாக உள்ளன. இதனால் இதற்குப் பார்வையுணர்வும், செவியுணர்வும் குறைவு. அலங்கு மிக மெதுவாக நடக்கும். இது நகரும்பொழுது தன் முதுகை வளைத்துக் கொண்டு, நிலத்தில் உறையாமல் வாலை மேலே தூக்கிக் கொண்டு, நடக்கிறது. இது தன் பின்னங்கால்களால் நிமிர்ந்து நின்று பார்ப்பதும் உண்டு.

இதன் இனப் பெருக்கத்தைப் பற்றிக் குறிப்பாக ஏதும் தெரியவில்லை. வருடம் முழுவதும் இது குட்டி ஈனுவதாகத் தெரிகிறது. தென்னிந்தியாவில் ஜூலை மாதத்தில் ஒன்று, குட்டி ஈன்றதாகக் குறிப்புள்ளது. பொதுவாக ஒரு குட்டியே ஈனுகிறது. சில சமயங்களில் இரண்டு குட்டிகள் ஈனுவதும் உண்டு. தாய், தன் குட்டியைத் தன் வாலின் மீது குறுக்காக இருக்க வைத்துக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளச் செய்து, நிலத்தில் படாமல் வாலைத் தூக்கிக் குட்டியைச் சுமந்து செல்வதுண்டு. ஏதாவது அச்சுறுத்தல் (Alarm) ஏற்பட்டால், தாய் இருக்கமாகச் சுருட்டிப் படுத்துக் கொள்ளும். குட்டியைத் தன் வயிற்றுப் பகுதியின் இடையில் செதில்களால் மூடி மறைத்துப் பாதுகாப்பாக வைத்துக் கொள்ளும்.

நன்கு வளர்ந்த அலங்கின் தலையும் உடலும் சேர்ந்து சுமார் 75 செ. மீ. நீளமும், வால் 45 செ. மீ. நீளமும் இருக்கும்.

அலங்குகள் வளைகள் தோண்டி அதனுள் வாழ்கின்றன. ஆண், பெண், குட்டி அனைத்தும் ஒரே வளையில் வாழ்வதும் உண்டு. அலங்கின் மாமிசத்தைக் கிராம மக்கள் விரும்பி உண்கிறார்கள். இதன் செதில்கள் மருத்துவத்திற்குப் பயன்படுவதாகக் கருதப் படுகிறது.

# 1. பறவைகள்

பறவைகளும் பாலூட்டிகளைப் போன்றே வெப்ப இரத்தப் பிராணிகளாகும் (Warm Blooded Animals). விலங்கு வகைகள் அனைத்திலும், பறவைகளும் பாலூட்டிகளுமே இச் சிறப்புத் தன்மையைப் பெற்றுள்ளன. இக் குணத்தால் இவ் விலங்குகளின் உடல் வெப்பம், சூழ்நிலையின் வெப்ப நிலைக்கேற்ப மாறுபடாமல் ஒரே சீராக உள்ளது. இதனால், இவ்விரு வகை விலங்குகளும் உலகின் எல்லா இடங்களிலும் எல்லாவகைச் சூழ்நிலைகளிலும் வாழும் தகுதி பெற்றுள்ளன. பறவைகள் தங்கள் உடல் வெப்பத்தால் அடைகாத்துக் குஞ்சுகள் பொறிக்கச் செய்கின்றன.

பறவைகள், இறகுகளால் போர்த்தப்பட்ட இரண்டு கால்களை உடைய விலங்குகளாகும். இவற்றில் பெரும்பான்மையான பறவைகள் பறக்கும் திறமையும், கூடுகட்டி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் தன்மையும் கொண்டவை. ஆனால் அவற்றில் எவ்வளவு வேறுபாடுகள் உள்ளன! நம் கட்டை விரல் பருமனேயுள்ள தேன் சிட்டிலிருந்து ஆள் உயரம் உள்ள தீப் பறவை ஈராக அளவு வேறுபாடுகள்; பறக்கவே இயலாத பென்குவின் (Penguin) பறவையிலிருந்து ஆயிரக் கணக்கான கிலோ மீட்டர் தூரம் பறக்கும் ஆர்டிக்டெர்ன் (Artic Tern) போன்ற பறவைகள்; கர்ண கொடூரமாகக் கத்தும் (கரையும்) காகத்திலிருந்து, இனிய கீதம் பாடும் குயில்கள்; நிலத்தைப் பறித்து முட்டையிடும் கவுதாரியிலிருந்து தற்காலப் பொறியியல் சாதனமும் செய்ய இயலாத வகையில் கூடு கட்டும் தூக்கணாங் குருவிகள்; தேனை குடிக்கும் தேன் சிட்டிலிருந்து ஊன் தின்னும் கழுகுகள்; உலோகத்தைத் தவிர்த்து மற்ற எதையும் தின்னும் அனைத்துண்ணிக் காகங்கள்; கவர்ச்சியற்ற பழுப்பு நிறத்தையுடைய காடை முதல் கண்டோர் மயங்கும் எழில் மிக்க மயில், பஞ்ச வர்ணக்கிளி, ஆக எத்தனை எத்தனை விதப் பறவைகள்! மனிதனுடனேயே ஒன்றிவாழும் பறவைகள்; மனிதனின் சந்தடியே விரும்பாத பறவைகள்;

முட்டையிலிருந்து வெளி வந்ததும் தன் தாயுடன் ஓடித்திரிந்து இரையுண்ணும் குஞ்சுகள்; அடையைவிட்டுப் பல நாட்கள் அகல இயலாத குஞ்சுகள்; இறகுகள் நன்கு போர்த்தப்பட்ட குஞ்சுகள்; இறகுகளே அற்ற குஞ்சுகள் இப்படி எண்ணற்ற வேறுபாடுகள் கொண்ட பறவைகள்! இவை இறகு என்ற ஓர் போர்வையினுல் போர்த்தப்பட்டுள்ளன.

இன்று உலகத்தில் சுமார் 8650 பறவை இனங்கள் உள்ளன. அவற்றில் சுமார் 1200 இனங்கள் நம் நாட்டில் உள்ளன. இவைகள் சுமார் 75 குடும்பங்களாக (Families) 20 வரிசைகளில் (Orders) அடங்கியுள்ளன. பல்வேறு இனப் பறவைகள் நம் நாட்டிலிருப்பதற்குக் காரணம், நம் நாட்டிலுள்ள பல்வகை சூழ்நிலைகளேயாகும், துருவத்தை யொத்தக் குளிர் சூழ்நிலையைக் கொண்ட இமயமலைப் பகுதியும், வெப்பக் காட்டுப் பகுதியும், மித வெப்பப் பகுதியும், பாலை நிலங்களும், அடர்ந்த காட்டுப் பகுதிகளும், பரந்த புல்வெளிகளும், விளை நிலங்களும், ஆறுகளும், குளங்களும், கடற்கரைப் பகுதிகளும், பல்வகை இனப்பறவைகளின் தேவைக்கேற்ற வாழ்விடங்களாக (Habitats) இருப்பதேயாகும். உலகத்திலுள்ள பெரும்பான்மையான பறவை இனங்களின் (Species) பிரதிநிதிகள் நம் நாட்டில் உள்ளன.

பறவைகளைப் பற்றி அறிந்துகொள்ள அவற்றின் உருவ அமைப்பு, நிறம், அலகு, கால்கள், அவற்றின் பழக்க வழக்கங்கள், சேய்ப் பெருக்கப் பழக்கங்கள் போன்றவற்றை உற்றுக் கவனித்தல் வேண்டும். இவைகளின் அடிப்படையில்தான் பறவைகள் வகைப் படுத்தப்படுகின்றன. பறவைகளை வகைப்படுத்தவும், அவற்றைப் பொதுவாகப் பார்த்து மகிழவும் ''பறவையைக் கண்காணித்தல்'' (Bird Watching) தேவை. பறவைகளைக் கண்காணித்தல் ஒரு சிறந்த பொழுது போக்கு மட்டுமின்றி பறவைகளைப் பற்றிய அறிவை வளர்க்கவும் உதவுகிறது. பறவைகளைக் கண் காணிப்பதற்குச் சில முறைகள் உள்ளன; அவற்றை அடுத்த அத்தியாயத்தில் காண்போம்.

# 2. பறவையைக் கண்காணித்தல்
(Bird Watching)

''பறவையைக் கண் காணித்தல்'' நம் நாட்டில் சமீப காலத்தில் தோன்றியதே. சுதந்திரம் அடைவதற்கு முன் நம் நாட்டில் பறவைகளைப் பற்றி ஆராய்ந்தவர்கள் பெரும்பாலும் ஆங்கிலேயர்களேயாவர். அவர்கள் பல்வேறு துறைகளில் இருந் திருந்தாலும், பலர் தங்கள் பொழுதுபோக்கிற்காகவும், சிலர் பறவைகளைப் பற்றி அறிந்துகொள்ளவேண்டும் என்ற ஆவலி ஞலும் ஆராய்ந்து அவற்றைப் பற்றிய குறிப்புக்களும் புத்தகங் களும் எழுதிச் சென்ருர்கள். அதற்குப்பின் 1862-64ல் திரு. J. R. ஜெர்டன் (J. R. Jerden) எழுதிய ''இந்தியப் பறவைகள்'' (The Birds of India) என்னும் புத்தகம் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும். பிரிட்டிஷ் இந்தியாவின் விலங்கினங்கள் (Fauna of British India) என்னும் தொடரில் வெளிவந்த பறவைகளைப் பற்றிய புத்தகமும் பம்பாய் இயற்கைக் கழக வெளியீட்டின் (Journal of Bombay Natural History Society) ஸ்ட்ரே ஃபெதர் (Stray Feather) என்ற சஞ்சிகையும் குறிப்பிடத்தக்கவைகள்.

விடுதலைக்குப் பின், பறவைகளைப் பற்றிய அறிவியற் புத்தகங் களும், ''பறவையைக் கண்காணித்தலும்'' குறிப்பிடத்தக்க வகையில் அதிகரித்துள்ளன. டாக்டர் ஸலீம் அலியின் ''இந்தியப் பறவைகள்'' என்ற புத்தகமும் (The Book of Indian Birds By Dr. Salim Ali), திரு. விஸ்லரின் ''இந்தியப் பறவைகளின் பிரபலக் கைப்பிரதி'' (The Popular Book of Indian Birds By Whistler) என்ற புத்தகமும் குறிப்பிடத் தக்கவைகளாகும்.

முற்காலத்தில் பறவைகளைப் பற்றி ஆராய்ந்தவர்கள், அவை களைப் பிடித்து வந்து (பொதுவாகக் கொன்று) அவற்றின் உருவ அமைப்பை ஆய்ந்து விளக்கங்களை எழுதினுர்கள். அது முற்றிலும்

சரியல்ல என்பதைப் பறவையியல் வல்லுனர்கள் (Ornithologists) உணர்ந்து, பறவைகளைக் கண்காணித்து, அவற்றின் தோற்றம், உடல் அமைப்பு, இருப்பிடம், சமூக வாழ்க்கை, கூடு கட்டும் முறை, உறவு முறை போன்ற அனைத்தையும் நன்கு ஆராய்ந்து தொகுத்து, பின் வகைப்படுத்துதல் (Classification) சிறந்தது என அறிந்தார்கள். இத்தகைய அறிவைப் பெறுவதற்குப் ''பறவையைக் கண்காணித்தல்'' இன்றியமையாததாகும். அதற்கு (1) ஒரு பைனுகுலர் (Binocular) (2) ஒரு நோட்டுப் புத்தகம் (3) பறவையைப் பற்றிய குறிப்புப் புத்தகம் ஆகியவைகள் தேவை.

பைனுகுலர், பொருட்களை மிகவும் அருகில் தக்க அளவு பெரிதாக்கிக் காட்டக் கூடியதாக இருத்தல் வேண்டும். பார்த்த பறவைகளின் உறுப்புக்களையும், குணங்களையும் தெளிவாக நோட்டுப் புத்தகத்தில் குறித்துக் கொள்ளவேண்டும். பறவைகளைக் கண்காணிக்கும் பொழுது சில பறவைகள் இலைகளின் மறைவில் இருக்கலாம். அவைகள் சரியாகப் புலப்படா. மேலும் அவைகள் உடனே மறைந்து விடலாம். அத்தகைய சூழ்நிலையில் காணும் பறவையின் ஒரு சில முக்கிய உறுப்புக்களான அலகு, கால் போன்றவற்றின் அமைப்பு, அளவு, நிறம் போன்றவற்றை நன்கு கவனித்து குறித்துக் கொள்ளவேண்டும். நன்கு காணக் கூடிய பறவையின் பருமனையும், கால், அலகு போன்ற உறுப்புக் களையும், கழுத்தின் நிறம், முதுகின் நிறம், மார்பின் நிறம், இறக்கையின் நிறம், வாலின் நிறம் போன்றவற்றையும் குறித்துக் கொள்ள வேண்டும். வேகமாகச் செல்லும் பறவையின் நிறம் நம்மை ஏமாற்றத்திற்குள்ளாக்கி விடுமாதலால் அதில் அதிகக் கவனம் செலுத்தல்வேண்டும். மேலும் பார்த்த பறவையைப் புகைப்படம் எடுத்துக்கொள்ளுதல் நலம். புகைப்படத்தின் உதவியைக் கொண்டு எல்லா நிற வேறுபாடுகளையும் பிரித் துணருதல் இயலாது. இந்நிலையில் நாம் எழுதிக்கொள்ளும் குறிப்பு மிக உதவி புரியும். நாம் எழுதும் குறிப்பில் எவ்விதத் தவறும் ஏற்படாதிருத்தல் வேண்டும். இப் பறவை காணப்பட்ட இடம், அது அமர்ந்திருந்த இடம், அதன் சூழ்நிலை, அது ஏதாவது உணவு தின்று கொண்டிருந்திருந்தால் அது தின்ற உணவு போன்றவைகளையும் அறிந்துக் கொள்ள வேண்டும். மேலும் அப் பறவையைப் பார்த்த காலம், அதனுடன் வேறு பறவையிருந்தால் அதன் அமைப்பு; பறவை கூடு கட்டியிருந்தால், கூட்டின் அமைப்பு, கூடு இருக்குமிடம், அதில் முட்டையிருந்தால், முட்டையின் அளவு, நிறம், எண்ணிக்கை, அமைப்பு; குஞ்சுகள் இருப்பின் அவற்றின் எண்ணிக்கை, தோற்றம் ஆகிய

அனைத்தையும் தெளிவாகக் குறித்துக் கொள்ளவேண்டும். ஒரு பறவை நீரிலோ அல்லது நீரோரத்திலோ இருப்பின் அதன் இருப் பிடத்தைக் கொண்டு அது நீர்ப் பறவை என்றும் அல்லது மரங் களில் இருந்தால் அது வேறு இனத்தைச் சார்ந்தது என்றும் தெரிந்துணரலாம் அல்லவா ? இது போன்றே அலகின் அமைப்பு, நிறம் ஆகியவைகளைக் கொண்டு அதன் உணவுப் பழக்கத்தையும், வாழும் சூழ்நிலை போன்றவற்றையும் அறியலாம். இறகுகளின் வண்ணம் பறவையின் இனப் பெருக்க காலத்தை எடுத்துக் காட்டலாம். இத்தகைய குறிப்புக்கள் அனைத்தையும் கொண்டே ஒரு பறவையைப் பிரித்துக் கண்டுபிடிக்க (Identification) வேண்டும். இதற்குத் துணையாக அப்பறவையின் படம் ஒன்றை வரைந்துகொள்ளுதல் சாலச் சிறந்தது. அனுபவமில்லாதவர் களுக்கு ஆரம்ப காலத்தில் பறவைகளைப் பிரித்துக் கண்டு பிடிப் பதில் சிரமம் நேரிட்டால், அவர்கள் தங்களுடன் கொண்டு சென்றுள்ள புத்தகத்தின் துணைகொண்டு பறவைகளைப் பிரித்துக் கண்டுபிடிக்கலாம். நாளடைவில் அனுபவத்தின் பயனாக இது எளிதாகிவிடும்.

பறவைகளைக் கண்காணிக்கும்பொழுது அவற்றைத் திரைப் படமாக்கி, பின் அதனைத் திரையிட்டு அப் பறவைகளை நன்கு கவனித்து அவற்றின் உருவம், பறக்கும் முறை போன்றவற்றை அறிய முடியும். மேலும் அரிதாக உள்ள பறவைகளைத் திரைப் படங்கள் மூலம் மற்றவர்களுக்கும் காண்பித்து, அதனைப் பற்றிய செய்திகளைச் சேகரிக்க உதவும்.

பறவைகளைக் கண்காணித்து அவற்றைப் பிரித்துக் கண்டு பிடித்தல் ஒரு சிறந்த, இனிய பொழுது போக்கு மட்டுமல்லாது, பறவைகளைப் பற்றிய அறிவைப் பெருக்குவதற்குப் பெரிதும் உதவியாக உள்ளது. இதில் முழு மனத்துடன் ஈடுபடுகிறவர்கள் சிறந்த பறவை வல்லுனர்களாக ஆவதில் ஐயமில்லை.

# 3. பறவைகளின் பயன்கள்

(The Usefulness of Birds)

பறவைகள் வேட்டையாடப் பட்டதாலும், அவற்றின் வாழ் விடங்கள் அழிக்கப்பட்டதாலும் பெரும் அளவு மறைந்துவிட்டன. இந்நிலை நீடிக்குமாயின் நம்நாட்டிலுள்ள பல பறவையினங்கள் முற்றிலும் மறைந்துவிடும். பறவைகள், காண்பதற்குமட்டும் அழகுடையனவல்ல ; அவைகள் பல்வகையில் நமக்குப் பயன் தருவனவாய் உள்ளன. பண்டைக் காலங்களில் செய்திகளை அனுப்பப் புறுக்கள் பயன்படுத்தப்பட்டன:

பறவைகளில் சில தானியக் கதிர்களைத் தின்றும், காய், கனி, பூந்தோட்டங்களை அழித்தும் நமக்குச் சேதம் விளைவிக்கின்றன; நமக்கு நன்மை பயக்கும் பூச்சிகளைத் தின்று அழிக்கின்றன ; மனிதனுக்கு உணவாகப் பயன்படும் மீன்களைத் தின்கின்றன. சில பறவைகள் இடைநிலை விருந்தோம்பிகளாக (Intermediate Hosts) இருப்பதால், ஒட்டுண்ணிகளையும் (Parasites), வைரஸ் களையும் (Virus) பல இடங்களுக்கு எடுத்துச்சென்று கால்நடை களுக்கு நோய்களைப் பரப்புகின்றன. இன்னும் சில பறவைகள் நாம் விரும்பத்தகாத தாவரங்களில் மகரந்தச்சேர்க்கை நடை பெறவும், நச்சு விதைகளைப் பரப்புவதற்கும் சாதனங்களாக (Agents) உள்ளன. பொதுவாகப் பறவைகளால் ஏற்படும் நன்மை, தீமைகளைச் சீர்தூக்கி நோக்கின், அவற்றால் உண்டாகும் நன்மைகள் மிக அதிகமாகும். பறவைகளினால் நமக்கு ஏற்படும் நன்மைகளை இங்குக் கவனிப்போம்.

பல பறவைகள் அழகுக்காகவும், சில பறவைகள் பேசும் திறமைக்காகவும் வீடுகளில் வளர்க்கப்பகின்றன.

பொதுவாக இன்று மனிதன் உயர்ந்து விளங்குகிறான். இருப்பினும் தனக்குத் தீங்கிழைக்கவல்ல பூச்சிகளை அவனால்

அழித்துவிட முடியவில்லை. இன்று பூச்சிகள் மிகப் பெருகியுள்ளன. இன எண்ணிக்கையில் பூச்சிகள், மற்ற விலங்குகள் அனைத்திற்கும், அதிகமாக உள்ளன. எத்தகைய வீரியமுள்ள பூச்சிக்கொல்லி மருந்துகளாலும் இவற்றை முற்றிலும் அழித்துவிட முடியவில்லை. இதனுல் இது பூச்சியுகம்—"The Age of insects" எனத் திருமதி ஆஸா சாண்ட்லர் (Asa Chandler) அவர்கள் கூறுகிருர். இத்தகைய பூச்சிகளைப் பறவைகள் பிடித்துத் தின்று அவற்றின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்துகின்றன. இன்று நம்நாட்டிலும், மற்ற நாடுகளிலும் பெரிய பறவைகள் வெகுவாக வேட்டையாடப் பட்டுப் பல குறைந்தும் சில மறைந்தும்விட்டன. பூச்சிகளைத் தின்னும் பறவைகளின் எண்ணிக்கை குறைந்துவிடவே, பூச்சிகள் மிகுதியாகப் பெருகிவிட்டன. இன்று நம்நாட்டிலும், மற்ற நாடு களிலும் வெட்டுக்கிளிகளின் இடப்பெயர்ச்சிக்கும், தொல்லை களுக்கும் காரணம், அவற்றைத் தின்னும் பறவைகள் குறைந்து விட்டதேயாகும். வெட்டுக்கிளியின் எண்ணிக்கை அதிகரித்து விடவே, அவைகளிடையே உணவிற்கும், இருப்பிடத்திற்கும் நெருக்கடி ஏற்பட்டு, அவைகள் தங்கள் தேவைகளைத் தேடிச் செல்கின்றன. இதனுல் விளை பயிர்கள் மிகுதியாக அழிக்கப்பட்டுப் பெருநஷ்டம் ஏற்படுகிறது.

சில பறவைகள் மனிதர்களுக்குத் தீமை விளைவிக்கின்ற எலி இனங்களைப் பிடித்துத் தின்கின்றன. எலி இனங்கள் மிக விரைவில் அதிகரிக்கக் கூடியவைகள். அவைகளின் எண்ணிக்கை அதிகரித்து, விளைபயிர்களை அழிப்பது நாம் அறிந்ததே. நம்நாட்டில் எலி ஒழிப்பு பெரும் பிரச்சனையாக உள்ளது. இதற்காக விவசாயத் துறை எல்லா முயற்சிகளையும் செய்துவருவதை நாம் அறிவோம். எலி இனங்களால் விளை பயிர்களுக்கும், தானியங்களுக்கு மட்டும் சேதம் ஏற்படுவதில்லை-எலிகளால் பல நோய்களும் பரவுகின்றன. பிளேக் (Plague) எலிகளால் ஏற்படுவதே. இத்தகைய தீய எலி இனங்களை ஆந்தை, பருந்து, கழுகு போன்ற பறவைகள் பிடித்துத் தின்று அவற்றின் எண்ணிகையைக் கட்டுப்படுத்துகின்றன.

காகம், கழுகு, பருந்து போன்ற பறவைகள் எல்லாவகை இறந்த உடல்களையும் தின்று சுற்றுப்புறத்தைத் தூய்மைப்படுத்து கின்றன. இவைகள் சிறந்த தோட்டிகளாக (Scavengers) இருக்கின்றன. இறந்த உடல்களை இவைகள் தின்று தூய்மைப் படுத்தவில்லையெனில், அவைகள் பல நோய்களுக்குக் காரணமாகி விடும் என்பதை நாம் அறிவோம்.

சில சிறு பறவைகள் மலர்களிலுள்ள தேனைக் குடிக்கின்றன. வண்ணத்துப்பூச்சி, தேனீக்கள், தேன் குடிக்கும் வண்டுகள்

போன்றவைகள் அயல் மகரந்தச் சேர்க்கைக்குப் பெரிதும் காரணமாக இருக்கின்றன. அதே போன்று தேன்சிட்டுப் போன்ற பறவைகள் அயல் மகரந்தச் சேர்க்கை நடைபெற (Cross Pollination) பெரிதும் உதவுகின்றன. இப்பறவைகள் மலர்களின் வண்ணத்தால் ஈர்க்கப்பட்டு, தேன் குடிக்கச் செல்கின்றன. அவைகள் தேன் குடிக்கும்பொழுது அவற்றின் அலகு, தலை, இறக்கை ஆகிய உறுப்புக்களில் மகரந்தத் தூள்கள் ஒட்டிக்கொள் கின்றன. இம் மகரந்தத் தூள்கள் வேறு பூக்களின் சூல் முடியை அடைந்து, அயல் மகரந்தச் சேர்க்கையை ஏற்படுத்துகின்றன.

பறவைகள் மகரந்தச் சேர்க்கைக்கு மட்டுமின்றி, விதை பரவுதலுக்கும் காரணமாகின்றன. பல பெரிய மரங்களின் மீதும், வீட்டு மதிற்சுவர்களின் மீதும் ஆல், அரசு, அத்தி போன்ற செடிகள் வளர்ந்திருப்பதைக் காணலாம். இவைகள் எப்படி அங்கு வந்தன? இப்பழங்களைப் பறவைகள் விழுங்கிவிடுகின்றன. பழங்களினுள் உள்ள விதைகள் செரிநொதிகளால் பாதிக்கப் படாமல் பறவைகளின் எச்சத்தின் (மலக்கழிவு—Excreta) மூலம் வெளியேறுகின்றன. இவ்வாறு விதைகள் பல்வேறு இடங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டு 'விதைப் பரவுதல்' (Seed Dispersal) நடைபெறுகிறது. தென் இந்தியாவில் சந்தனமரங்கள் இம் முறையில் பரவுகின்றன. காக்கைகள் வேப்பம் பழங்களைத் தின்று விதைகளை வெளியேற்றுகின்றன.

பெரும்பாலான பறவைகள் உணவிற்காக வேட்டையாடப் படுகின்றன. காடை, கவுதாரி, புறா, கொக்கு, நாரை போன்ற பறவைகளைப் பிடித்துவந்து நகரங்களில் விற்பதை நாம் அறிவோம். பறவைகளின் மாமிசம் மிகச் சுவையாக இருப்பதால் தான் பெரும்பாலான பறவைகள் வேட்டையாடப்பட்டு மறைந்து விடும் நிலையிலுள்ளன. இந்தியப் பெரிய பஸ்டார்டு (The Great Indian Bustard—வரகுக்கோழி) என்னும் பறவையின் சுவையான மாமிசத்திற்காக அவை பெருமளவு வேட்டையாடப்பட்டு வருகின்றன. இது முற்றிலும் மறைந்துவிடாதிருக்க, இந்திய வனவிலங்குக் குழு, காப்பாற்றப்படவேண்டிய பறவைகளில் இதனை ஒன்றாக அறிவித்திருக்கிறது.

பொதுவாகப் பறவைகள் எந்த நிறத்தில் இருப்பினும், அவைகள் காண்பதற்கு மிக அழகாக உள்ளன. சில பறவைகளின் இறகுகள் மிக மென்மையாகவும், பல்வகை வண்ணத்தில் அழகாகவும் உள்ளன. இத்தகைய இறகுகள் உடைகளை அலங் கரிக்கவும் மற்ற அலங்காரங்களுக்கும் தேவைப்படுகின்றன.

ஐரோப்பாவில் பெண்களின் தலையலங்காரத்திற்காக இறகுகள் மிகுதியாகத் தேவைப்பட்டன. இவற்றின் ஏற்றுமதிக்காகப் பல இன எக்ரட்கள் (Egrets) நம்நாட்டில் வளர்க்கப்பட்டு வந்தன. ஏற்றுமதிச் சட்டதிட்டங்களாலும், வனப்பறவை, வனவிலங்குகளின் பாதுகாப்புச் சட்டத்தினுலும் (Wild Birds and Wild Animals Protective Act of 1912) இவ்வேற்றுமதி தடைப்படுத்தப் பட்டு இப்பறவைகள் காப்பாற்றப்பட்டன. மயில் இறகுகளுக்காக (தோகைக்காக) மயில்கள் பெருமளவு கொல்லப் பட்டன. இன்று, மயில் நம் தேசியப் பறவையாக்கப்பட்டுள்ளது; இதனைக் காப்பாற்றுவது நம் கடமையாகும்.

பறவைகளின் கழிவு (Guano) மிகச்சிறந்த உரமாகும். பல பறவைகள் ஒன்று சேர்ந்து வாழும் இடங்களில் இவற்றின் கழிவுகள் பெருமளவு சேர்ந்துவிடுகின்றன. வேடந்தாங்கல் புகலரண் நம்நாட்டின் மிகப் பழம்பெரும் பறவைப் புகலரணுகும். அங்குள்ள பறவைகளை யாரும் வேட்டையாடுவதை அவ்வூர் மக்கள் அனுமதிப்பதில்லை. அங்கு தங்கும் பறவைகளின் கழிவுகள் ஏரியில் விழுந்து கரைந்து நீரை உரம் கலந்த வளமான நீராக்கி விடுகின்றன. இந்நீர் பயிர் செய்யப் பயன்படுத்தப்படுகிறது. இந்நீரின் சிறப்பை உணர்ந்த மக்கள் அப்பறவைகளைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றி வருகின்றனர். கழிவு கரைந்துள்ள நீர், எண்ணெய்போல் இருப்பதை நாம் காணலாம்.

# 4. பறவைகளின் இனப்பெருக்கம்
## (Reproduction In Birds)

பறவைகளில் இனப்பெருக்க உணர்வு தீவிரமாக உள்ளது. பறவைகள் தன் இனத்தைப் பெருக்குவதற்காகப் பல்வகை இடையூறுகளை ஏற்றுக்கொள்கின்றன. சில பறவைகள் பல நூற்றுக்கணக்கான மைல்கள் வலசை வந்து இனப்பெருக்கம் செய்கின்றன. நம்நாட்டிற்குப் பலவகைப் பறவைகள் வலசை வந்து, கூடு கட்டி, குஞ்சு பொரித்துப் பின் தங்கள் சொந்த இருப்பிடங்களுக்குச் செல்வதை அறியலாம். இத்தகைய ஆபத்தான செயலில் ஈடுபடும்பொழுது, சூழ்நிலைகளிலிருந்து தாங்கள் பெறமுடிகின்ற எல்லாவகைச் சலுகைகளையும் (Advantages) பறவைகள் பயன்படுத்திக்கொள்கின்றன. அவைகளுக்கு மட்டுமின்றி அவைகளின் கூடுகளுக்கும் முட்டைகளுக்கும், குஞ்சுகளுக்கும் பாதுகாப்புத் தேவைப்படுகிறது. இனப்பெருக்கம் செய்யும் பறவைகளுக்குக் கூடு கட்டுவதற்கான ஏற்ற இடங்கள், கூடு கட்டத் தேவைப்படும் சாதனங்கள், முட்டைகளுக்கேற்ற பாதுகாப்பு, முட்டைகள் பொரிப்பதற்கும், குஞ்சுகள் வளர்வதற்கும் ஏற்ற மிதமான வெப்பம், தேவையான அளவு உணவு ஆகிய அனைத்தும் தேவைப்படுகின்றன. மற்ற தேவைகளில் சில குறைந்த போதிலும் தேவையான அளவு உணவு கிடைக்கும் சூழ்நிலைதான் மிகவும் முக்கியம். ஒரு குஞ்சு ஆரம்பகாலத்தில் தன் எடையில் இரு மடங்கிற்கும் அதிகமான உணவை உட்கொள்ளுகிறது. இந்நிலை சில நாட்களுக்கே எனினும், உணவின் தேவையைத்தான் பறவைகள் முதலில் கவனித்து, கூடுகட்டும் இடத்தைத் தேர்ந்தெடுக்கின்றன. சிறிய பறவைகள் தங்களைச்சுற்றி மிக அருகில் உணவு கிடைக்கும் இடங்களையே தேர்ந்தெடுக்கின்றன. இவைகள் கூடு கட்டும்பொழுது ஒவ்வொரு பறவையும் ஓர் எல்லையை ஏற்படுத்தி, அதைத் தன் இனப் பறவைகள் வேறு எதுவும் ஆக்கிரமிக்காமலும், அவ்விடத்தில் கூடு கட்டாமலும் பார்த்துக்கொள்

கின்றன. சில சமயங்களில் இத்தகைய சிறிய பறவைகளுக்கு அருகில் பெரிய பறவைகள் கூடுகட்டியிருப்பது உண்டு. இப்பெரிய பறவைகள், தங்கள் உணவுப் பழக்கங்களில் வேறுபட்டிருக்கலாம்; அல்லது தொலேவில் சென்று உணவைத் தேடிவரும் இயல்பை உடையதாக இருக்கலாம். உணவுப் பழக்கத்தில் வேறுபாடுள்ள பறவைகளின் வாழ்க்கை முறையில் போட்டியும், சிக்கலும் ஏற்படுவதில்லே.

பறவைகள், பொதுவாகப் பகல்நேரம் அதிகமுள்ள பருவ காலங்களில் இனப்பெருக்கம் செய்கின்றன. இக்காலங்களில் அவைகள் அதிக நேரம் உணவைத் தேட முடியும். பொதுவாகத் தத்தம் உணவுப் பழக்கத்திற்கு ஏற்ற காலங்களில் பறவைகள் கூடுகட்டி, இனப்பெருக்கம் செய்வதால் சில பறவைகளின் இனப் பெருக்கக் காலங்கள் சிறிது மாறியுள்ளன. நம் நாட்டில் குறிப்பாகத் தென்னகத்தில். இனப் பெருக்கம் அக்டோபர்; நவம்பர் மாதங்களில் நடைபெறுகிறது. இக் காலத்தில் தென்மேற்குப் பருவ மழையால் தாவரங்கள் நன்கு செழித்து வளர்ந்துள்ளன; புழு பூச்சிகள் மிகுதியாகத் தோன்றுகின்றன. ஆகையால் பறவைகளுக்குப் போதிய உணவு எளிதில் கிடைக்கின்றது. குளிர்ப் பிரதேசங்களில் இளவேனிற் காலத்திலும் (Spring season), கோடைக் காலத்திலும் (Summer season) இனப்பெருக்கம் நடைபெறுகிறது. குளிர் காலத்தில் தரை பனியினுல் மூடப்பட்டு உறைந்துவிடுகிறது; உணவுப் பொருட்கள் கிடைப்பதில்லே; உணவைத் தேடித்திரியப் போதிய பகல் வெளிச்சம் இருப்பதில்லே. ஆகையால், குளிர் காலத்தில் அப்பகுதியில் இனப் பெருக்கம் நடைபெறுவதில்லே. வெப்ப நாடுகளில், கோடைக் காலத்தில் கரு சரியாக வளர்ந்து குஞ்சு உண்டாவதில்லே. அதிக வெப்பம் கருவைப் பாதிக்கிறது. கோடைக் காலங்களில் வீடுகளில் கோழிகள் சரியாகக் குஞ்சுகள் பொரிப்பதில்லேயென்பதை நாம் நன்கு அறிவோம். ஆக, ஒவ்வொரு பறவையும், தன் இனப்பெருக்கக் காலத்தில் போதிய உணவு கிடைக்குமா என்பதையும், ஏற்ற பாதுகாப்பு உள்ளதா என்பதையும் அறிந்தே அச் செயலில் ஈடுபடுகிறது. அவைகள் ஏற்ற சூழ்நிலேயில்லாத காலங்களில் இனப் பெருக்கம் செய்வதைத் தவிர்த்து விடுகின்றன. தக்க பருவகாலம், பறவைகளின் உடலினுள் செல்லியல் மாறுபாட்டினே ஏற்படுத்தி (Cytological change) அவற்றை இனப் பெருக்கத்திற்கு ஆட்படுத்துகிறது. 'ஃபிளமிங்கோக்கள்' ஏற்ற பருவ காலத்தில்தான் இனப் பெருக்கம் செய்கின்றன. கத்தியவார் வளேகுடாவில் (Rann of kutch) உள்ள ஃபிளமிங்கோக்கள் (Flamingoes) மழைக் காலத்திற்காகவே காத்திருந்து, அதன் பின் கூடு கட்டுகின்றன.

சில காலங்களில் மழை அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இருப்பின் அவைகள் கூடு கட்டுவதில்லை.

இனப் பெருக்கக் காலங்களில் சில ஆண் பறவைகளில் புதிய இறகுகள் தோன்றுகின்றன. இன்னும் சிலவற்றில் புதிய வண்ணங்கள் தோன்றுகின்றன. கால்நடைக் கொக்கில் (Cattle Egret) ஆரஞ்சு நிறம் தோன்றுகிறது. வேறுசில பறவைகளில் முற்றிலும் புதிய இறகுகள் தோன்றுகின்றன. சிலவற்றில் பழைய இறகுகள் முற்றிலும் நீக்கப்பட்டு, புதிய இறகுகள் மட்டுமே தோன்றலாம். இத்துடன் பல பறவைகள் பாடும் திறமையைப் பெற்றிருக்கின்றன. சில பறவைகள் பொதுவொலியுடன் வேறு ஒலியையும் சேர்த்துக் கூவும். பறவைகளின் இசைக்கும், அவற்றின் பொதுவான ஒலிக்கும் வேறுபாடுகள் உள்ளன என்பதை அறிதல் வேண்டும். இப்பாட்டுக்கள் அவைகளின் இனப் பெருக்கத்திற்காகவே தோன்றியவை. இத்தகைய பாட்டினால் ஒரு பறவை தன் இருப்பிடத்தை மற்ற பறவைகளுக்கு உணர்த்தவும், தன் எதிரிகளை எச்சரிக்கவும் செய்கிறது. மேலும், பெண் பறவையை ஈர்த்து மயக்கவும் இப்பாட்டு உதவுகிறது. இப் பாட்டினால் தன் எல்லையை ஏற்படுத்தி மற்றப் பறவைகள் அதனுள் புகாது பார்த்துக் கொள்கிறது. தனக்கு உணவுப் பற்றுக்குறை ஏற்படாதவாறு இருக்கத் தன் இருப்பிடத்தைச் சுற்றி வேறு பார்த்துக்கொள்வதோடு, அப்படி வரும் பறவைகளுடன் பறவைகள் வராதபடி சண்டையிட்டு அவற்றை விரட்டிவிடுகிறது. இதன் உரத்த பாட்டு இதற்கு உதவும் ஒரு சிறந்த கருவியாகிறது. பாட இயலாத பறவைகள் இனப்பெருக்கக் காலங்களில் ஏதாவது ஒருவகை ஒலி எழுப்பும் திறமையைப் பெறுகின்றன. எடுத்துக் காட்டாக, பாட இயலாத நாரை (Stork) தன் தாடைகளை அசைத்து ஒருவிதமான ஒலியை எழுப்புகின்றது.

பெரும்பாலான ஆண் பறவைகள் தன் பேடையின் இசைவைப் பெற்றதும் காதல் களியாட்டத்தில் (Courtship) ஈடுபட்டு, பெட்டையைத் தன் வயப்படுத்துகிறது. இக்களியாட்டத்தில் பேடை மயங்குவதில் வியப்பொன்றும் இல்லை. பாராகீட் (Parakeet) பலவிதமாக நின்று தன் தோற்றத்தை வெளிப்படுத்துகிறது. அது முதலில் ஒரு காலிலும் பிறகு மற்றொரு காலிலுமாக ஒற்றைக்காலில் நிற்கிறது. சில ஆண் பறவைகள், தன் வண்ண இறகுகளை விரித்து, பெண் பறவை கண்டு மயங்கும் வண்ணம் நடந்துகொள்கின்றன. இன்னும் சில பறவைகள் எவ்விதமான சிறப்புச் செயலும் இன்றிக் காதல்களியாட்டத்தில் ஈடுபடுகின்றன. பயாஸ் (Bayas) பெண்பறவை, ஆண்பறவை கட்டும்

கூட்டின் அழகில் மனத்தைப் பறிகொடுத்து ஆணின் வயப்பட்டு விடுகிறது. இன்னும் சில ஆண் பறவைகள், பெண் பறவைகளின் விருப்பத்திற்கேற்ப உணவுப் பொருட்களைத் தேடித் தந்து, அவற்றின் உள்ளத்தைக் கவர்ந்துகொள்ளுகின்றன.

காதல் வயப்பட்டு ஒன்றுபட்ட பறவைகள் கூடுகட்டத் துவங்குகின்றன. ஆண் பறவையோ அல்லது பெண் பறவையோ அல்லது இரண்டும் இணைந்தோ கூட்டைக் கட்டுகின்றன. பொதுவாகப் பறவைகள் நன்கு பழக்கமுள்ள இடங்களில் கூடு கட்டுகின்றன. உயர்ந்த பகுதியில் வாழும் கழுகுகள் உயர்ந்த குன்றுகளிலோ அல்லது பாறைகளிலோ கூடுகள் கட்டுகின்றன. மரங்களில் வாழும் பறவைகள் பொதுவாக மரக்கிளைகளிலோ அல்லது இலைகளிலோ கூடுகட்டுகின்றன. நிலத்தில் வாழும் பறவைகளான காடை, கவுதாரி, மயில் போன்ற பறவைகள் நிலத்தில் கூடுகட்டுகின்றன. நீரிலும் நீருக்கு அருகிலும் வாழும் பறவைகள் நீர் நிலைக்கருகில் கூடுகட்டுகின்றன. இப்பொது விதிக்குமாருகச் சில பறவைகள் கூடுகட்டுவதுண்டு. தேனீ உண்ணி (Bee Eater), கரைக்கு அருகில் கிடைநிலையில் (Horizontal) வளையம் தோண்டி அதில் கூடு கட்டுகிறது. நீரில் வாழும் பல்வகை வாத்தினங்கள் (Ducks) மரத்தில் கூடு கட்டுகின்றன.

பறவைகளின் கூடுகள் பல்வகை அமைப்பிலும், தோற்றத்திலு முள்ளன. மயில், காடை போன்ற பறவைகள் நிலத்தைப் பறித்து எளிய கூடுகளை உண்டாக்கி, முட்டைகளை இடுகின்றன. தூக்கணாங் குருவியின் கூடு மிகவும் சிறப்பானது. அதில் நுழை வாயிலும், பாதுகாப்பான முட்டை அறையும் மிகத் திறமையாகக் கட்டப்பட்டுப் பாதுகாப்பாக உள்ளன. இக்கூட்டின் அமைப்பு மனிதனின் திறமைக்குச் சவால்விடும் வேலைப்பாட்டுடன் அமைந் துள்ளது. சில பறவைகள் மரப்பொந்துகளில் கூடு கட்டுகின்றன. இன்னும் சில, வளைகள் தோண்டுகின்றன. சில பறவைகள் மரக் கிளைகளில் புற்களைக் கொண்டு கிண்ணம் போன்ற கூடுகளைக் கட்டுகின்றன. ஜெகானஸ் (Jacanas) போன்ற பறவை, நீர் மீதுள்ள இலைகளில் கூடு கட்டுகிறது. சில பறவைகள் தங்கள் சிறப்பு இனப் பறவைகளுக்கு அருகில் கூடுகட்டுவதில்லை. வேறு இடம் பார்த்துக் கூடுகட்டுகின்றன. சில பறவைகள் கூட்டமாகக் கூடு கட்டுகின்றன. இவ்வாறு கூடுகட்டி வாழும் கொக்கு, நாரை (Stork, Heron, Egrets) போன்ற பறவைகள், பெரிய உருவமும், தங்களைப் பாதுகாத்துக் கொள்ளக்கூடிய ஆற்றலும் பெற்றவை. சிறிய பறவைகளான தையற் பறவைகள் (Tailor Birds), ரென் (Wren), வார்ப்ளர் (Warbler), ராபின் (Robin), சிட்டுகள்

தனித்தே கூடு கட்டுகின்றன. இவைகளின் நிறமும், தோற்றமும் இவைகளுக்குப் பாதுகாப்பாக அமைந்துள்ளன. மேலும் இச்சிறிய பறவைகள் தங்கள் உணவிற்காக நீண்டதூரம் செல்ல இயலாது. ஆகையால் இவைகள் போட்டியில்லாத இடங்களில் தனித்துக் கூடு கட்டிக் கொள்கின்றன. பெரிய பறவைகள் நீண்ட தூரம் பறந்து சென்று இரைதேட முடியுமாகையால், அவற்றின் கூடுகளுக்கு அருகிலேயே அவற்றிற்குப் போட்டியாக வேறு பறவை கூடு கட்டியிருப்பினும் அவற்றைப் பாதிப்பதில்லை.

அடை காப்பதிலும், குஞ்சு பொரிப்பதிலும், அவற்றைப் பராமரித்தலிலும் இனத்திற்கு இனம் வேறுபடுகிறது. சில பறவைகளில் ஆணும் பெண்ணும் சேர்ந்து உழைக்கின்றன. சில பறவையினங்களில் பெரும்பாலான வேலைகளைப் பெண் பறவை கவனித்துக்கொள்கிறது. வண்ண ஸ்னைப் (Painted snipe), ஜெகானஸ் போன்ற இனங்களில் ஆண் பறவைகள், பெரும் பங்கைச் செய்கின்றன. எப்படியிருப்பினும் பெற்றோர்கள் தங்கள் குஞ்சுகளை வளர்க்க மிகக் கடினமாக உழைக்கவேண்டியுள்ளது. குஞ்சு பொரித்துச் சில நாட்கள் வரை, ஒவ்வொரு குஞ்சும் தன் எடையில் இரு மடங்கு உணவை ஒவ்வொரு நாளும் உட்கொள்கிறது. துவக்கத்தில் குஞ்சுகள் விரைந்து வளர்கின்றன. இப்படி உணவு உட்கொள்வது துவக்கத்தில்தான். ஆனால் எவ்வளவுதான் இக் குஞ்சுகளுக்கு உணவு ஊட்டப்பட்டாலும், அவைகளுக்குப் போதுமென்ற நிலை ஏற்படுவதில்லை. குஞ்சுகள் கூட்டிலிருக்கும் காலத்தில் மிக ஆபத்தான நிலையில் உள்ளன. வேறு பறவைகளோ அல்லது விலங்குகளோ அல்லது மழை, காற்று போன்ற இயற்கையின் விளைவுகளோ அவற்றிற்கு ஆபத்தை ஏற்படுத்தக் கூடும்; அல்லது குஞ்சுகள் கூட்டிலிருந்து நழுவிக் கீழே விழுந்து விடலாம். சிறிய, கபடற்றக் குஞ்சிற்கு உணவு அதிகமாகக் கிடைக்காது. அழுத பிள்ளை பால் குடிக்கும் என்பதற்கு ஏற்ப தன் வாயை எப்பொழுதும் திறந்திருக்கும் குஞ்சிற்கே உணவு அதிகமாகக் கிடைக்கும். திடமற்ற குஞ்சு, மற்றவற்றால் நசுக்கப் படலாம்; அல்லது கூட்டிலிருந்து கீழே தள்ளப்படலாம். இத்தகைய காரணங்களால்தான், ஒரே முறையில் பல முட்டைகளையிடுவதும் அடுத்தடுத்துப் பல முறை முட்டையிட்டு அடை காப்பதும் பறவை இனத்தில் நிகழ்கின்றன. இருப்பினும் பறவைகள் தங்களுடைய எண்ணிக்கையை அதிகப்படுத்த முடிவதில்லை. அதிக ஆபத்திற்கு உள்ளாகும் வாத்துப் போன்றவைகள் ஒரே முறையில் பல முட்டைகளையிடுகின்றன. பாடும் சிறு பறவைகள் (Song Birds) பலமுறை முட்டையிட்டு அடைகாக்கின்றன. முட்டைகள் அழிக்கப்பட்டால், அப் பறவைகள் காலம் தாழ்த்தாது, மீண்டும் கூடு கட்டி முட்டையிட்டு அடை காத்துக் குஞ்சு பொரிக்கின்றன. ஆம்! தங்கள் இனத்தைப் பெருக்கவேண்டும் என்ற எண்ணமே இந்நிலைக்கு அவற்றை இட்டுச் செல்கின்றது. இதனால் அவைகள் எந்தவித இடையூறுகளையும் பொருட்படுத்துவதில்லை.

# 5. பறவைகள் வலசை போதல்

## (Migration of Birds)

வலசை போதல் பறவைகளில் காணப்படும் ஒரு வியக்கத்தகு பண்பாகும். வலசை போதல் மற்ற விலங்குகளிலும் உள்ளது. உதாரணமாகக் 'காரிபென்' (Cariben) என்ற வட அமெரிக்கத் தாவர உண்ணி இனப் பெருக்கத்திற்காக வடக்கிலுள்ள துந்திரப் பிரதேசத்திற்கும், குளிர் காலத்தில் தெற்கிலுள்ள ஊசியிலைக் காட்டிற்கும் சுமார் *1120 கி.மீ. (700 மைல்)* தூரம் வலசை போகிறது. மீன்களும் வலசை போதலை மேற்கொள்கின்றன. அட்லாண்டிக் கடலில் வாழும் 'ஸால்மன்' (Salman) மீன் சுமார் *3200 கி.மீ.* தூரம், *(2000 மைல்கள்)* சென்று நன்னீரில் இனப் பெருக்கம் செய்து திரும்புகிறது. வட அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளின் நன்னீரிலுள்ள ஈல், சாரி, கோசா கடலுக்குச் சென்று இனப் பெருக்கம் செய்கிறது. இம் மீன் குட்டிகள் நன்னீர் நிலைகளுக்குச் சென்று வளர்ந்து முதிர்ச்சியடைகின்றன.

இவ்விலங்குகள் வலசை போதலைப் பற்றி விரிவான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. வலசை போதலைப் பற்றிப் பறவை களில் விளக்கமாக அறியமுடிகிறது. சில பறவைகள் ஒவ்வொரு வருடமும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு திசையை நோக்கிச் செல்கின்றன; அதன்பின் மற்றொரு குறிப்பிட்ட காலத்தில் எதிர்த் திசையில் திரும்பி அவைகள் புறப்பட்டுச் சென்ற இடத்திற்கே வந்து சேர்கின்றன. ஒவ்வொரு வருடமும் குறிப்பிட்ட காலங் களில், எதிர் எதிர்த் திசைகளில் குறிப்பிட்ட இரு இடங்களுக்குச் செல்லும் முறையான பழக்கத்திற்கு வலசை போதல் என்று கூறப் படுகிறது. குளிர் காலத்தில் பெரும்பான்மையான பறவைகள் வடக்குப் பகுதியிலிருந்து தெற்குப் பகுதிக்கும், கோடைக் காலத்தில் தெற்குப் பகுதியிலிருந்து வடக்குப் பகுதிக்கும் வலசை போகின்றன. பொதுவாக வலசை போதல் வடக்கு-தெற்குத்

திசையில் நடைபெறுகிறது, என்றாலும் கிழக்கு-மேற்குத் திசையில் வலசை போதலும் உண்டு. வலசை போதலின் காரணமாகப் பல பறவைகள் மிக நீண்ட தொலைவிலிருந்து தெற்கு நோக்கி வருகின்றன. சைபீரியாவிலிருந்து தமிழ் நாட்டிற்குப் பறவைகள் வலசை வருகின்றன. ஆர்டிக்டெர்ன் என்னும் பறவை ஆர்ட்டிக் பகுதியிலிருந்து சுமார் 16,000 கி.மீ. (10,000 மைல்கள்) பறந்து தென் ஆப்பிரிக்காவிற்குச் செல்கிறது. நம் நாட்டில் இமய மலைச் சாரலில் உள்ள சில பறவைகள் தென்னிந்தியாவிற்கு வந்து செல்கின்றன. இது உள்நாட்டு வலசை போதல் (Local Migration) எனப்படும்.

பறவைகள், வலசை போதலை ஏன் மேற்கொள்ளவேண்டும்? வலசை போகும் பறவைகள் குளிர் காலத்தில் வடக்கிலிருந்து தெற்குப் பகுதிக்குச் செல்கின்றன. இதனால் அவைகள் குளிரின் கொடுமையிலிருந்து விடுபட முடிகிறது. இக்காலத்தில் வடக்குப் பகுதியிலுள்ள நிலம் பனியினால் மூடப்பட்டு இருக்குமாதலால் பறவைகளுக்கு வேண்டிய உணவு கிடைப்பதில்லை. மேலும், பகற்பொழுது குறுகிவிடுவதால் பறவைகள் நீண்ட நேரம் உணவு தேடி அலைய முடியாது. இதனால், வடக்குப் பகுதியிலுள்ள பறவைகள் சில வாழ்க்கைத் தேவைக்காகத் தென் திசை நோக்கி வலசை போகின்றன.

தென் பகுதியில் கோடைக்காலம் வந்ததும் இப் பறவைகள் வடக்கு நோக்கித் தங்கள் இருப்பிடத்திற்குச் செல்கின்றன. இப்பொழுது வடக்குப்பகுதியில் குளிர்நீங்கிப் பகற்காலம் நீடித்து, உணவு எளிதில் கிடைப்பதால் இப் பறவைகள் கூடு கட்டி இனப் பெருக்கம் செய்கின்றன. வலசை போகும் ஒரு பறவை எந்த இடத்தில் இனப் பெருக்கம் செய்கிறதோ அந்த இடம்தான் அதன் சொந்த இருப்பிடம். மற்ற இடம் வலசை போகும் இடமாகும். இப் பறவைகள் பொரிக்கும் குஞ்சுகள் வளர்ந்து முதிர்ந்த பின், குளிர்காலம் தொடங்கியதும் வலசை போகின்றன. இவைகளும் தங்கள் பெற்றோர் சென்ற இடங்களுக்கே துணையின்றி வலசை போவது வியப்பிற்குரியதாகும். இத்தகைய குணம் இக் குஞ்சுகளுக்கும் இருப்பது மரபுவழித் தோன்றியதாகும் (Hereditary) எனக் கருதப்படுகிறது. வலசை போகும் பெரும்பாலான பறவைகள் மிகக் குறைந்த காலமே தங்கள் சொந்த இடங்களில் தங்கியுள்ளன. மத்திய ஆசியாவில் இனப் பெருக்கம் செய்யும் டில்யர் (Tilyor) அல்லது ரோசி பாஸ்டெர் (Rosy Pastor), மே மாதம இந்தியாவிலிருந்து சென்று அனேகமாக ஆகஸ்ட் மாதம் திரும்பி வந்துவிடுகிறது. பெரும்பாலான பறவைகள் மார்ச்

மாதம் நம் நாட்டைவிட்டுச் சென்று 'செப்டம்பர்' மாதம் மீண்டும் திரும்பி வருகின்றன.

பறவைகள் வடக்கு–தெற்காக வலசை செல்வதற்குப் பருவ காலத்தின் வேறுபாடுகளும், பறவைகளின் வாழ்க்கைத் தேவைகளுந்தான் காரணங்கள் என்பதை அறிகிறோம். ஆனால் பருவநிலை மாறாத கிழக்கு—மேற்குத் திசையில் சில பறவைகள் வலசை செல்லுவதன் காரணம் சரியாகத் தெரியவில்லை. சில பறவைகள் நகர்ப்புறங்களிலிருந்து அருகிலுள்ள வெளியிடங்களுக்குச் செல்வது புரியாதப் புதிராக இருக்கிறது. எடுத்துக்காட்டாக பம்பாயிலுள்ள ஓரியோல் (Oriole), தேனீயுண்ணி (Bee Eaters) போன்ற பறவைகள் மழைக்காலங்களில் மத்திய இந்தியாவிற்கும், தக்காணப் பீடபூமிக்கும் சென்றுவிடுகின்றன. இத்தகைய உள் நாட்டு வலசை செல்லும் பறவைகளைப் பற்றித் தெளிவாக அறியவேண்டுமாயின் வளையம் கட்டுதல் (Ringing) முறையில் ஆய்வு மேற்கொள்ளுதல் இன்றியமையாதது.

பெரும்பான்மையான வலசைப் பறவைகள் தன் சேய்ப் பெருக்க இடத்திற்கும் (Breeding Ground), உணவிடத்திற்கும் (Feeding Ground) முறையாகச் சென்று வரும்போது, சில பறவைகள் தனித்துத் துணிகரமான பயணத்தை மேற்கொள் கின்றன. இப் பறவைகள் தங்கள் சேய்ப் பெருக்க இடங்களில் குஞ்சுகளைப் பொரித்த பின், அங்கிருந்து வேறு ஓர் இடத்திற்குச் சென்று சில நாட்கள் தங்கியபின், தங்கள் குளிர்கால இடத் திற்குத் திரும்புகின்றன. திரும்பி வரும் வழியில் மீண்டும் தங்கள் சேய்ப் பெருக்க இடங்களுக்குச் சென்று சில நாட்கள் தங்கிய பின்னரே குளிர்கால இடங்களை அடைகின்றன. இச்செயலால், இப் பறவைகளின் பழக்கத்தைத் தெளிவாக அறிய இயலவில்லை. பொதுவாக இப்பறவைகள் மாறிவரும் கால நிலைக்கு ஏற்ப வலசை போதலை மேற்கொள்கின்றன. வலசை போதல் பறவைகளின் வாழ்க்கைத் தேவைக்காக நிகழ்வதே. வலசை போகும் பறவைகள், வலசை செல்லுமுன் தங்களைத் தயார் செய்து கொள் கின்றன. இப்பறவைகள் மிகுதியாக உண்டு, உடலினுள் கொழுப்பைச் சேகரித்துக்கொள்கின்றன. சில பறவைகள் கூட்டமாக ஒன்று சேர்ந்து பறந்து, ஒத்திகை நடத்துகின்றன. சூரியனின் உதயமும் மறைவும் பறவைகள் வலசை போதலைத் தூண்டுகின்றன. அவைகளின் வழிப் பயணத்தின்போது சூரியன் திசை காட்டியாக இருந்து உதவுகிறது. சூரியனின் திசையையும், இருப்பிடத்தையும் அடையாளமாக வைத்துப் பறவைகள் வலசை போகின்றன. சில சமயங்களில் பனியினாலும், புகையினாலும்

சூரியன் மறைக்கப்பட்டிருக்கும் பொழுது இப் பறவைகள் திசை தவறிச் சென்றுவிடுகின்றன. பின் சூரியன் வெளிப்பட்டதும் தங்கள் தவற்றினைத் திருத்திச் சரியான வழியில் செல்கின்றன. இப் பறவைகள் பொதுவாகப் பகலில் சூரியனையும், இரவில் விண் மீன்களையும் அடையாளமாகக் கொண்டு சென்றாலும், சில சமயங்களில் நிலத்தின் அடையாளத்தைத் துணைகொண்டும் செல்கின்றன.

மிகப் பெரிய கூண்டினுள் அடைக்கப்பட்ட வலசை செல்லும் பறவைகள் சூரியனின் துணைகொண்டு கூண்டினுள்ளே ஒரு குறிப் பிட்ட திசையில் பறக்கின்றன. அவைகள் கூண்டினுள் தாங்கள் வலசையின்போது பறந்து செல்லும் திசையிலேயே பறக்கின்றன. சூரியனைக் கண்ணாடி மூலமாக வேறு திசையிலிருந்து பிரதிபலிக்கச் செய்தால், அதற்குத் தக்கபடி தங்கள் திசையை மாற்றிக் கொள் கின்றன. இரவில் பறக்கும் 'வார்ப்ளர்' (Warbler) பறவைகளைப் பெரிய கண்ணாடிக் கூண்டினுள்ளோ அல்லது செயற்கைக் கிரகத் தினுள்ளோ (Planetarium) வைத்திருந்தால் அவைகள் செயற்கை விண்மீன்களின் துணைகொண்டு பறக்கின்றன. அவ் விண் மீன்களை மறைத்துவிடின் அவைகள் திசை தவறி, தவறான திசையில் பறப்பதைக் காணலாம். பகலிலும் இரவிலும் தொடர்ந்து பறக்கும் பறவைகள், சூரியனையும் விண் மீன்களையும் மாறி மாறித் திசை காட்டியாக வைத்துக்கொள்கின்றன. பொதுவாக, இப் பறவைகள் 600 மீட்டர் முதல் 1300 மீட்டர் உயரத்தில் பறப்பதால் சிறு சிறு நிலப் பரப்புக்கள் சரியாகப் புலப் படாமல் போகலாம். சில இளம் பறவைகள் தங்கள் பெற்றோர் களின் துணையின்றிச் சுயமாக வலசை செல்கின்றன. அவைகள் எதைத் துணைகொண்டு செல்கின்றன என்று கூறுவது இயலாது. பொதுவாக, அப் பறவைகளிலுள்ள இவ் வியக்கத்தகு பண்பு இயல் பூக்கம் (Instinct) ஆகும். அதாவது அவற்றின் உடலினுள் ஓர் உள்ளுணர்வுப் பொறி (A Sort of Built-in Clock) இருத்தல் வேண்டும்.

பெரும்பாலும் இப்பறவைகள் பெரிய அல்லது சிறிய கூட்டமாக வலசை செல்கின்றன என்றாலும், ஒரு சில இனங்கள் தனித்து ஒற்றையாகச் செல்கின்றன. பல சிறு பறவைகள் பெரும் பாலும் இரவுக் காலங்களிலேயே தங்கள் பயணத்தை மேற்கொள் கின்றன. இதனால் இவைகள் மற்ற விலங்குகளின் கண்களுக்குப் புலப்படாமலும், அவற்றிற்கு இரையாகாமலும் செல்ல முடிகின்றது. இவைகள் மணிக்குச் சுமார் 30 கி.மீ. வேகத்தில் பறக்கின்றன. இப் பறவைகள் ஒவ்வொரு நாளும் சுமார் 8 மணி

நேரம் பறந்து சுமார் 250 கி.மீ. தொலைவு செல்கின்றன. பெரிய பறவைகள் மணிக்குச் சுமார் 80 கி.மீ. வேகத்தில் பறந்து ஒருநாள் பயணத்தில் இன்னும் அதிக தொலைவைக் கடக்கின்றன. பொதுவாக, வலசை போதல் எல்லா வகையிலும் ஆபத்து நிறைந்த சிரமமான செயலாகும்.

வலசை போகும் பறவைகளின் எண்ணிக்கையைச் சரியாகக் கூற இயலாது. ஐரோப்பாவிலும், வட ஆசியாவிலுமுள்ள பறவைகளில் சுமார் 40% இனங்கள் வலசைப் பறவைகளாகும். இந்தியாவிலுள்ள 1200 இனங்களில் 300 இனங்கள் நம் நாட்டிற்குக் குளிர் காலத்தில் வரும் குளிர்கால வலசைப் பறவைகளே (Winter Migratory Birds)—இப் பறவைகள் நம் நாட்டில் சேய்ப் பெருக்கம் செய்வதில்லை. இப் பறவைகள் கிழக்கு ஐரோப்பா, மத்திய ஆசியா ஆகிய இடங்களில் கூடு கட்டும் பறவைகளாகும். மேலும் இமயமலைச் சாரலில் வாழும் சில பறவைகளும், தென் இந்தியாவிற்கு வலசை வருகின்றன. வலசைப் பறவைகளில் பல, கடற்கரைப் பகுதியிலும், ஏரி, குளம், குட்டை, ஆறு ஆகியவற்றைச் சார்ந்து வாழ்கின்ற நீர்ப்பறவைகளும், (Water Birds) நீரை அடுத்து வாழும் பறவைகளும் (Water Side Birds) ஆகும். தமிழ்நாட்டில் வேடந்தாங்கல் புகலரணுக்கும் கோடிக்கரைப் பறவைத் தங்கல் (Refuge) இடத்திற்கும் ஒவ்வொரு வருடமும் பல உள்நாட்டு, வெளிநாட்டு வலசைப் பறவைகள் வருகின்றன.

நம் நாட்டிற்கு வலசை வரும் பறவைகளைப் பற்றிச் செய்திகள் மிகக் குறைவு. எவ்வளவு இனங்கள் எங்கிருந்து வருகின்றன, அவைகளின் பயண மார்க்கங்கள் எவை எவை என்பனவற்றிற்குப் போதிய விவரங்கள் முற்றிலும் இல்லை. இவற்றைப் பற்றி அறிந்துகொள்ள வளையம் கட்டிவிடும் (Ringing Method) முறையில் ஆய்வு செய்தல்வேண்டும். 'வளையம் கட்டுதல்' என்பது பறவைகளைப் பற்றிய கருத்துக்களைச் சேகரிக்க வேண்டி, அவைகளைப் பிடித்து அவற்றின் கால்களில் குறிப்புக்களைக் கொண்ட. அலுமினியத் தகட்டாலான சிறு வளையத்தை இணைத்து அப் பறவைகளைவிட்டு விடுதலாகும். அப் பறவைகளை வேறு இடங்களில் பிடிப்பவர்கள் அவற்றைப் பற்றிய தகவலை அலுமினிய வளையத்தில் குறிப்பிட்டபடி, உரிய இடத்திற்குத் தெரிவிக்கவேண்டும். நம்நாட்டில் பம்பாய் இயற்கைக் கழகம் —"பாம்பே நேச்சுரல் இஸ்டரி ஸொஸைடி" (Bombay Natural History Society) வளையம் கட்டுதல் முறையில் ஆய்வு செய்து வருகிறது. இக் குழுவின் சீரிய பணியால் நம்நாட்டு வன

வாத்துக்கள் (Wild Ducks) 4800 கி.மீ. (3000 மைல்) தொலைவிலுள்ள சைபீரியாவிற்குச் செல்கின்றன என்பதை அங்கு பிடிக்கப்பட்ட நம்நாட்டு வனவாத்து உறுதிப்படுத்துகிறது. இவ்வாறு இக்குழு சிறப்பான செய்திகள் பலவற்றைச் சேகரித்துவருகிறது.

படித்தவர்களும், பொது மக்களும் இத்தகைய பறவைகளைப் பிடிக்க நேரிட்டால், சிரமம் பாராது அதில் குறிப்பிட்டுள்ளவாறு உரிய இடத்திற்குச் செய்தி தெரிவிப்பது, அறிவியலுக்கும் அப்பறவைகளைக் காப்பாற்றுவதற்கும் செய்யும் சிறந்த பணியாகும்; இது நம் கடமையுமாகும். அப்படித் தெரிவிக்கும்பொழுது அப்பறவையைப் பற்றி எல்லா விளக்கங்களும் கூறுதல் நலம்.

# 6. தமிழ்நாட்டிற்கு வரும் வலசைப் பறவைகள்

தமிழ் நாட்டில் உள்நாட்டு, வெளிநாட்டு வலசைப் பறவைகள் காணப்படுகின்றன. இப் பறவைகள் செப்டம்பர்—அக்டோபர் மாதங்களில் இங்கு வந்து மார்ச்—ஏப்ரல் மாதங்களில், தங்கள் சேய்ப் பெருக்க இடங்களுக்குத் திரும்பிவிடுகின்றன. இப் பறவைகள் உணவிற்காகவும், ஏற்ற பருவ நிலைக்காகவும் இங்கு வந்து தங்கிச் செல்கின்றன. இப் பறவைகள் இங்கு சேய்ப் பெருக்கம் செய்வதில்லை.

தமிழ் நாட்டில் காணப்படும் உள்நாட்டு வலசைப் பறவைகள் காஷ்மீர், இமயமலைப் பகுதி போன்ற இடங்களிலிருந்து வருகின்றன. உள்நாட்டு வலசைப் பறவைகளாவன : கருஞ்சிறகு ஸ்டில்ட் (Black Winged Stilt), ஃபிளமிங்கோ (Flamingo), வளைய சிறு ஆள்காட்டி (The Little Ringed Plover), கிழக்குப் பகுதி வாலாட்டி (Eastern Wag Tail), ஸ்வாலோ (The Common Swallow), சீட்டியடிக்கும் டீல் (Whistling Teal), இந்தியச் சிறு பிராடின் கோல் (The Little Indian Pratin Cole), காட்டுச் சேவல் (The Wood Cock), காட்விட் (The Godwit).

வெளிநாட்டு வலசைப் பறவைகளில் சுமார் இருபது இனங்களும் (Species), சிற்றினங்களும் (Races) தமிழ் நாட்டில் காணப்படுகின்றன என்று திரு எம். ஏ. பாஷா குறிப்பிடுகிறார். இப் பறவைகள் ஐரோப்பிய நாடுகளிலிருந்தும், ஆசியாக் கண்டத்தில் ரஷ்யா, ஸைபீரியா, சைனு போன்றவற்றிலிருந்தும் இங்கு வருகின்றன. அவைகளாவன : மணற்கிளரி (Sand Piper), பசுமை மணற்கிளரி (Green Sand Piper) புள்ளி மணற்கிளரி (Spotted Sand Piper), சிவப்பு ஷேங்க் (Red Shank), சிறு ஸ்டின்ட் (The Little Stint), உள்ளான் (ஸ்னைப்—The Common Snipe), வரித்தலை

வாத்து (The Bar Headed Goose), சாம்பல் நிற வாத்து (Grey Lag Goose), செம்பவள ஷெல்ட்ரேக் (The Ruddy Sheldrake), டீல் (Common Teal) கார்கனி டீல் (The Garganey Teal), குர்லியூ (The Curlew), கருந்தலை கல் (The Black Headed Gull), கூர்வால் பறவை (The Pin Tail), அகல் அலகுப் பறவை (The Shoveller), கொண்டைத் தாரா (The Crested Duck), வெண் வாலாட்டி (White Wag Tail), போசார்டு (Poechard), விஜியான் (Wigeon) பொன் ஆள்காட்டி (The Golden Plover).

மேலே குறிப்பிட்ட வெளிநாட்டு, உள்நாட்டு வலசைப் பறவைகள் நீர்ப் பறவைகளும், நீர் ஓரப் பறவைகளும் (Water Side Birds) ஆகும். மரத்தில் வாழும் வெளிநாட்டு வலசைப் பறவை, தமிழ் நாட்டில் ஒன்றுதான் காணப்படுவதாகத் திரு. எம். ஏ. பாஷா குறிப்பிடுகிறார். அவர் கருத்துப்படி ரோஜா நிறப்பாஸ்டர் (Rosy Pastor-Sturnus Roseus) தமிழ் நாட்டில் குளிர்காலத்தில் கூட்டம் கூட்டமாகக் காணப்படுகிறது. பொன் ஓரியோலும் (Golden Oriole—Oriolus Oriolus) கருந்தலை ஓரியோலும் (The Black Headed Oriole) உள் நாட்டு மரப் பறவைகளாகும். பொன் ஓரியோல் காஷ்மீரில் சேய்ப் பெருக்கம் செய்கிறது. இது குளிர்காலத்தில் தென் பகுதிக்கு வலசை வருகிறது.

மணற்கிளரி ஐரோப்பாவின் பல பாகங்களில் காணப்படு கிறது. இது தமிழ் நாட்டிற்கு வரும் வலசைப் பறவைகள் அனைத் திற்கும் முன்னோடியாக ஜூலை. ஆகஸ்ட் மாதங்களிலேயே இங்கு வந்து, மார்ச் மாத முதல் தேதி புறப்பட்டுவிடுகிறது. இவற்றில் பின் தங்கிய சில பறவைகள் ஏப்ரல்—மே மாதங்களில் செல் கின்றன. புள்ளி மணற்கிளரி (Spotted Sand Piper—Tringa Glareola) எல்லா நீர் நிலைகளின் கரையோரங்களிலும் காணப்படு கிறது. இது காடையின் பருமன் உள்ளது. இது வேடந்தாங்கல் புகலரணிலும், திருப்போரூர், கோவளம், மாமல்லபுரம் போன்ற இடங்களில் கடல் நீர்த் தேக்கப் பகுதிகளிலும் காணப்படுகிறது. இது பெருங் கூட்டம் கூட்டமாகக் காணப்படுகிறது. இதன் உடலின் பின் பகுதியும் வாலும் வெண்மையாக உள்ளன. இது பறக்கும்பொழுது 'சிப்-சிப்-சிப்-சிப்' என்று கத்துகிறது. இப் பறவை ஸைபீரியாவிலிருந்து இங்கு வருகிறது.

சிறு ஸ்டின்ட் (The Little Stint) சிட்டுக்குருவியளவே (House Sparrow) இருக்கிறது. இது வடகிழக்கு ஐரோப்பா, ஸைபீரியா ஆகிய பகுதிகளிலிருந்து வந்து ஆறு, ஏரி, குளம் போன்றவற்றின்

கரையோரங்களில் வாழ்கின்றன. இவைகள் ஆயிரக் கணக்காக இங்கு வலசை வருகின்றன. இவைகள் தஞ்சை மாவட்டத்திலுள்ள தலைஞாயர், முத்துப்பேட்டை ஊர்களுக்கருகிலுள்ள கடல் நீர்த் தேக்கப் பகுதிகளிலும், செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள உத்திரமேரூர் ஏரிகளிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. மணற் கிளரிகள் இங்கு வரும் காலத்திலேயே இவைகள் இங்கு வந்து மார்ச்—ஏப்ரல் மாதங்களில் நீர்நிலைகள் வற்றியபின் சென்றுவிடுகின்றன. இவைகள் சாம்பல் கலந்த பழுப்பு நிறத்திலிருப்பதால் இவைகள் நிலத்திலிருப்பதை எளிதில் கண்டறியவியலாது. ஏதாவது தொல்லை ஏற்படின் எல்லாப் பறவைகளும் கூட்டமாகத் திடீரெனப் பறந்துசெல்கின்றன. இவைகள் நேராகப் பறக்காமல், வளைந்தும், சுற்றியும், பறந்து செல்கின்றன. பறந்துச் செல்லும்போது அவற்றின் வயிற்றுப்புற வெண்மை நிறம் நன்கு புலப்படுகிறது.

உள்ளான் குருவி (ஸ்னைப்-Snipe) செங்கல்பட்டு மாவட்ட நீர்த் தேக்கப் பகுதிகளில் செப்டம்பர் முதல் மே முடிய மிகுந்து காணப்படுகிறது. நிலத்தில் இருக்கும்பொழுது இதனைக் கண்டு கொள்ள இயலாது. இது வட ஐரோப்பாவிலிருந்தும், ஸைபீரியாவிலிருந்தும் இங்கு வலசை வருகிறது.

அக்டோபர்—நவம்பர் மாதங்கள் முதல் பிப்ரவரி—மார்ச் மாதங்கள் முடிய இராமநாதபுரம், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் வரித்தலை வாத்துக்களும், சாம்பல்நிற வாத்துக்களும் பெருமளவு காணப்படுகின்றன. இப் பறவைகள் பெரிய உருவம் உள்ளவைகளாகும். இவைகள் ஆசியா, ஸைபீரியா, ஐரோப்பா ஆகிய இடங்களிலிருந்து இங்கு வலசை வருகின்றன.

தென் ரஷ்யாவிலிருந்தும், பால்கன் கடல் நாடுகளிலிருந்தும் செம்பவள ஷெல்ட்ரேக் (The Ruddy Sheldrake) இங்கு அக்டோபர் மாத மத்தியில் வந்து ஏப்ரல் வரையில் இங்கு தங்குகிறது. இவைகள் தஞ்சை மாவட்டத்தில் வண்டல், அவரைக் காடு கிராமங்களுக்கருகிலுள்ள நீர் நிலைப் பகுதிகளில் மிகுந்து காணப்படுவதாக திரு. எம். ஏ. பாஷா குறிப்பிடுகிறார். இவைகள் உணவு தேடி அலையும் பொழுது ஒலி எழுப்புவதால் இவைகள் இருப்பதை எளிதில் கண்டுகொள்ளலாம்.

தமிழ் நாட்டின் எல்லாக் குளம் குட்டைகளிலும் குளிர் காலத்தில் டீல், கார்கனி டீல், அகல் அலகுப் பறவை, விஜியான், போசர்டு போன்றவைகள் காணப்படுகின்றன. இவைகள்

பெருமளவு வேடந்தாங்கல் புகலரணிலுள்ளன. இது ஐரோப்பா ஆசிய கண்டத்தின் வட பகுதிகளிலிருந்தும், மித வெப்பப் பகுதிகளிலிருந்தும் வருவதாகும்.

கூர் வால் பறவை, தாரா (Duck) இனத்திலொன்று. இது குளிர்காலத்தில் இங்கு வலசை வரும் பறவைகளிலொன்று. இது வேடந்தாங்கல் புகலரணிலும் மற்றும் தமிழ்நாட்டில் கன்னியாகுமரிவரையும் பரவியுள்ளது. இது குளிர்காலத்தின் பிற்பகுதியில் இங்கு காணப்படுகிறது. இது வட ஆசியா, மத்திய ரஷ்யா, வட ஐரோப்பா ஆகிய பகுதிகளில் வாழ்ந்து இங்கு வலசை வரும் பறவையாகும்.

கர்லியூ (Curlew) என்பது கரும் பழுப்பு நிறத்தில் கவுதாரியைக் காட்டிலும் சற்றுப் பெரியதாகவுள்ளது. இதன் உடலில் வெள்ளைக் கோடுகளுள்ளன. இதன் அலகு கீழ் நோக்கி வளைந்துள்ளது. இது அமெரிக்காவிலிருந்து மறைந்துவிட்டது. இது மிக அரிய பறவைகளிலொன்றாகவும், சிறப்புமிக்கப் பறவையாகவும் கருதப்படுகிறது. இது குளிர் காலத்தில் தமிழ்நாட்டில் கோடிக்கரையிலும், அதனையடுத்துள்ள கடற்கரையோரங்களிலும் காணப்படுகிறது. இது செப்டம்பர் மாதம் முதற்கொண்டு இங்கு வந்து சேர்கிறது. 1961 ஏப்ரல் மாதம், முதன் முதலாக முப்பது பறவைகளுள்ள ஒரு கூட்டம் வேடந்தாங்கல் புகலரணில் காணப்பட்டதாகத் திரு. எம். ஏ. பாஷா குறிப்பிடுகிறார். இப்பறவை வட ஐரோப்பா, மத்திய ஐரோப்பா பகுதிகளிலிருந்து சைபீரியா வரையில் பரவியிருக்கிறது.

பொன் ஆள்காட்டி, செங்கல்பட்டு மாவட்டத்தில் செய்யாறு, சுண்ணும்பெட் போன்ற ஊர்களுக்கருகிலுள்ள உப்பு நீர் நிலைகளில் குளிர் காலத்தில் காணப்படுகிறது. இது வடகிழக்கு சைபீரியாவில் இனப் பெருக்கம் செய்கிறது.

ஐரோப்பாவிலிருந்து தமிழ்நாட்டிற்குப் பெருமளவு வரும் பறவைகளில் டிமாய்ஸெல் கிரேன் (The Demoisell Crane) ஒன்றாகும். இது செப்டம்பர்—அக்டோபர் மாதங்களில் இங்கு வருகிறது.

கோடிக்கரைப் பகுதியில் காணப்படும், மற்றொரு வலசைப் பறவை கருந்தலை கல் (The black headed gull—Larus ridibundus) ஆகும். இது நீர் நிலைகளிலும், சதுப்பு நிலங்களிலும் காணப்படுகிறது. இது செம்படவர் சேரிக்கு அருகிலும், கப்பல்களுக்

கருகிலும் இருந்து மீன், உணவுக் கழிவுகள் போன்றவற்றைத் தின்கின்றது. இது ஐரோப்பாவிலும், ஆசியாவிலும் மித வெப்பப் பிரதேசங்களில் சேய்ப் பெருக்கம் செய்கிறது. இது இங்கு செப்டம்பர்—அக்டோபர் மாதங்களில் வந்து ஏப்ரல் மாத முடிவில் சென்றுவிடுகிறது.

குளிர்காலத்தில் தமிழ்நாட்டிற்கு வரும் வலசைப் பறவை களில் மிகச் சிறியது வெண்வாலாட்டியாகும். இது சதுப்பு நிலங் களிலும் வரண்ட ஏரிகளிலும் காணப்படுகிறது. இது பூச்சிகளைப் பிடித்துத் தின்கிறது. முதுமலையில் கார் (Car), ஜீப் போன்ற வாகனங்கள் செல்லும்போது கலக்கப்பட்டுப் பறக்கும் பூச்சிகளை இது பிடித்துத் தின்ன, அவ் வாகனங்களைப் பின்தொடர்ந்து செல்வதாகத் திரு. எம். ஏ. பாஷா கூறுகிறார்.

# 7. சிறு க்ரீப்
## (The Little Grebe)

### முக்கிளியான்

விலங்கியல் பெயர் : பொடி ஸெப்ஸ் ரூஃபிகோலிஸ் (Podiceps ruficollis)
வரிசை : பொடிஸி பெடிஃபார்மெஸ் (Podicipediformes)

*சிறு க்ரீப் (முக்கிளியான்)* மங்கலான இளம் பழுப்பு நிறமுள்ள கொழுத்த நீர்ப்பறவை. இது குளம் குட்டைகளில் நீந்திக் கொண்டிருப்பதைக் காணலாம். இது காண்பதற்கு ஒரு சிறு



படம் III—7.1. சிறு க்ரீப் (முக்கிளியான்)

வாத்துப்போலத் தோன்றுகிறது. இதன் அலகு குட்டையாகவும், கூர்மையாகவும், இருக்கிறது. இதற்கு வால் கிடையாது. இதன் கால்கள் உடலின் பின் பகுதியில் மிகத் தள்ளியுள்ளன. விரல்களின் இரு பக்கங்களிலும் தோல் படலங்கள் விரிந்து நீந்துவதற்கேற்ப உள்ளன.

இப் பறவைகள் இரண்டு அல்லது மூன்று சேர்ந்து காணப் படுகின்றன. பெரிய நீர்த்தேக்கங்களில் அதிக எண்ணிக்கை யுள்ளவைகள் ஒன்று சேர்ந்து நீந்தித் திரிவதைக் காணலாம். இவைகள் எவ்விதப் பயமுமின்றி மிகத் திறமையாக நீந்தியும், மூழ்கியும் திரிகின்றன. இவைகள் திடீரென நீரில் மூழ்கி மறையும் பொழுது எவ்வித நீர்க்குமிழிகளுமின்றி, அவைகள் மூழ்கிய அடையாளமுமின்றி மறைந்துவிடுகின்றன. இவைகள் நீரை விட்டு எளிதில் வெளிச் செல்வதில்லை. இவற்றை விரட்டினால் கரையில் சிறிது ஓடித் திரிந்து மீண்டும் நீரில் இறங்கிக்கொள் கின்றன.

நீர் வற்றிய காலங்களில் இவைகள் ஒரு இடத்திலிருந்து மற்றொரு நீர்நிலைக்குப் பறந்து செல்லுகின்றன. இவற்றின் இறக்கைகள் சிறியனவாயிருப்பினும் அவைகள் கணிசமான தொலைவு பறந்து செல்கின்றன. இவைகள் மாலை நேரத்தில் தரையில் பாதி நடந்தும் பாதி பறந்தும், அடங்கிய கீச்சு ஒலி (Tittering Shrill) எழுப்பிக்கொண்டு திரிகின்றன. இவைகள் நீரிலுள்ள பூச்சிகள், இளவுயிர்கள் (Larvae), நத்தைகள் தலைப் பிரட்டைகள் (Tad Poles), சிறு மீன்கள் போன்றவற்றை, நீந்தியும், மூழ்கியும், துரத்தியும் பிடித்துத் தின்கின்றன..

இவைகள், நீரில் பாதி மூழ்கியுள்ள செடிகள், நீர்த் தாவரங்கள் ஆகியவற்றின் குச்சிகளைக் கொண்டு கூடுகட்டுகின்றன. 3-5 முட்டைகளிடுகின்றன. இம் முட்டைகள் இடும்பொழுது வெண்மையாயிருப்பினும் கூட்டிலுள்ள புற்களில்பட்டு அழுக்கு நிறமாக மாறிவிடுகின்றன. இப்பறவைகள் இரை தேடிச் செல்லும் பொழுதும், ஆபத்து நேரும்பொழுதும் முட்டைகளைப் புற்க ளாலும் மற்ற தாவரங்களாலும் மூடி மறைத்துவிட்டுச் செல் கின்றன. குஞ்சுகளின் உடலில் வரிகள் காணப்படுகின்றன. இப் பறவைகள் குஞ்சுகளைத் தங்கள் முதுகின்மீது சுமந்துகொண்டு திரிகின்றன.

# 8. சாம்பல்நிற பெலிகன்
## (Grey Pelican)

### கூழைக்கடா

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | பெலிகேனஸ் ஃபிலிப்பென்ஸிஸ் (Pelecanus Philippensis) |
| வரிசை | : | பெலிகேனி ஃபார்மெஸ் (Pelecani formes) |
| குடும்பம் | : | பெலிகேனிடே (Pelecanidae) |

பெலிகன்கள் பெரிய பறவைகள். இவைகளின் கால்கள் குட்டையாகவும் விரல்கள் படலத்தால் (Web) இணைக்கப்பட்டு முள்ளன. இவற்றின் அலகுகள் பெரிதாக அகன்றுள்ளன. அலகின் அடிப்பகுதியிலிருந்து மீள்திறன் (Elastic) கொண்ட தோலாலான பெரிய பை ஒன்றுள்ளது. இப் பை வலை போன்று மீன்களைப் பிடிக்க உதவுகிறது. (புகைப்படம் III 20·2) இவைகள் பார்வைக்குக் கனமாகத் (Coumbrous) தோன்றினாலும் இவற்றின் எலும்புகள் கனமின்றி எளிதில் பறக்கும் வகையில் உள்ளன. இவைகள் காற்றின் திசையில் மிதக்கும். வெயில் நேரங்களில் சிறகடிக்காமல் மிதந்து செல்லும் பழக்கம் உள்ளன.

பெலிகன்களின் மேல் தாடையில் பல கருநீலப் புள்ளிகள் உள்ளன, அலகுப்பை மங்கிய ஊதா நிறத்தில் இருக்கிறது. முதிர்ந்த பறவைகள் சாம்பல் கலந்த வெண்மையாகவும் (Greyish White), குஞ்சுகள் சாம்பல் நிறத்திலுமுள்ளன. இவற்றின் இறக்கை இறகுகள் கருப்பாகவும், வால் வெளிர் பழுப்பாகவும் உள்ளன. இந் நிறங்கள், இவைகள் பறக்கும்பொழுது நன்கு புலப்படுகின்றன. இவைகள் சிறு கூட்டமாகவோ அல்லது பெருங் கூட்டமாகவோ நீர் நிலைகளில் காணப்படுகின்றன. இவைகள் நீரில் சுறு சுறுப்பாக நீந்தி மீன்களைப் பிடித்துக்கொண்டோ

சலனமற்று நீரில் நீந்திக்கொண்டோ அல்லது கரையில் இறகுகளைக் கோதிக் கொண்டோ (Preening) இருப்பதைக் காணலாம்.

இவைகள் பெருந்தீனி தின்பவைகள். அதனால் பல பறவைகள் ஒன்று சேர்ந்து ஓர் அரை வட்டமாகச் சிறகடித்துக்கொண்டு நீரில் மீன்களைத் துரத்திச் செல்கின்றன. இவ்வாறு செல்லும் போது வாயைத் திறந்துகொண்டு செல்வதால் மீன்களை வாரிப் பிடித்துக்கொள்ள (Scoop) ஏதுவாக இருக்கின்றது.



படம் III—8·1. சாம்பல்நிற பெலிகன் (கூழைக்கடா)

இவைகள் சிரமமின்றி நீரிலிருந்து பறக்க முடிகின்றது. இவைகள் பறக்கும்பொழுது கழுத்தைப் பின் இழுத்துத் தட்டையான 'S' போன்று வைத்துக்கொள்கின்றன. இவைகள் சிறகடித்துப் பறக்கும்போது ஒருவித சீட்டி ஒலி உண்டாவதை உணரலாம். இவற்றின் அடித்தட்டைக் கலம் (குத்தெலும்பு =Keel) தட்டையாக இருக்கிறது.

இவைகளின் பெரும்பகுதி ஆந்திரப் பிரதேசத்தில், கிழக்குக் கோதாவரி மாவட்டத்திலும், ஒரு சிறுபகுதி தீபகற்ப இந்தியாவின் பல பகுதிகளிலும் மற்றும் அஸ்ஸாம் மாநிலத்தில்,

கஜீரங்காவிலும், மானஸ் நதிப்பகுதியிலும் காணப்படுகின்றன. ஆனால் இவைகள் எங்கு கூடுகட்டிச் சேய்ப்பெருக்கம் செய்கின்றன என்ற கேள்விக்கு நீண்டநாட்களாகச் சரியான விடை கிடைக்காம லிருந்தது. 1946-லும் 1959-லும் திரு. கே. கே. நீலகண்டன் ஆந்திர மாநிலத்தில் பெலிகன்கள் பெருங் கூட்டமாக இனப் பெருக்கம் செய்வதைக் கண்டுபிடித்தார். இதனைக் கேட்டறிந்த திரு. கீ 1960-ல் ஆந்திராவிலுள்ள அரிடு (Aredu), கொலமுரு (Kolamuru) என்ற கிராமங்களுக்குச் சென்று அங்கு பெலிகன்கள் கூடுகட்டிச் சேய்ப்பெருக்கம் செய்யும் வாழ்க்கை முறையை அறிந்து வந்தார். இப் பறவைகள் இந்தியாவின் பல பகுதிகளி லிருந்தும் நவம்பர் மாதம் அங்குவந்து சேய்ப்பெருக்கம் செய்கின்றன. கொலமுரு கிராமத்தில் சுமார் 2 மைல் சுற்றளவு பகுதியில் கிணற்று நீர் இரைத்து நெல்சாகுபடி செய்யப்படுகிறது. அந்நிலத்தில் செல்லும் கால்வாய்களின் வரப்புக்களிலுள்ள பனை மரங்களிலும் மற்ற உயர்ந்த மரங்களிலும் அவைகள் கூடுகட்டு கின்றன. இக் கூடுகள் குச்சிகளாலான பெரிய மேடைபோன்று துப்புரவற்றுள்ளன. ஒவ்வொரு மரத்திலும் சுமார் 12-15 கூடுகள், பெரும்பாலும் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருக் கின்றன. இவைகள் பொதுவாக மூன்று முட்டைகளிடுகின்றன. இம் முட்டைகள் வெண்மையாயிருப்பினும் குஞ்சு பொறிக்கும் தருவாயில் அழுக்குப் படிந்த பழுப்பு நிறமாக மாறிவிடுகின்றன. கூடுகள் ஒன்றோடொன்று தொட்டுக் கொண்டிருப்பதால் குஞ்சுகள் பொறித்தபின் பல குஞ்சுகள் ஒன்றோடொன்று கலந்து விடுவதாகவும், ஆனால் தாய்ப்பறவைகள் தங்கள் குஞ்சுகளை எளிதில் அடையாளம் கண்டு கொள்வதாகவும் திரு. கீ. குறிப்பிடு கிறார். இவர் 1961 ஜனவரியில் ஒரு பெலிகன் கூட்டம் கஜிரங்காப் புகலரணில் சேய்ப்பெருக்கம் செய்ததைக் கண்டுபிடித்தார்.

நம் நாட்டில் மூன்று இனப் பெலிகன்கள் காணப்படுகின்றன. அவற்றில் மேலே கூறப்பட்ட சாம்பல் நிறப் பெலிகன் மட்டும் நம்நாட்டுப் பறவையாகும். மற்ற இரு இனங்களும் குளிர் காலத்தில் இங்கு வலசை வருபவைகள்.

# 9. பாம்புத்தாரா

## (Snake Darter)

விலங்கியல் பெயர் : அன்ஹிங்கா ரூஃபா (Anhinga rufa)
வரிசை : பெலிகேனிஃபார்மெஸ் (Pelecaniforms)
குடும்பம் : ஃபலக்ரோகொராஸிடே (Phalacrocoracidae)

பாம்புத்தாரா தனித்தும் அல்லது சிறு சிறு கூட்டங்களாகப் பிரிந்தும் (Loose Party) ஆறு, குளம், குட்டைபோன்ற நீர் நிலைகளிலும், சில சமயங்களில் கழிமுகங்களிலும் (Estuaries) காணப்படுகின்றன. இதன் உடல் கருப்பு நிறத்திலும், கழுத்து பாம்புபோன்று நீண்டு வெல்வெட் (Velvet) போன்று பழுப்பு நிறத்திலுமுள்ளன. இதன் தலை குறுகி, கூர்மையான அலகுடன் இருக்கிறது. இதன் முதுகில் பளபளப்பான சாம்பல்நிறக் கீற்றுகள் (Silvery Grey Streaks) உள்ளன. இதன் வால் இறகுகள் நீண்டு விரைப்பாக (Stiff) நுனி ஒரே அளவாக அரைவட்டம்போல் இருக்கின்றன. தலையின் அமைப்பு, முதுகின் நிறம், வாலின் தோற்றம் ஆகியவற்றைக் கொண்டு இதை எளிதில் அடையாளம் கண்டுகொள்ளலாம் (Identified).



படம் III—9·1. பாம்புத்தாரா

உடல் முழுதுமோ அல்லது பாதியோ நீரில் அமிழ்ந்

துள்ளவாறு, இது நீரில் நீந்துகிறது. கழுத்தும், தலையும் நீருக்குள் அசைவது பாம்பு அசைவது போலத் தோன்றுகிறது. மீன்கள் இதன் முக்கிய உணவாகும். இது நீரில் மிகத்திறமையாக நீந்தியும், மூழ்கியும் மீன்களைத் துரத்திப் பிடிக்கிறது. இது நீரினுள் மீனைத் துரத்திச் செல்லும்பொழுது இறக்கைகளைப் பாதி விரித்தபடி வைத்துக்கொண்டு தலையை முன்னும் பின்னும் வேகமாக அசைத்துக்கொண்டு செல்கிறது. இதன் கழுத்து முள் எலும்புகளின் (Neck Vertebrae) அமைப்பு, அலகைக்கொண்டு திடீரென மீனைத் தாக்கி அதைப் பிடித்துக்கொள்ளும் வண்ணம் உள்ளன. இரையைப் பிடித்தபின் நீருக்கு வெளியில் கழுத்தை நீட்டி மீனை ஆகாயத்தில் தூக்கி எறிந்து மீண்டும் பிடித்துக் கொள்கிறது. இது மீனை விழுங்கும்பொழுது அதன் தலை முதலில் செல்கிறது. இதன் கழுத்தும், தலையும் குறுகியதாயிருப் பினும் பெரிய மீன்களை எளிதில் விழுங்குகிறது. இது பெரும் பாலும் நீரில் வாழும் பறவையாயிருப்பினும் இதன் இறகுகள் நனைந்துவிடுகின்றன. இறகுகளை அடிக்கடி உலர்த்த வேண்டி யுள்ளது. இறகுகளை உலர்த்த இது மரக்கிளையின் மீதோ அல்லது மரக்கட்டைகளின் மீதோ இறகுகளையும், வாலையும் விரித்து நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டிருக்கும். இது சி-கி, சி-கி (CHI-GI, CHI-GI) என்று ஒலி எழுப்பும்.

பாம்புத்தாரை, இக்ரெட், கொக்கு, நாரை போன்ற பறவைகளுடன் சேர்ந்து கூட்டமாகக் கூடு கட்டுகிறது. இது நீரிலோ அல்லது நீர் அருகிலுள்ள மரத்திலோ கூடு கட்டுகிறது. இக் கூடு, குச்சிகளால் தாறுமாறாக மேடை போன்று கட்டப் படுகிறது. இது 3-4 முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் வெளிர்ப் பச்சைநிறத்தில் வெண்படலமிட்டுத் தோன்றுகின்றன.

# 10. சிறிய கார்மொராண்ட்
## (The Little Cormorant)

### நீர்க் காக்கை

விலங்கியல் பெயர் : ஃபலக்ரோகோரக்ஸ் நைஜெர் (Phalacrocorax niger)
வரிசை : ஃபெனிகேனிஃபார்மெஸ் (Pelecaniformes)
குடும்பம் : ஃபலக்ரோகொராஸிடே (Phalacrocoracidae)

சிறிய கார்மொராண்ட் (நீர்க் காக்கை) வாத்துப் போன்ற ஒரு நீர்ப்பறவை. இது காட்டுக் காக்கையைக் காட்டிலும் சற்று பெரியது. இதன் உடல் பளப்பளப்பான கருப்பு நிறத்தில் இருக்கிறது. இதன் அலகு மெலிந்து, சேர்த்து அழுத்தப்பட்டு (Slender and Compressed) நுனி வளைந்திருக்கிறது. அலகின் விளிம்புகளில் பற்கள் போன்ற அமைப்புள்ளன. இவ்வமைப்பால் மீன்களை நழுவவிடாமல் பிடித்துக்கொள்கிறது. (படம்) தொண்டையில் சிறிய வெண்மை நிறப்பகுதி காணப்படுகிறது. தலையின் பின்பகுதியில் இறகுகள் நீண்டு கொண்டைபோல் (Crest) வளர்ந்துள்ளன.

இது உள்நாட்டு நீர் நிலைகளில் (Inland Waters) தனித்தோ அல்லது சிறிய பெரிய கூட்டமாகவோ காணப்படுகிறது. இது கடல் நீர்த் தேக்கங்களிலும் காணப்படுகிறது. இது இறக்கைகளை விரித்துக்கொண்டு மரக்கிளை, பாறைபோன்ற உயர்ந்த இடங்களில் உட்கார்ந்து வெய்யில் காயும்.

மீன் இதன் முக்கிய உணவாகும். இது நீரில் நன்கு நீந்தவும், மூழ்கவும் முடிகிறது. (படம் ) இது நீரில் மூழ்கி மீனைப் பிடிக்கிறது. சில சமயங்களில் பல ஒன்று சேர்ந்து, மீன் கூட்டங்களைத் துரத்திப் பிடிக்கின்றன. இது மீனைத் தன் அலகின் குறுக்காகப் பிடித்துக்கொள்கிறது. பிறகு, திடீரெனத் தன்

அலகை அசைத்து, மீனின் தலே வாய்க்குள் முன்னேக்கிச் செல்லும்வண்ணம் பிடித்து மீனே விழுங்குகின்றது. இரையை விழுங்கியவுடன் மீண்டும் மீனேப்பிடிக்க உடனே நீரில் மூழ்கு கின்றது. இதற்கு அதிக அளவு உணவு தேவைப்படுகிறது.



படம் III 10·1 சிறிய கார்மொராண்ட் (நீர்க் காக்கை)

சிறிய கார்மொராண்டுடன் சேர்ந்து பெரிய கார்மொராண்ட் (Large Cormorant), இந்திய ஷேக் (Indian Shag) ஆகிய இரு இனங்களும் காணப்படுகின்றன. கார்மொராண்டுகள் அனேத்தும் நீரிலோ அல்லது நீர் அருகில் உள்ள மரங்களிலோ கூடு கட்டப்படுகின்றன. இவைகள் மற்ற இனப்பறவைகளுடன் சேர்ந்து கூடு கட்டுகின்றன. குச்சிகளேக் கொண்டு மேடை (Flat Form) போல் கூடுகள் கட்டுகின்றன. நான்கு அல்லது ஐந்து முட்டைகளிடுகின்றன. முட்டை வெளிர் நீலமும், பச்சையும் கலந்த நிறத்தில் உள்ளது. முட்டையின் மேற்பரப்பு வெண்மையாக இருக்கின்றது.

# 11. சாம்பல் நிற ஹெரான்
## (Grey Heron)

### நாராயணப்பட்சி

விலங்கியல் பெயர் : ஆர்டியா ஸினேரியா (Ardea Cinerea)
வரிசை : ஸிகோனிபார்மெஸ் (Ciconiformes)
குடும்பம் : ஆர்டிடே (Ardeidae)

சாம்பல்நிற ஹெரான் (நாராயணப்பட்சி) மெலிந்து உயரமாக இருக்கிறது. இதன் கால்கள் நீண்டு, கால் இறகுகளும் விரலிடைப் படலங்களுமின்றி உள்ளன. இது நீர்த் தேக்கமுள்ள சதுப்பு (Marsh) நிலங்களில் காணப்படுகிறது. இதன் உடல் சாம்பல் கலந்த பழுப்பு (Ashy Grey) நிறத்திலும், கழுத்தும், தலையும் வெண்மையாகவும் அடிப்பகுதி வெண்மை கலந்த பழுப்புநிறத்திலுமிருக்கிறது. இதன் கழுத்து, நீண்டு மெலிந்து 'S' வடிவில் இருக்கிறது. இதன் தலை குறுகி, அலகு தடித்துக் கூர்மையாகக் கத்தி போன்றுள்ளன. இதன் தலையில் பிடரியிலிருந்து நீண்ட கருத்த பிடரி இறகுகள் கொண்டைபோல (Crest) உள்ளன. அதன் மார்புப் பகுதியில் நீண்ட கருப்புக் கீற்றுக்கள் (Black Streaks) வெண்மையான இறகுகளில் உள்ளன. கருப்புப் புள்ளிகளாலான ஒரு கோடு முன்கழுத்தின் மையம்



படம் III—11.1 சாம்பல்நிற ஹெரான் (நாராயணப்பட்சி)

வரையிலும் செல்கிறது. பெண்பறவை ஆணைப்போல் இருப்பினும் அதன் கொண்டை (பிடரி) இறகுகளும், மார்பு இறகுகளும் நன்கு வளர்வதில்லை.

சாம்பல்நிற ஹெரான் பொதுவாகத் தனித்துக் காணப்படு கிறது. இது தன் தலையை இறக்கைகளுக்கிடையில் தொங்க வைத்துத் தூங்குவது போன்று நீரில் நின்றுகொண்டிருக்கும். ஆனால் இது உறுமீன் வருமெனக் காத்திருக்கிறது என்பதை அறிதல் வேண்டும். ஏதாவது மீன் அல்லது தவளை, தான் பிடிக்கு மளவுக்கு நெருங்கினால் தன் நீண்ட கழுத்தைத் திடீரென நீட்டித் தன் அலகால் இரையைப் பிடித்துக்கொள்கிறது. உடனே ஒரு அசைவால் இரையைத் திருப்பி அதன் தலை முன்னோக்கிச் செல்லு மாறு விழுங்குகிறது.

ஹெரான் பறக்கும்பொழுது தலையை முன்னோக்கி நீட்டியும், கால்களைப் பின்னோக்கி வாலினடியில் நீட்டியும் வைத்துக் கொண்டு இறகுகளை வேகமாக அசைத்துப் பறக்கின்றன. பறந்து செல்லும் போது சில சமயங்களில் ''ஃகுரொக்'' என்ற ஆழ்ந்த ஒலி எழுப்பும்.

இது குச்சிகளைக் கொண்டு மையத்தில் ஒரு குழிவுள்ள மேடை போன்ற கூட்டைக் கட்டுகிறது. குழியில் புற்களையும், மற்ற பொருட்களையும் வைத்துக் கூட்டை ஒழுங்குபடுத்துகிறது. இது பொதுவாக நீருக்கு அருகிலுள்ள மரத்தில் கூடு கட்டுகிறது. மேலும் இது மற்ற இனங்களுடன் சேர்ந்து கூட்டமாகக் கூடு கட்டுகிறது. இது பொதுவாக 3—6 முட்டைகளிடுகிறது. முட்டை ஆழ்ந்த கடற் பச்சை (Deep Sea Green) நிறத்தில் இருக்கிறது.

# 12. சிறிய ஈக்ரெட்
## (The Small Egret)

### வெள்ளைக் கொக்கு

விலங்கியல் பெயர் : ஈக்ரட்டா கார்கிட் (Egretta Gargett)
வரிசை : ஸிகோனி ஃபார்மெஸ் (Ciconi Formes)
குடும்பம் : ஆர்டிடே (Ardeidae)

இக்ரெட்டுகள் (வெள்ளைக் கொக்குகள்) நீர் நிலைகளில் காணப் படுகின்றன. இவைகள் சுமார் நம் வீட்டுக் கோழியின் பருமன்



படம் III—12.1. சிறிய ஈக்ரெட் (வெள்ளைக் கொக்கு)

(Size) உள்ளன. இனப் பெருக்கக் காலங்களில் இவற்றின் முதுகில் அழகான இறகுகள் வளர்கின்றன. பெண்களின் அலங்காரத் திற்காக நம் நாட்டில் பல்வேறு இன வெள்ளைக் கொக்குகள் கொல்லப்பட்டு இறகுகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. உலக

நாடுகளின் வாணிபச் சட்டத்திலும், பெண்களின் நாகரீக மாற்றத்திலும் இவைகள் இன்று முற்றிலும் மறைந்துவிடாமல் காப்பாற்றப்பட்டுள்ளன என்று டாக்டர் ஸலீம் அலி குறிப்பிடுகிறார்.

இக்ரெட்டில் (வெள்ளைக் கொக்குகளில்) மூன்று இனங்கள் உள்ளன. அவைகளின் வேறுபாடுகள் அவற்றின் பருமனைப் பொறுத்ததேயன்றி (Size) வேறு அல்ல. அவையாவன: பெரிய இக்ரெட் (வெள்ளைக் கொக்கு) (The Large Egret), இக்ரெட்டா ஆல்பா (Egretta Alba), நடுத்தர இக்ரெட் (The Median Egret), இக்ரெட்டா இண்டர் மீடியா (Egretta Intermedia); சிறிய இக்ரெட் (வெள்ளைக் கொக்கு) புகைப்படம் (III—20.2) என்பனவாகும்.

# 13. கால்நடை ஈக்ரெட்

## (The Cattle Egret)

## மாட்டுக் கொக்கு

விலங்கியல் பெயர் : புபுல்கஸ் இபிஸ் (**Bubulcus** ibiss)
வரிசை : ஸிகோனி ஃபார்மெஸ் (Ciconi formes)
குடும்பம் : ஆர்டிடே (**Ardeidae**)

கால்நடை இக்ரெட் வெண்மை நிறத்திலிருக்கிறது. இது சிறிய இக்ரெட்போல் இருக்கிறது. இதன் அலகு தடித்து மஞ்சள் வண்ணத்தில் இருக்கிறது. இவ்வலகின் நிறத்தால் சாதாரண காலங்களில் இதனை சிறிய இக்ரெட்டிலிருந்து பிரித்துணரலாம். இதன் தலை, கழுத்து, முதுகு ஆகியவை செம்மஞ்சள் அல்லது பொன்னிறத்தில் உள்ளன. இவைகள் நீர்நிலைகளில் அதிகம் வாழாமல், தனித்தோ அல்லது பெருங் கூட்டமாகவோ கால்நடைகள் மேய்ந்து கொண்டுள்ள இடங்களில் காணப்படுகின்றன. இவைகள் நிலத்திலுள்ள பூச்சிகளை உணவாகக் கொள்கின்றன. இப்பறவைகள் கால்நடைகளுக்கிடையில் அங்குமிங்கும் திரிந்துகொண்டு பூச்சிகளைப் பிடித்துத் தின்கின்றன. சில



படம் III—13.1. கால்நடை ஈக்ரெட்

சமயங்களில் இவைகள் கால்நடையின் முதுகின் மீது உட்கார்ந்து கொண்டிருக்கும். இதனால் இவைகள் தங்கள் சுற்றுப்புறத்தை நன்கு கண்டறிய முடிகிறது. கால்நடைகள் செல்லும்போது வெட்டுக்கிளிகள் கலைக்கப்பட்டுப் பறப்பதால் அவற்றைப் பிடித்துத் தின்கின்றன. கால்நடைகளின் முதுகின் மீதுள்ள ஒட்டுண்ணிகளையும் பிடித்துத் தின்கின்றன.

கால்நடை இக்ரெட்டுகள் காகங்கள் போன்ற மற்ற பறவைகளுடன் சேர்ந்து ஒரே மரத்தில் தங்குகின்றன (Roost). இவைகள் ஒழுங்கற்ற அமைப்பில் பறக்கின்றன. பறக்கும்பொழுது கழுத்துப் பின்னோக்கி வளைந்து, தலை இறக்கைகளுக்கிடையில் வைக்கப்பட்டுள்ளது.

கால்நடை இக்ரெட்டுகள் பல ஒன்றுசேர்ந்து தனிக் கூட்டமாகவோ அல்லது குளத்து ஹெரான்கள் போன்ற மற்ற பறவைகளுடன் சேர்ந்தோ, ஒரே இடத்தில் கூடுகட்டி சேய்ப் பெருக்கம் செய்கின்றன. சில சமயங்களின் இவைகள் பாம்புத்தாரை (டார்டர்) கார்மொராண்ட், வெண் இக்ரெட் (வெள்ளைக் கொக்கு) போன்ற பறவைகளுடன் சேர்ந்து கூடு கட்டி இனப் பெருக்கம் செய்கின்றன. இவற்றின் கூடுகள் குச்சிகளால் கட்டப் பட்டவை. இக் கூடுகள் சாதாரணமாக அழகற்றவை. இப் பறவைகள் அடர்ந்த மரங்கள் எங்கிருப்பினும் அவற்றில் கூடு கட்டுகின்றன. ஒரு அடையில் 3—5 வெளிர் நீலநிற முட்டைகள் உள்ளன.

# 14. குளத்து நாரை
## (Pond Heron)

### நொள்ளை முடையான்

விலங்கியல் பெயர் : ஆர்டியோலா க்ரேயி (Ardeola grayii)
வரிசை : ஸிகோனி ஃபார்மெஸ் (Ciconi formes)
குடும்பம் : ஆர்டிடே (Ardeidae)

குளத்துநாரை (நொள்ளை முடையான்) வீட்டுக்கோழியின் பருமன் இருக்கிறது. இது உட்கார்ந்திருக்கும் பொழுது, பழுப்பு



படம் III—14.1 குளத்து நாரை (நொள்ளைமுடையான்)

மண் நிறத்தில் பல கோடுகளுடன் தோன்றுகிறது. இதனல் இது இருப்பதே தெரியாத காப்பு நிறமாக உள்ளது. இது பறக்கும்

பொழுது இறக்கைகளிலும் வாலிலும் உள்ள வெண்மை நிறம் நன்கு வெளிப்படுகின்றது. சேய்ப் பெருக்கக் காலத்தில் இதன் முதுகுப் பகுதியில் மயிர்கள் போன்ற செம்பழுப்புச் சிவப்பு நிற இறகுகள் (maroon hair like plumes) தோன்றுகின்றன. பிடரியில் நீண்ட வெண்நிறக் கொண்டை இறகுகள் (crest) வளர்ந்துள்ளன. இதனுல் இப் பறவை காண்பதற்கு மிக வனப்புடன் உள்ளது. இப் பறவை தனித்தோ அல்லது இரண்டு, மூன்று சேர்ந்தோ சேறுள்ள குளங்களில் காணப்படுகின்றன. மீன், நண்டு, தவளை போன்றவை இதன் முக்கிய உணவாகும். இது நீரிலும் நீர் ஓரங் களிலும் இறக்கைகளுக்கிடையில் தலையை மடக்கிக் கூனி நின்று கொண்டிருக்கும். இதன் கழுத்து எட்டுந் தொலைவு இரை நெருங் கியதும் திடீரெனத் தாக்கிப் பிடித்துக்கொள்கிறது. சில சமயங் களில் கால்களை நீருக்கு வெளியில் எடுத்து அடிவைத்து மெது வாகவும் உறுதியாகவும் சலனமற்று நீரில் நடந்து செல்கிறது. இச்சமயத்தில் கழுத்தும், அலகும் இரையைப் பிடிக்கத் தயாராய் உள்ளன.

தொந்தரவு செய்யாவிட்டால், இது குளங்களில் மனிதர் களுக்கு மிக அருகிலேயே நின்றுகொண்டிருக்கும். இவைகள் குளங்களில் துணி துவைப்பவர்களுக்கு அருகிலும் நீர் எடுக்கும் பெண்களுக்கருகிலும் பயமின்றி நின்றுகொண்டிருப்பதைக் காணலாம். இடையூறு நேரும் பொழுது ''குரோக்'' ''குரோக்'' என்ற ஒலி எழுப்பிக்கொண்டு வேகமாக இறகுகளை அடித்துப் பறந்து செல்கிறது. இது பறக்கும்பொழுது இறக்கைகளும், வாலும் வெண்மையாகத் தெரிகின்றன என்று முன்பே கூறப் பட்டிருக்கிறது. மாலை நேரங்களில் பல குளத்து நாரைகள் ஒன்று சேர்ந்து பெருங் கூட்டங்களாக மரங்களில் தங்குகின்றன.

குளத்து நாரைகள் குச்சிகளைக் கொண்டு பெரிய மரங்களில் கூடு கட்டுகின்றன. நீருக்கருகிலுள்ள மரங்களிலன்றி ஊரின் நடுவே உள்ள பெரிய மரங்களிலும் இவைகள் கூடு கட்டுவதுண்டு. இவைகள் வெள்ளை இக்ரெட், இரவு ஹெரான் (Night Heron—வக்கா) போன்ற பறவைகளுடன் சேர்ந்து ஒவ்வொரு வருடமும் கூடு கட்டுகின்றன. இவைகள் 3—5 முட்டைகளிடுகின்றன. இம் முட்டைகள் வெளிர் பசுமை கலந்த நீல நிறத்தில் (Pale greenish blue) உள்ளன. இதனை மடையான் என்றும், குருட்டுக் கொக்கு என்றும் கூறுவதுண்டு.

# 15. இரவு ஹெரான்
## (Night Heron)

### வக்கா

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | நிக்டிகோரக்ஸ் நிக்டிகோரக்ஸ் (Nycticorax nycticorax) |
| வரிசை | : | ஸிகோனிஃபார்மெஸ் (Ciconii formes) |
| குடும்பம் | : | ஆர்டிடே (Ardeidae) |

இரவு ஹெரான் (வக்கா) கால்நடை இக்ரெட்டைக் (மாட்டுக் கொக்கைக்) காட்டிலும் பெரியது. இது குட்டையாக இருக்கிறது. இது அந்தி வேளைகளிலும் இரவு வேளைகளிலும் வெளி வருகிறது. முதிர்ந்த பறவை பொதுவாகச் சாம்பல் நிறத்திலிருக்கிறது. தலையின் உச்சிப் பகுதியும் முதுகின் மேற்பகுதியும் கருப்பு நிறத்திலுள்ளன. வயிற்றுப் பகுதி வெண்மையாக இருக்கிறது. இதன் கொண்டை இறகுகள் கருப்பாக உள்ளன. இக் கொண்டை இறகுகளில் இரண்டு வெண்மையாகக் கழுத்துப் பிடரி வரையிலும் நீண்டுள்ளன. இளம் பறவை பழுப்பு நிறக் கோடுகளுடன் வயல் ஹெரான் (Paddy Heron — குருட்டுக் கொக்கு) போன்று தோன்றுகிறது. சாதாரண காலத்தில் இதன் கால்கள் சாம்பல் நிறத்திலுள்ளன. சேய்ப் பெருக்கக் காலத்தில் இக் கால்கள் இரத்தச் சிவப்பு நிறமாக மாறுகின்றன.



படம் III—15.1.
இரவு ஹெரான் (வக்கா)

இரவு ஹெரானின் கனத்த உடலும், சிறகடித்துப் பறக்கும் முறையும் இதை மற்ற பறவைகளிலிருந்து பிரித்துக் காட்டுகிறது. இது பறக்கும் பொழுது சாதாரணமாக அடிக்கடி 'வாக்' என்று கத்துகிறது. இரவு ஹெரான்கள் பெருங் கூட்டமாகக் காணப்படுகின்றன.

இப் பறவை நீருக்கருகிலுள்ள அடர்ந்த மரத்தில் குச்சிகளைக் கொண்டு மேடை போன்ற கூடு கட்டுகிறது. இது நான்கு அல்லது ஐந்து முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் வெளிர் பச்சை நிறத்திலுள்ளன. இளம் பறவைகளும். சில முதிர்ந்த பறவைகளும் நீர் வற்றிக்கொண்டுள்ள குளத்தில், தங்கள் கூடுகளுள்ள மரத்திற்கருகிலேயே ஆழமற்ற நீரில் குளிப்பதைக் காணலாம்.

# 16. வண்ண ஸ்டார்க்
## (Painted Stork)

### பவளக்கால் நாரை

விலங்கியல் பெயர் : ஐபிஸ் ல்யூகோஸெஃபேலஸ் (Ibis leucocephalus)
வரிசை : ஸிகோனிஃபார்மெஸ் (Ciconiformes)
குடும்பம் : ஸிகோனிடே (Ciconidae)

வண்ண ஸ்டார்க் (பவளக்கால் நாரை) ஒரு பருந்தளவு உள்ளது; நீண்ட கால்கள் கொண்டது. இதன் டிபியாவில் (Tibia) இறகுகள் இல்லை. இது நிலத்திலிருந்து தலை உச்சிவரை சுமார் ஒரு மீட்டர் உயரமிருக்கிறது. இதன் வெண்மையான இறகுகள் முதுகுப் பகுதியில், பசுமை கலந்த கருப்பு நிறத்தில் பளபளப்பாகவுள்ளன. இதன் மார்பில் கருப்பு நிறக் குறுக்குப் பட்டை செல்கிறது. இதன் வாலுக்கு அருகில் மென்மையான வெளிர் ரோஜா நிற (Rose Pink) இறகுகள் உள்ளன. இவ் விறகுகளினுலேயே இதற்கு வண்ண ஸ்டார்க் என்ற பெயர் வந்தது. இதன் முகம் இறகுகளற்று மஞ்சள் நிறத்திலிருக்கிறது. இதன் அலகு தடித்து, முன் வளைந்து ஆழ்ந்த மஞ்சள் நிறத்தி லிருக்கிறது. வண்ண ஸ்டார்க், பெரிய அல்லது சிறிய கூட்ட மாக நீர் நிலைகளில் காணப்படுகிறது. இது மற்ற ஸ்டார்க் இனங் களுடன் சேர்ந்து காணப்படுகிறது.

நீர்ப்பூச்சிகள், நத்தை, மீன், தவளை போன்றவற்றை இது உணவாகக் கொள்கிறது. இது தூங்குவதுபோல கூனி நின்று கொண்டிருந்து இரை நெருங்கும்பொழுது அதைப் பிடித்துக் கொள்கிறது. கழுத்தைக் கீழே தொங்கவிட்டு, அலகைத் திறந்து நீரில் பாதி அழுத்திக்கொண்டு மெதுவாக நடந்து சென்றும் இரையைப் பிடிக்கிறது. இது தன் ஒரு காலை முன்னும் பின்னும் அசைத்து நீரை கலக்கும்பொழுது வாய்க்கருகில் வரும் இரையைப்

பிடித்துக் கொள்கிறது. மேலும் இச் சமயத்தில் தன் இறக்கையை விரித்து நிழல் உண்டாக்கிப் பயமுறுத்தி இரையை வெளியேறச் செய்து பிடிக்கிறது.

இவைகள் நீரிலும், நீருக்கருகில் உள்ள மரங்களிலும் தங்குகின்றன. இவைகள் துவக்கத்தில் இறக்கைகளை அழுத்தமாக அடித்துப் பறக்கின்றன. அதன்பின் சிறிது சறுக்கிச் செல்கின்றன.



படம் III—16.1. வண்ண ஸ்டார்க் (பவளக்கால் நாரை)

(Glide). வெயில் நேரத்தில் இறக்கைகளை அசைவற்ற நிலையில் வைத்துக்கொண்டு நீண்ட நேரம் காற்று மண்டலத்தில் மிதக்கின்றன.

இவற்றின் கூடுகள் நீர்ச் செடிகளாலும் குச்சிகளாலும் கட்டப்படுகின்றன. இக் கூடுகள் மேடை போன்று மையத்தில் ஒரு குழியுடன் உள்ளன. நீரிலும், நீரருகில் உள்ள மரங்களிலும் கார்மொடான், இக்ரெட் போன்ற மற்றப் பறவைகளுடன் சேர்ந்து கூடு கட்டுகின்றன. இவைகள் சுமார் 3-5 முட்டைகளிடுகின்றன. இம் முட்டைகள் மங்கிய வெண்மை நிறத்தில் ஒரு சில புள்ளிகளுடனும், கோடுகளுடனும் உள்ளன.

# 17. திறந்த அலகு ஸ்டார்க்
## (Open Billed Stork)

### நத்தை கொத்தி நாரை—செங்கால் நாரை

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | அனஸ்டோமஸ் ஆஸிடேன்ஸ் (Anustomus Oscitans) |
| வரிசை | : | ஸிகோனி·.பார்மெஸ் (Ciconiformes) |
| குடும்பம் | : | ஸிகோனிடே (Ciconidae) |

திறந்த அலகு ஸ்டார்க் (செங்கால் நாரை) வெண்மை நிறத்திலோ, அல்லது சாம்பல் கலந்த வெண்மை நிறத்திலோ இருக்கிறது. இதன் இறக்கைகள் கருப்பு நிறத்தில் காணப்படுகின்றன. காலிலிருந்து, தலை உச்சிவரை இது சுமார் ஒரு மீட்டர் உயரமிருக்கிறது.

இதன் அலகு கருஞ்சிவப்பு நிறத்தில், அலகுக்கிடையில் சிறிது இடைவெளியுடன் நம் கவனத்தை எளிதில் கவரக் கூடியதாய் உள்ளது. பெரிய நத்தைகளை உணவாகக் கொள்வதால் அவற்றைப் பிடித்து உடைத்துத் தின்பதற்கான தகை வமைப்பாக (Adaptation) இவ்விடைவெளி இருக்கலாம் என டாக்டர் ஸலீம் அலி கருதுகிறார். இவ்விடை வெளியால் நத்தையோட்டின் வாய்விளம்பு உடைக்கப்பட்டு மூடி (Operculam) திறக்கப்படும். ஓட்டினுள் (Shell) உள்ள மென்மையான நத்தையின் உடலை எடுத்து



படம் III—17.1. திறந்த அலகு ஸ்டார்க்
(நத்தை கொத்தி நாரை)

இது விழுங்குகிறது. தவளை, மீன், பெரிய பூச்சிகள் ஆகியவை களும் இதன் உணவாகும். இதை நத்தை கொத்தி நாரை என்றும் கூறுவர்.

திறந்த அலகு ஸ்டார்க்குகள் இரண்டு மூன்று சேர்ந்தோ அல்லது பெருங்கூட்டமாகவோ நீர் நிலைகளில் காணப்படுகின்றன.



படம் III—17.2. திறந்த அலகு ஸ்டார்க்

இவைகள் பெருங்கூட்டமாகக் கார்மொராண்ட், ஹெரான், ஐபிஸ் போன்ற பறவைகளுடன் சேர்ந்து கூடு கட்டிச் சேய்ப் பெருக்கம் செய்கின்றன. இவைகள் குச்சிகளைக் கொண்டு மேடை போன்ற கூட்டை, மையத்தில் குழியுடன் கட்டுகின்றன. இலைகளையும் மற்றச் செடிகளையும் வைத்துக் கூட்டை ஒழுங்குபடுத்துகின்றன. இவைகள் நீரிலோ அல்லது நீர் அருகில் உள்ள மரங்களிலோ கூடு கட்டுகின்றன. இவைகள் 3-4 வெண்ணிற முட்டைகளிடு கின்றன.

# 18. வெள்ளை ஐபிஸ்

## (White Ibis)

### அருவா மூக்கன்

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | த்ரெஸ்கியோர்னிஸ் மெலனோஸெஃபேலா (Threskiornis melanocephala) |
| வரிசை | : | ஸிகோனிஃபார்மெஸ் (Ciconiformes) |
| குடும்பம் | : | த்ரெஸ்கியோர்னிதிடே (Threskiornithidae) |

வெள்ளை ஐபிஸ் (அருவா மூக்கன்), நம்முடைய பெரிய வீட்டுக் கோழியின் பருமன் இருக்கிறது. இதன் தலையிலும், கழுத்திலும் இறகுகள் இல்லை. இதன் அலகு நீண்டு, தடித்து, கீழ்



படம் III—18.1. வெள்ளை ஐபிஸ் (அருவா மூக்கன்)

நோக்கி வளைந்துள்ளது. (புகைப்படம் III—20.2.) இதன் சேய்ப் பெருக்கக் காலங்களில் இதன் தோள்பட்டையிடத்திலும்,

இறக்கைகளிலும் வெளிர் கருப்பு நிறம் காணப்படுகிறது. கழுத்தின் அடிப்பகுதியில் நீண்ட அலங்காரமான இறகுகள் உள்ளன. இது சிறு கூட்டமாகவோ அல்லது பெருங்கூட்ட மாகவோ நீர் நிலைகளில் காணப்படுகிறது. இது கரண்டி வாயான் (Spoon Bill), ஸ்டார்க் போன்ற மற்றப் பறவைகளுடன் சேர்ந்து நீர்த் தேக்கமுள்ள இடங்களில் காணப்படுகிறது. இது இடுக்கி போன்ற தன் அலகைப் பாதி திறந்துகொண்டு சேற்று மண்ணைக் கிளரி உணவைத் தேடுகிறது. நீரிலுள்ள இரையைப் பிடிக்கும் பொழுது, தலை முழுவதையும் நீரினுள் அழுத்திக்கொள்கிறது. இது நத்தை, நண்டு, புழு, பூச்சி, தவளை போன்றவைகளையே பெரும்பாலும் உணவாகக்கொள்கிறது. சில சமயங்களில் மீனையும் தின்கிறது.

இது கழுத்தையும், தலையையும் முன் நீட்டிக்கொண்டும், கால்களை வாலுக்கு அடியில் பின்னேக்கி நீட்டிக்கொண்டும் பறக் கிறது. இது சிறகை அழுத்தமாக அடித்துப் பறக்கிறது. அவ்வப் பொழுது சரிந்து செல்கிறது. இப் பறவைகள் கூட்டமாக 'V' போன்ற அமைப்பிலோ அல்லது நீண்ட வளைவு நெளிவுடனே பறந்து செல்கின்றன. இவைகளுக்குக் குரல்வளையில்லை. அதனுல் இவைகள் ஒலி எழுப்புவதில்லை. சேய்ப் பெருக்கத்திலுள்ள பறவைகள் ஒலி அதிர்வுகளை (Vibrants) உண்டாக்குகின்றன.

நீரிலோ, நீர் அருகிலுள்ள மரங்களிலோ கூடுகள் கட்டு கின்றன. கூடுகள் குச்சிகளால் கட்டப்படுகின்றன. இவைகள் மற்றப் பறவைக் கூட்டங்களுடன் சேர்ந்து கூடுகள் கட்டுகின்றன. 2-4 முட்டைகளிடுகின்றன. இம் முட்டைகள் மஞ்சள் கலந்த பழுப்புப் புள்ளிகளுடனே அல்லது புள்ளிகளற்றே, நீல நிறத் திலோ அல்லது பசுமை கலந்த வெண்மை நிறத்திலோ உள்ளன.

# 19. கறுப்பு ஐபிஸ்
## (Black Ibis)

விலங்கியல் பெயர் : ஸ்யூடிபிஸ் பாபில்லோஸா (Pseudibis papillosa)
வரிசை : ஸிகோனி.ஃ.பார்மெஸ் (Ciconiiformes)
குடும்பம் : த்ரெஸ்கியோர் நிதிடே (Threskiornithidae)

கறுப்பு ஐபிஸ், வெள்ளை ஐபிஸ் பருமன் இருக்கிறது. இது நீர் நிலைகளிலிருந்து தள்ளி தொலைவு இடங்களிலும் காணப்படு



படம் III—19.1. கறுப்பு ஐபிஸ்

கிறது. இது 3—4 சேர்ந்து சிறு சிறு கூட்டமாகத் திறந்த வெளிகளில் விளை நிலங்களுக்கருகில் காணப்படுகிறது.

இதன் தலை இறகுகளற்றுக் கருப்பாக இருக்கிறது. தலையின் உச்சியில் முக்கோண வடிவமான செந்நிறக் குறியொன்றுள்ளது.

இதன் கால்கள் செம்மண் நிறத்திலுள்ளன. தோள் பகுதியில் வெண்ணிறம் காணப்படுகிறது.

இப் பறவைகள் இரவில் பழக்கமான மரங்களில் தங்குகின்றன. இவைகள் பறந்து செல்லும்பொழுது சிறகுகளை அடித்துப் பறந்து சிறிது தொலைவு சென்றதும், சிறகடிக்காது மிதந்து சிறிது தொலைவு செல்கின்றன. இப்படி இவைகள் மாறி மாறிப் பறக்கின்றன. இவைகள் கூட்டமாகப் பறக்கும் பொழுது 'V' அமைப்பில் செல்கின்றன. இவைகள் புழு, பூச்சி, பாம்பு, மற்ற ஊர்வனங்கள் போன்றவற்றையும், தானியங்களையும் உட்கொள்கின்றன.

கருப்பு ஐபிஸ்கள் மற்றப் பறவைகளுடன் சேர்ந்து கூடுகட்டிச் சேய்ப் பெருக்கம் செய்வதில்லை. இவைகள் நீரிலிருந்து தொலைவிலுள்ள பனை மரங்கள் போன்ற உயரமான மரங்களில் கூடு கட்டுகின்றன. இவைகள் இரண்டு மூன்று சேர்ந்து ஒரேயிடத்தில் கூடு கட்டுவதுண்டு. இதன் கூடுகள் குச்சிகளாலான கிண்ண வடிவில் உள்ளன. புற்களையும், இறகுகளையும் சேர்த்துக் கூடுகளை ஒழுங்குபடுத்துகின்றன. இவைகள் கழுகு, பருந்து போன்றவற்றின் பழைய கூடுகளையும் பயன்படுத்துவதுண்டு. இவைகள் 2—4 பளபளப்பான வெளிர் பச்சை நிற முட்டைகளிடுகின்றன. சில சமயங்களில் இம் முட்டைகளில் பழுப்பு நிறப் புள்ளிகளும் கோடுகளும் காணப்படுகின்றன.

# 20. கரண்டி வாயான்

## (Spoon Bill)

### மண்வெட்டி வாயான்

விலங்கியல் பெயர் : பிளடாலியா ல்யுகொரோடியா (Platalea leucorodia)
வரிசை : ஸிகோனி.ீ.பார்மெஸ் (Ciconiformes)
குடும்பம் : ஸிகோனிடே (Ciconiidae)

கரண்டி வாயான், வீட்டு வாத்தைக் காட்டிலும் சற்றுப் பெரியது. சுமார் 45 செ.மீ. உயரமிருக்கிறது. இதன் அலகு கருப்பும் மஞ்சளும் கலந்து அகன்று தட்டையாக, நுனி கரண்டி போன்ற அமைப்பிலுள்ளது. இப் பறவை வெண்மை நிறம். இதன் கழுத்தும், கால்களும் நீண்டுள்ளன. நீண்ட வெளிர் மஞ்சள் நிற இறகுகள் பிடரிப் பகுதியில் உள்ளன. சேய்ப் பெருக்கக் காலத்தில் கழுத்தின் கீழ்ப் பகுதியில் மஞ்சள் நிறம் தோன்றுகிறது.



படம் III—20.1. கரண்டி வாயான் (மண்வெட்டி வாயான்)

இப் பறவைகள் தனித்தோ அல்லது 10-20 ஒன்று சேர்ந்து கூட்டமாகவோ நீர்த் தேக்கப் பகுதிகளில் காணப்படுகின்றன. இவை

கள் ஸ்டார்க் (Storks) களுடன் சேர்ந்து கூட்டமாகக் காணப்படுவதுண்டு. இவைகள் கழிமுகங்களில் சேறுள்ள இடங்களில் காணப்படுகின்றன. மதியத்தில் மணற்கரையோரங்களில் தங்குகின்றன. இவைகள் உணவைத் தேடிச் செல்லும்பொழுதும், திரும்பி வரும்பொழுதும் ஒரே வரிசையாக ஒரு முனை முன்னும், மறுமுனை சற்றுப் பின்னும் உள்ளவாறு பறக்கின்றன. இவைகள் 'V' போன்ற அமைப்பிலும் பறந்து செல்கின்றன. இவைகள் கணிசமான உயரத்தில் இறக்கைகளை மெதுவாக ஆனால் சீராக அசைத்துப் பறக்கின்றன. பறக்கும்பொழுது கழுத்தும் கால்களும் நீட்டி வைக்கப்பட்டுள்ளன.



படம் III—20.2. மண்வெட்டி வாயான், அருவா மூக்கன்
வெள்ளைக் கொக்கு, கூழைக்கடா

இவைகள் நீர்ப்பூச்சிகள், நத்தை, தலைப்பிரட்டை (Tadpole), தவளை ஆகியவற்றையும், தாவர உணவையும் தின்கின்றன. கழுத்தை நீட்டித் தலையைச் சற்று ஒரு பக்கமாகச் சாய்த்து, அலகால் சேற்றைக் கிளரி இரை தேடிக்கொண்டு, ஆழமற்ற நீரில் இவைகள் நடத்து செல்கின்றன.

இவைகள் தனிக் கூட்டமாகவோ அல்லது கார்மொராண்ட், இக்ரெட், ஹெரான் போன்ற வேறு இனப் பறவைக் கூட்டங்களுடனோ சேர்ந்து கூடுகள் கட்டுகின்றன. இவைகள் நீரிலோ அல்லது நீர் அருகிலுள்ள மரங்களிலோ பெரிய குச்சிகளால் மேடை போன்ற கூடுகளைக் கட்டுகின்றன. ஒரு அடையில் சுமார் 4 முட்டைகளுள்ளன. முட்டைகள் சிவப்புக் கலந்த பழுப்பு நிறப் புள்ளிகளையும், படலங்களையும் கொண்ட மங்கிய வெள்ளை நிறத்தில் உள்ளன.

# 21. ஃபிளமிங்கோ
## (Flamingo)

### பூநாரை — செங்கால் நாரை

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | ஃபோனிக்கோப்டெரஸ் ரோஸியஸ் (Phoenicopterus roseus) |
| வரிசை | : | ஸிகோனிஃபார்மெஸ் (Ciconiiformes) |
| குடும்பம் | : | ஃபோனிக்கோப்டெரிடே ((Phoenicopteridae) |

இந்தியாவிலுள்ள பறக்கும் பறவைகளில் மிகப் பெரியது சாரஸ்கிரேன். அதற்கு அடுத்தது ஃபிளமிங்கோவாகும்.



படம் III—21 1. ஃபிளமிங்கோ (பூநாரை)

ஃபிளமிங்கோ நம் வீட்டு வாத்தின் பருமனும் சுமார் 120 செ.மீ உயரமும் இருக்கிறது. இதன் கால்கள் நீண்டு மெலிந்து இளஞ் சிவப்பு நிறத்திலுள்ளன; இது செங்கால் நாரை என்றும் பூநாரை என்றும் அழைக்கப்படுகிறது. இதன் விரல்கள் படலத்தால்

இணைக்கப்பட்டுள்ளன. இதன் கழுத்து நீண்டு குழல் போன்று எளிதில் சுழலக்கூடியதாக இருக்கிறது. புடைத்த தலையிலிருந்து பெரிய ரோஜா நிற அலகு வளைந்து காணப்படுகிறது. ஆண் பறவையின் இறகு ரோஜா நிறத்தில் கருப்பு விளிம்புடனும், பெண் பறவையின் இறகு வெண்ணிறத்தில் கருப்புக் கோடுகளுடனும் உள்ளன. இதன் தலை மிக உறுதியானது. இதன் தாடைகள் சமமாகப் பிரிக்கப்படாமல் மேற்தாடை கீழ்த் தாடையில் மூன்றில் ஒரு பங்குள்ளது. மேற்தாடை சற்று வளைந்துள்ளது. இதன் இரு விளிம்புகளிலும் கூர்மையான சிறு பற்கள் போன்ற அமைப்பு உள்ளன. அலகு மூடும்பொழுது இப் ''பற்கள்'' கீழ்த் தாடையிலுள்ள சிறு சிறு குழிகளில் பதிந்துகொள்கின்றன. இத்தகைய அமைப்பால் இது வாத்தைப் போன்று உணவைச் சலித்து உட்கொள்கிறது. படம் III—21.2. இது உணவைச் சேகரிக்கும் முறை மிகவும் விநோதமாகவுள்ளது. இது ஆழமற்ற



படம் III—21.2. ஃபிளமிங்கோவின் அலகு

நீரில் நடந்துகொண்டே அலகைத் தலைகீழாகத் திருப்பி நீரில் வைத்து, நீர்ப்பூச்சிகள், மெல்லுடலிகள் இறால்கள் போன்றவற்றை வாரியெடுத்து, அலகை மூடுவதால் நீர் வெளியேறி, இரைகள் சலிக்கப்பட்டு வாயில் தங்கிவிடுகின்றன. இரைதேடும் பொழுது இதன் நீண்ட கழுத்து கீழ்நோக்கியிருப்பதால் இது ஒரு முக்காலிபோலத் தோன்றுகிறது. இதன் இளஞ்சிவப்பு நிறம் நிறமிகளால் (Pigments) ஏற்படுவதாகும். ஷ்ரிம்ப்களைத் (Shrimps) தின்னும் பறவைகள் இளஞ் சிவப்பாகவுள்ளன. இவற்றை உணவாக உட்கொள்ளாத ஃபிளமிங்கோக்களில் இந்நிறம் மங்கி மாறிவிடுகிறது.

ஃபிளமிங்கோக்கள் பறப்பது மிக அழகான ஒரு காட்சியாகும். இவைகள் பல ஒன்று சேர்ந்து 'V' வடிவத்திலோ அல்லது நீண்டு வளைந்த கோடு போன்றோ சிறகுகளை வேகமாக அடித்துப் பறந்து செல்கின்றன. இவைகள் பறக்கும்பொழுது நீண்ட கழுத்து முன்னோக்கியும், நீண்ட சிவந்த கால்கள் பின்னோக்கியும் நீட்டிக் கொண்டுள்ளன.

இவைகள் தூங்கும்பொழுது எவ்விதச் சிரமமுமின்றி ஒற்றைக் காலில் திறமையாக நின்றுகொண்டு மற்றொரு காலை மடக்கிச் சிறகுக்குள்ளும், கழுத்தை வளைத்துத் தலையை இறகுக் குள்ளும் வைத்துக்கொள்கின்றன. பொதுவாக இவைகள் ஒலி எழுப்புவதில்லை. சில சமயங்களில் ''ஹாங்க்'' (Honk) என்ற ஒலியை எழுப்புகின்றன; கூட்டமாக உணவைத் தேடும்பொழுது பல்வகை சத்தங்களை உண்டாக்குகின்றன.

ஃபிளமிங்கோக்கள் நம் நாட்டில் கட்ச் பெரிய ரான்னில் (The great rann of kutch) இனப் பெருக்கம் செய்கின்றன. இவைகள் இங்கு அக்டோபர் முதல் மார்ச் முடிய ஒன்று கூடிச் சேய்ப்பெருக்கம் செய்கின்றன. இக்காலத்தில் 5-10 லட்சம் பறவைகள் இங்கு இருக்கலாமெனக் கருதப்படுகிறது. உலகத் திலேயே இவ்வளவு எண்ணிக்கையுள்ள ஃபிளமிங்கோக்கள் வேறெங்கும் காணப்படுவதில்லை என டாக்டர் ஸலீம் அலி கருது கிறார். கட்ச் பெரிய ரான் ''ஃபிளமிங்கோக்களின் பட்டணம்'' (Flamingo city) எனப்படுகிறது.

ஃபிளமிங்கோக்கள் குளிர்கால வலசைப் பறவைகளாகும். இவைகள் தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் திருத்துறைப் பூண்டிற்கு அருகிலுள்ளக் கோடிக்கரையில் 26-30 ஆயிரம் பறவைகள் ஒரே சமயத்தில் காணப்படுகின்றன, எனத் திரு எம்.ஏ. பாஷா குறிப்பிடுகிறார். நவம்பர் முதல் ஏப்ரல் முடிய இப் பறவைகள் இக் கரையோரத்தில் சேரும் சகதியுமுள்ள பகுதி களிலும், கடல் நீர்த் தேக்கப் பகுதிகளிலும் இரை தேடித் திரிகின்றன. இங்கு காணப்படும் இப் பறவைகள் சிங்களத்தி லிருந்து வந்தவைகளா அல்லது வேறு இடங்களிலிருந்து வந்தவை களா எனத் திரு எம்.ஏ. பாஷா ஐயுறுகிறார்.

இனப் பெருக்கம் செய்யும் காலத்தில் பல்லாயிரக் கணக்கான பறவைகள் ஒன்று சேர்ந்து பல சதுர மைல் பரப்பில் கூடு கட்டு கின்றன. இவற்றின் கூடு மண்ணால் வட்டமாகச் சுமார் 60 செ.மீ உயரம் கட்டப்படுகிறது. இதன் உச்சியில் வாணலி போன்ற ஒரு குழிவு இருக்கிறது. ஈர மண்ணால் கட்டப்பட்ட இக் கூடு, சூரிய வெப்பத்தால் உலர்கிறது. இக் குழிவில் ஒன்று அல்லது இரண்டு முட்டைகளை ஒரு பறவை இடுகிறது. ஆணும் பெண்ணும் மாறி மாறி அடைகாக்கின்றன. அடைகாக்கும் பொழுது கால்களை மடக்கி முட்டை மீது உட்காருகின்றன.

இளம் பறவைகள், நம் வீட்டுக் கோழியளவு இருக்கும் பொழுது பெற்றோர்களைப் பின் தொடர்ந்து உணவிடத்திற்குச் செல்கின்றன. பல குஞ்சுகள் ஒன்றாகக் கலந்துவிட்டாலும், தன்னைப் பின் தொடர்வது எந்தக் குஞ்சாயிருப்பினும் பெரும் பறவை வேறுபடுத்திப் புறக்கணிக்காது அதற்கு உணவுத் தேடித் தந்து உதவுகிறது. பெரிய பறவைகள், தங்களால் ஓரளவிற்குச் செரிக்கப்பட்ட உணவை உமிழ்ந்து குஞ்சுகளுக்குத் தருகின்றன.

# 22. வரித்தலை வாத்து
## (Barheaded Goose)

விலங்கியல் பெயர் : அன்ஸெர் இண்டிகஸ் (Anser indicus)
வரிசை : அன்ஸெரி ஃபார்மெஸ் (Anseri formes)

வரித்தலை வாத்து, நம் நாட்டிற்குக் குளிர் காலத்தில் வலசை வரும் பறவையாகும். இது வீட்டு வாத்தின் (Goose) பருமன் இருக்கிறது. இது சாம்பல், பழுப்பு வெண்மை ஆகிய நிறங்கள் கலந்து காணப்படுகிறது. இதன் தலையும், கழுத்தின் மருங்கும் வெண்மையாகவும், அலகு மஞ்சளாகவும் உள்ளன. இதன் தலையின் பிடரிப்பகுதியில் குறுக்காகத் தெளிவாக இரு குறுக்குப் பட்டைகள் உள்ளன. இத் தோற்றத்தால் இதனை எளிதில் இனம் கண்டுகொள்ள முடியும்.

வரித்தலை வாத்துக்கள் இளம் கோதுமை, பயிறு வகைகள் உள்ள நிலங்களிலும், நீர் நிலைகளுக்கருகிலும் காணப்படுகின்றன. இவைகள் 10—20 சேர்ந்து சிறு கூட்டங்களாக உள்ளன. சில சமயங்களில் பெருங்கூட்டங்களாகக் கோதுமை நிலங்களிலும், பயிறு நிலங்களிலும் காணப்படுகின்றன. இவைகள் பொதுவாக அந்தி வேளைகளிலும் இரவு நேரங்களிலும் உணவு தேடிச் செல்கின்றன. இவைகள் பறந்து செல்லும்போது 'V' போன்ற அமைப்பிலோ அல்லது நீண்டு வளைந்த கோடு போன்ற அமைப்பிலோ செல்கின்றன. இவைகள்



படம் III—22·1. வரித்தலை வாத்து

குளிர்காலப் பயிர்த் தானியங்களேயும், இளந் தளிர்களேயும், கிழங்குகளேயும் உணவாகக் கொள்கின்றன.

இவைகள் ''அங்க்'' ''அங்க்'' என்ற ஒலி எழுப்புகின்றன. இவைகள் பெருமளவிற்கு வேட்டையாடப்பட்டுவிட்டன. தீங்கு தராதவர்களிடத்தில் இவைகள் மிக நெருங்கி இரை தேடித் திரிகின்றன.

இவைகள் லடாக் (Ladakh) பகுதியில், ஏரிகளேச் சுற்றி நன்கு வளர்ந்துள்ள செடிப் புதர்களில் கூடு கட்டுகின்றன. கூடுகள் குழிவாக இருக்கின்றன. இக் கூடுகள் இறகுகளேக் கொண்டு ஒழுங்குபடுத்தப்படுகின்றன. 3—4 வெண்ணிற முட்டைகளிடுகின்றன.

# 23. சாம்பல்நிறத் தாரா
## (Grey Duck)

### சிறகி

விலங்கியல் பெயர் : அனஸ் போய்ஸிலேரிங்கா (Anas Poecilorhycha)
வரிசை : அன்ஸெரி .·.பார்மெஸ் (Anseri formes)

சாம்பல் நிறத் தாரா (சிறகி) நம் வீட்டு வாத்தின் பருமன் இருக்கிறது. இறகுகள் ஆழ்ந்த பழுப்பு நிறமும், வெளிர் பழுப்பு நிறமும் கலந்து செதில்கள் போன்ற தோற்றத்தைத் தருகின்றன.



படம் III—23.1. சாம்பல்நிறத் தாரா (சிறகி)

இதன் இறக்கைகளில் வெள்ளை, கருப்பு, பச்சை ஆகிய மூவர்ண நிறங்கள் உள்ளன. இவ்வமைப்பு இப் பறவையை எளிதில் கண்டு கொள்ள உதவுகிறது. மேலும் இதன் கால்கள் செம் மஞ்சள் நிறத்திலும், கருப்பு நிற அலகின் நுனி மஞ்சள் நிறத்திலும் உள்ளன; தலையின் முன் புறத்தின் அடிப்பகுதியில் பக்கத்திற்

கொரு செம் மஞ்சள் புள்ளி உள்ளது. இக் குணங்களால் இப் பறவையை எளிதில் கண்டுகொள்ள முடிகிறது.

இது இணையாகவோ அல்லது சிறு கூட்டமாகவோ, தாணல் நிறைந்துள்ள நீர்த் தேக்கங்களில் காணப்படுகின்றது. இது நீரின் மேலுள்ள உணவைத் தின்கிறது. இது ஒரு தாவரவுண்ணி. நீர்த் தாவரங்களின் தளிர்களையும், விதைகளையும், நெல் மணிகளையும் உணவாகக் கொள்ளினும், நத்தை, புழு, நீர்ப் பூச்சி போன்றவற்றையும் உள்கொள்கிறது.

இவற்றின் மாமிசம் சுவையாக இருப்பதால் மிகுதியாக வேட்டையாடப்பட்டு இவற்றின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்துவிட்டது. இவைகள் நன்கு பறக்கக்கூடியவைகள். ஏதாவது தொந்தரவு ஏற்பட்டாலொழிய இவைகள் ஒலி எழுப்பு வதில்லை. இவைகளுக்குத் தொல்லை கொடுக்காவிடின் மனிதர் களுக்கு மிக நெருங்கியே உணவு தேடித் திரியும்.

சூழ்நிலை நன்கு இருப்பின், இவைகள் வருட முழுவதும் சேய்ப் பெருக்கம் செய்கின்றன. இவைகள் புற்களையும், இறகுகளையும் கொண்டு கூடு கட்டுகின்றன. இக் கூடுகள் நீர் நிலைகளுக்கருகில் மறைவான இடங்களில் கட்டப்படுகின்றன. பொதுவாக 7—9 முட்டைகளிடுகின்றன. முட்டைகள் மங்கிய பழுப்பு நிறத்திலோ அல்லது பசுமை கலந்த வெண்மை நிறத்திலோ உள்ளன.

# 24. சிறு சீழ்க்கை டீல்

## (Lesser Whistling Teal)

விலங்கியல் பெயர் : டென்ரோஸிக்னு ஜவானிகா (Dendrocygna javanica)
வரிசை : அன்ஸரி ∴பார்மெஸ் (Anseri formes)

சிறு சீழ்க்கை டீல், சாம்பல் தாரா அளவு பருமன் இருக்கிறது. இதன் உடல் செந்தவிட்டு நிறத்திலுள்ளது. இதனால் இதனை எளிதில் கண்டுகொள்ளலாம். மேலும் இப் பறவைகள் பல ஒன்று சேர்ந்து ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வரிசையாகப் பறந்துசெல்கின்றன. இவைகள் பறந்து செல்லும்



படம் III—24.1. சிறு சீழ்க்கை டீல

பொழுது கீச்சுக் குரலில் சீழ்க்கை ஒலி உண்டாக்குகின்றன. இவைகள் 10—15 சேர்ந்து சிறு சிறு கூட்டமாகக் குளம் குட்டைகளிலுள்ள நாணல், கோரைப் புதர்களிலும், நீரிலுள்ள தாவரங்களிலும், வயல்களிலும் காணப்படுகின்றன. இவைகள் அவ்விடங்களுக் கருகிலுள்ள மரங்களிலும் வாழ்கின்றன.

நீர் நிலைகள் வற்றும்பொழுது இவைகள் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்கின்றன. இவைகள் நன்கு பறக்க இயலாதவைகள். இவைகள் பறக்கும்பொழுது சீ-சிக், சீ-சிக் என்று சீழ்க்கை போன்ற கீச்சு ஒலி உண்டாக்குகின்றன. இவைகள் நன்கு நடக்கவும் நீரில் மூழ்கவும் கூடியவை. இவைகள் புழு, நத்தை, மீன் தவளை போன்றவற்றையும், பசுந் தாவரங்களையும்; நெல் மணிகளையும் தின்கின்றன.

இவைகள் நிலத்திலும், மரங்களிலும் கூடு கட்டுகின்றன. நீரோரங்களிலுள்ள முட்புதர்களில் இலைகளையும், புற்களையும் வைத்து நிலத்தில் கூடு கட்டுகின்றன. மரத்தில் கூடு கட்டு பவைகள் நீர்நிலைகளிலிருந்து தள்ளித் தொலைவிலுள்ள மரக்கிளை களிலோ அல்லது மரப் பொந்துகளிலோ குச்சிகளைக் கொண்டு கூடு கட்டுகின்றன. இவைகள் சில சமயங்களில் பருந்து, காகம் போன்றவற்றின் பழைய கூடுகளையும் பயன்படுத்திக்கொள் கின்றன. இவைகள் 7—12 முட்டைகளிடுகின்றன. இம் முட்டைகள் பால்போல வெண்மையாக இருப்பினும் நாளடைவில் பழுப்பு நிறமாக மாறிவிடுகின்றன.

# 25. பஞ்சு டீல்

## (Cotton Teal)

விலங்கியல் பெயர் : நெட்டாபஸ் கோரமண்டெலியானஸ் (Nettapus coromandelianus)

வரிசை : அன்ஸெரி .·.பார்மெஸ் (Anseri formes)

பஞ்சு டீல் சிறிய வீட்டுக் கோழியினளவு இருக்கிறது. இதன் இறகுகளின் பெரும் பகுதி வெண்மையாக இருக்கிறது. இதன் உடலின் முதுகுப் பகுதி கருமையாகவும். தலே கழுத்து வயிற்றுப் பகுதிகள் வெண்மையாகவும் உள்ளன. இதன் கழுத்துப் பகுதி யிலுள்ள கருப்பு வளேயமும், இறக்கைகளிலுள்ள வெண்கோடும்



படம் III—25.1. பஞ்சு டீல்

பறக்கும்பொழுது நன்கு தெரிகின்றன. இது நாடு முழுவதும் பரவியுள்ளது. இவைகள் 5—15 வரை சேர்ந்து காணப்படு

கின்றன. சில சமயங்களில் பெருங்கூட்டமாகக் காணப்படுவதுமுண்டு.

நாணல், மிதக்கும் நீர்த் தாவரங்கள் உள்ள பாதுகாப்பான எல்லாவகை நீர் நிலைகளிலும் இவைகள் காணப்படுகின்றன. தொந்தரவு தராவிடின் இவைகள், மனிதர்களுக்கு மிக அருகில் நெருங்கி உணவு தேடுகின்றன. இலைத் தளிர், தானியங்கள் போன்றவற்றையும் நத்தை, பூச்சி போன்ற உயிர்களையும் இவைகள் உணவாகக்கொள்கின்றன. இவைகள் சுறுசுறுப்பாகவும் வேகமாகவும் பறக்கின்றன. நீரிலிருக்கும்பொழுது, நீரில் மூழ்கித் தப்பித்துக்கொள்ளும் வல்லமை பெற்றுள்ளன.

இவைகள் நீரிலோ அல்லது நீர் அருகிலுள்ள மரப் பொந்துகளிலோ சுமார் 2—10 மீட்டர் உயரத்தில் கூடு கட்டுகின்றன. 6—12 வெண்மையான முட்டைகளிடுகின்றன.

# 26. கருடன்
## (Brahminy Kite)

விலங்கியல் பெயர் : ஹாலியாஸ்டர் இண்டஸ் (Haliastur indus)
வரிசை : ஃபால்கனிஃபார்மெஸ் (Falconiformes)
குடும்பம் : ஆக்ஸிபிட்ரிடே (Accipitridae)

கருடனை, இந்துக்களில் பலர் புனிதப் பறவையாகக் கருதி வணங்குவதை நாம் அறிவோம். நீண்ட நாட்கள் மழை பெய்ய வில்லையெனில், எங்கள் ஊர் பட்டரமங்கலம் மக்கள் கருடன் இறந்திருக்க வேண்டும் எனக் கருதி இறந்த உடலைத் தேடிக் கண்டு பிடித்து மதச் சடங்குகளின்படி அதனை அடக்கம் செய்வதுண்டு. பல ஆண்டுகளுக்கு முன் ஒரு இறந்த கருடனை அடக்கம் செய்தது எனக்குத் தெரியும். அந்தச் சடங்கின்பொழுது ஊர் தாசன் மொட்டையடித்துக் குளித்துக் கிரியை செய்தார்; சடங்கிற்குப் பின் ஆடு பலி கொடுத்து விருந்து நடத்தப்பட்டது. ஓர் உயிர் இறந்ததால் மழை பெய்யவில்லையென்று நினைத்த மக்கள் மற்றொரு உயிரைப் பலி கொடுத்து மழையை மீட்டுவிட்டார்களா என்ற பகுத்தறிவு வினவிற்கு அவர்கள் பதில் கூறத் தயாராயில்லை! ஆனால் இதே புனிதப் பறவை தங்கள் வீட்டுக் கோழிக்குஞ்சை எடுத்துச் செல்லும்பொழுது இம்மக்கள் அதைத் துரத்திக் கல்லால் அடித்துக் கோழிக் குஞ்சை மீட்க முயலுகின்றார்கள். இச் சமயங் களில் கருடனின் புனிதத் தன்மையை மறந்துவிடுகிறார்கள். இதை நாம் அவர்களிடத்தில் கேட்டு விடக்கூடாது!

கருடன் எல்லாவிடங்களிலும் காணப்படுகிறது. சிறப்பாகக் கிராமங்களுக்கருகிலும், கடற்கரையோரங்களில் செம்படவர் சேரிகளுக்கருகிலும் காணப்படுகிறது. உள்நாட்டு நீர் நிலைகளான ஆறு, ஏரி, குளம் போன்ற இடங்களுக்கருகிலும் இது காணப்படு கிறது. இது ஓர் ஊன் உண்ணி. கிராமங்களில் துணிகரமாக நுழைந்து கோழிக் குஞ்சுகளை எடுத்துச் சென்றுவிடுவதுண்டு.

மேலும் செம்படவர் சேரிகளில் மீன் எளிதாகக் கிடைப்பதால் இது சேரிகளைச் சுற்றிப் பறப்பதைக் காணலாம். குப்பைக் கூளங்களைத் தேடியும் இது உணவைப் பெறுகிறது. பொதுவாக மீன், தவளை, ஊர்வனங்கள், பூச்சிகள், பாம்பு போன்றவற்றை இது உணவாகக் கொள்வதால் நமக்குத் தேவையற்றவைகளையே அழிக்கிறது. இதனால் இதனை நாம் பாதுகாப்பது இன்றியமை யாததாகிறது.



படம் III—26.1. கருடன்

இது கருஞ்சிவப்பு நிறத்திலிருக்கிறது. இதன் தலையும், வயிற்று வரை மார்புப் பகுதியும் வெண்மையாக உள்ளன. இதன் வால் வட்டமாக அமைந்துள்ளது. இது 'க்கீ' என்று ஒலி எழுப்புகிறது. இது நீர் நிலைகளுக்கருகிலுள்ள மரங்களில் குச்சி களைக்கொண்டு கூடு கட்டுகிறது. இதன் முட்டைகள் சாம்பல் நிறமாகவோ அல்லது இளஞ்சிவப்புக் கலந்த வெண்மையாகவோ செம்பழுப்புப் புள்ளிகளுடன் உள்ளன.

# 27. பிணந்தின்னிக் கழுகு

## (Bengal Vulture)

விலங்கியல் பெயர் : ஜிப்ஸ் பென்கலென்ஸிஸ் (Gyps bengalensis)
வரிசை : ஃபால்கனி.ஃ.பார்மெஸ் (Falconiformes)
குடும்பம் : ஆக்ஸிபிட்ரிடே (Accipitridae)

பிணந்தின்னிக் கழுகுகள் இன்று பெருமளவு மறைந்து விட்டன. இவைகள் மனிதனுக்கு மிகவும் பயனுள்ளவை. பல



படம் III—27.1. பிணந்தின்னிக் கழுகு

ஆண்டுகளுக்கு முன் எங்கள் கிராமத்தில் கால்நடைகள் நோயால் பீடிக்கப்பட்டுப் பெருமளவு இறந்துவிட்டன. தோல்கள் உரிக்கப்

பட்ட கால்நடைகளின் உடல்கள் கேட்பாரற்றுக் குவிக்கப்பட்டு விட்டன. இவ்வுடல்களனைத்தையும் இப் பிணந்தின்னிக் கழுகுகள் தின்று தீர்த்துச் சூழ்நிலையைத் துப்புரவாக்கிவிட்டன. புகைப் படம் III—27.2. இவைகள் விரைந்து உடல்களைத் தின்று தீர்ப்பது காண்போரை வியப்பில் ஆழ்த்துவதாகும். இக் கழுகு களுக்குக் கூரிய கண்பார்வையுள்ளது. இவைகள் ஆகாயத்தில் மிக உயரத்தில் பறந்தாலும், நிலத்திலிருப்பதை எளிதில் கண்டு கொள்கின்றன. இவைகள் வட்டமாகப் பறந்துகொண்டுள்ள இடத்தில் ஏதாவது விலங்கு இறந்துகிடத்தல் வேண்டும் என்பதை சந்தேகமின்றி அறியலாம். இதனுல் காடுகளில் இவைகள் பறக்கும்



படம் III—27.2. பிணந்தின்னிக் கழுகுக் கூட்டம்

இடங்களுக்கும் கீழே இறங்கும் இடங்களுக்கும் சென்று பார்த்தால் வேட்டை விலங்கோ அல்லது வளர்ப்பு விலங்கோ இறந்து கிடப்ப தைக் காணலாம். எங்கள் ஊர் பட்டரமங்கலம் மக்கள், தங்கள் கால்நடைகள் காணப்படாது, காட்டில்தான் இறந்திருக்க வேண்டு மெனக் கருதினுல், இக் கழுகுகள் பறந்து திரியும் இடத்தைக் கண்டு, அவ்விடத்திற்குச் சென்று தங்கள் சந்தேகத்தைத் தீர்த்துக்

கொள்வதுண்டு. இக் கழுகுகளுக்கு நுகர்ச்சித் திறன் இல்லை. ஒரு விலங்கு இறந்து சில மணி நேரத்திற்குள் இவைகள் அவ்வுடலை எப்படிக் கண்டுகொள்கின்றன என்பது நமக்கு விளங்காத புதிராகவுள்ளது. இவற்றின் இத்திறன் நமக்கு வியப்பைத் தருகிறது.

பிணந்தின்னிக் கழுகுகள் பறப்பது நம் கவனத்தை ஈர்க்கக் கூடியதாகும். ஆகாயவிமானம் தளத்தில் (Run-way) சிறிது தொலைவு ஓடி மேலே கிளம்புவதை நாம் அறிவோம். அது போலவே இவைகள் பறக்கத் தொடங்கும்பொழுது நிலத்தில் சிறிது தூரம் ஓடிச்சென்றே பின் உயரக் கிளம்புகிறது. இக் கழுகுகள் கீழே நிலத்திலிறங்கும்பொழுது கால்களை கீழ்நோக்கி நீட்டிக்கொண்டு செங்குத்தாக மிதந்து இறங்குகின்றன. இவைகள் பறக்கத் துவங்குவதும் இறங்குவதும் காண்பதற்குரிய இனிய காட்சிகளாகும். இவைகள் வானில் சிறகுகளை அசைக்காது நீண்ட நேரம் பறக்கின்றன. இவைகள் பறந்து செல்லும்பொழுது ''இஸ்'' என்ற ஓசை கேட்பதை அறியலாம்.

பிணந்தின்னிக் கழுகு அழுக்குப் படிந்த கருப்பு நிறத்தி லுள்ளது. இதன் தலையும் கழுத்தும் இறகுகளற்று மங்கிய சிவப்பு நிறத்திலுள்ளன. இதன் முதுகுப் பகுதி வெண்மையாகவுள்ளது. இது பறக்கும்பொழுது சிறகுகளின் வயிற்றுப் புறம் வெண்மை யாகவும் அவற்றிற்கிடையில் கருப்பு நிறமாக வுள்ளதையும் காணலாம்.

இது பெரிய மரங்களில் குச்சிகளால் பெரிய கூடு கட்டுகிறது. இது ஒரே ஒரு முட்டை மட்டுமே இடுகிறது. இம் முட்டை வெண் மையாக, சில சமயங்களில் சிவப்புக் கலந்த பழுப்பு நிறப் புள்ளி களுடன் இருக்கிறது.

# 28. சாம்பல் நிறக் கவுதாரி
(Grey Partridge)

விலங்கியல் பெயர் : ஃபிரேங்கோலினஸ் பாண்டிஸெரியானஸ் (Francolinus pondicerianus)
வரிசை : கேலிஃபார்மெஸ் (Galliformes)
குடும்பம் : ஃபேஸியானிடே (Phasianidae)

சாம்பல் நிறக் கவுதாரி வேட்டைப் பறவைகளிலொன்று. இதன் மாமிசம் மிகவும் விரும்பி உண்ணப்படுகிறது. இது நம் வீட்டுக் கோழியில் பாதியளவு பருமன் இருக்கிறது. இதன் உடல் முழுவதும் சாம்பல் கலந்த பழுப்பு நிறத்தில் அலையலையான கருப்பு நிறக் குறுக்குக் கோடுகளுடன் இருக்கிறது. வால் பகுதி தவிட்டு



படம் III—28.1. சாம்பல் நிறக் கவுதாரி

நிறத்தில் இருக்கிறது. இதன் தொண்டையைச் சுற்றி விட்டு விட்டு வட்டமாகக் கருப்புக் கோடுகளுள்ளன. ஆண் பறவைகளின் கால்களில் கூரிய முள்ளொன்று இருக்கிறது.

இது வரண்ட பகுதிகளிலும், விளை நிலங்களிலும் காணப்படுகிறது. இது ''கெக்-க-ரெக்கே'', ''கெக்-க-ரெக்கே'' என்ற உரத்தவொலி எழுப்புவது குறிப்பிடத்தக்கது. இது 4-6 வரையில் சேர்ந்து காணப்படுகிறது. இனப்பெருக்கக் காலங்களில் இணைகள் சேர்ந்துள்ளன. இது நிலத்தைக் கிளறி உணவைத் தேடித் தின்கிறது. நிலத்தைக் கிளறுவதற்காக இதன் கால் நகங்கள் கூர்மழுங்கி ஆனால் உறுதியாகவுள்ளன. தானியங்கள், பழங்கள், பூச்சிகள் இதன் உணவாகும்.

தொந்தரவு ஏற்படும்பொழுது கூட்டமாக இருப்பவை தனித் தனியே பிரிந்து மிக வேகமாக ஓடிப் புதர்களில் ஒளிந்துகொள்கின்றன. கவுதாரிகள் தேவைப் பட்டாலன்றி பறப்பதில்லை. இது ஒவ்வொரு புதராக ஓடி ஒளிந்து முடிவில் அடர்ந்த புதரில் ஒளிந்து கொள்கிறது. கவுதாரிகள் எதிர்பாராத வகையில் திடீரெனப் பறந்து செல்லும்பொழுது ஒவ்வொன்றும் வெவ்வேறு திசையில் செல்கின்றது. இவைகள் பறக்கும்பொழுது சிறகிலிருந்து 'விஸ்' என்ற ஓசை உண்டாவதைத் தெளிவாகக் கேட்க முடிகிறது.

கவுதாரி இரவில் முள் மரங்களில் அமர்கிறது. இது நிலத்தில் புற்களால் கூடுகட்டிச் சுமார் 4-8 வெளிர் பழுப்பு நிற முட்டைகளிடுகிறது.

கவுதாரிக் குஞ்சுகளை நாம் எளிதில் வளர்க்கலாம். வளர்த்த கவுதாரிகளைக் கொண்டு, வனக் கவுதாரிகளைக் கண்ணி வைத்துப் பிடித்து விற்பனை செய்வதைக் காணலாம். ஆண் கவுதாரிகளைப் பழக்கிப் பந்தயச் சண்டைக்கு விடுவதாக டாக்டர் ஸலீம் அலி குறிப்பிடுகிறார்.

# 29. புதர் காடை
## (Jungle Bush Quail)

விலங்கியல் பெயர் : பெர்டிகுலா ஏஸியாடிகா (Perdicula asciatica)
வரிசை : கேலி ∴பார்மெஸ் (Galli formes)
குடும்பம் : ∴பேஸியானிடே (Phasianidae)

காடைகள் பெருமளவு பிடிக்கப்பட்டு நகரங்களில் விற்பனைக்குக் கொண்டுவரப்படுவதைக் காணலாம். இவைகள் வறண்ட நிலப்பகுதிகளில் காணப்படுகின்றன. காடை ஒரு சிறந்த வேட்டைப் பறவை. இதன் மாமிசம் சுவைமிக்கது; விரும்பி உண்ணப்படுகிறது. இது இணையாகவோ, சிறு கூட்டமாகவோ காணப்படுகிறது. இதற்குக் கவுதாரியைப் போன்ற உடலமைப்பிருப்பினும், பருமனில் கவுதாரியில் பாதிக்கும் குறைவாகவுள்ளது. இது வேகமாக நடந்து புதருக்குப் புதர் சென்று ஒளிந்துகொள்ளும். காடைகள் சிறு கூட்டமாக 5—20 சேர்ந்து செடிகளின் மறைவில் தங்குகின்றன. இவைகள் தங்கும்பொழுது எல்லாப் பறவைகளும் வெளி நோக்கிப் படுத்துக்கொள்கின்றன. அருகில் நெருங்கும்பொழுது இவைகள் வேகமாக ஓடி ஒளிந்துக் கொள்கின்றன. சில சமயங்களில் வெடிப்பது போன்று திடீரெனக் கிளம்பி வேகமாகப் பறந்து சிறு தொலைவு சென்று மறைவான இடங்களில் ஒளிந்துகொள்கின்றன. இவைகள் பறந்து செல்லும் பொழுது ஒவ்வொன்றும் வெவ்வேறு திசையில் செல்கின்றது. இவைகள் வேகமாகப் பறந்து செல்லும்பொழுது சிறகுகளிலிருந்து 'விஸ்' என்ற ஓசை உண்டாகிறது. பிரிந்த பறவைகள் ''வி, வி'' என்ற மென்மையான வொலி உண்டாக்கி ஒன்றையொன்று தொடர்பு கொண்டு, ஒன்று சேருகின்றன.

இவைகள் விளை நிலங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. வெயில் நேரங்களில் சிறிய அடர்ந்த செடிகளினுள் தங்குகின்றன. இவைகள் உயரத் தாண்டியோ அல்லது பொதுவாகப் பறந்தோ செல்லாததினுல் இவற்றை வலை வைத்து எளிதில்

பிடித்துவிடுகின்றனர். நீண்ட குறுகிய வலையைச் செடிகளுக் கிடையில் விட்டு, வலையின் ஒரு புறத்திலிருந்து மண்ணை இறைத்து மெதுவாக இப் பறவைகளை விரட்டுவார்கள். இப் பறவைகள் செடிகளுக்கிடையில் வேகமாக ஓடித் தப்பித்துக்கொள்ள முயலும் போது வலையில் சிக்கிக்கொள்கின்றன. இப் பறவைகள் பகல் நேரத்தில் "குர்......ர்" என்று நீண்ட நேரம் ஒலி உண்டாக்கு வதைத் தெளிவாகக் கேட்கலாம்.



படம் III—29.1. புதர் காடை

சிலர் இப்பறவைகளைக் கூண்டுகளில் வளர்ப்பதுண்டு. வளர்ப்புக் காடையைக் கொண்டு, கண்ணிவைத்து வனப் பறவைகள் பிடிக்கப்படுகின்றன.

பொதுவாக இப் பறவைகள் செம்பழுப்பு நிறத்தில் காணப் படுகின்றன. இதனால் இவைகள் நிலத்தில் அடங்கிப் படுத் திருப்பதை நாம் எளிதில் காண முடிவதில்லை. நம் காலுக்கடி யிலிருந்து திடீரென 'விர்' என்ற ஓசையுடன் பறந்து செல்வதைக் கண்டு கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் தப்பித்துவிட்டது என்ற ஏமாற்றத்தை அடைகிறோம். இவைகள் காலையிலும், மாலையிலும் நீர் குடிக்க வரிசையாக ஒன்றன்பின் ஒன்றாகச் செல்வதைக் காணலாம். மேலும், இவை ஒவ்வொரு நாளும் முதலில் சென்ற பாதையிலேயே சென்று வருவது குறிப்பிடத் தக்கது. இவைகள் நிலத்திலுள்ள தானிய மணிகள், புற்களின் விதைகள், பூச்சிகள் போன்றவற்றை உணவாகக் கொள்கின்றன.

இவற்றின் கூடுகள் புற்களால் நிலத்தில் அமைக்கப்படு கின்றன. 4—8 மங்கிய வெளிர் நிற முட்டைகளிடுகின்றன.

# 30. சாம்பல்நிறக் காட்டுக்கோழி
## (Grey Jungle Fowl)

விலங்கியல் பெயர்: காலஸ் ஸொன்னெடேட்டி (Gallus sonneratti)
வரிசை : கேலி ∴பார்மெஸ் (Galliformes)

சாம்பல் நிறக்காட்டுக் கோழிச்சேவல், சாம்பல் நிறத்தில் பல கோடுகளுடன் இருக்கிறது. இதன் வால் அரிவாள் போன்று வளைந்து உலோகக் கருப்பு நிறத்தில் இருக்கிறது. பெட்டைக் கோழியின் உடலின் மேற்புறம் பழுப்பாகவும், வயிற்றுப்புறம் வெண் செதிகள் போன்றும் காணப்படுகிறது. சாம்பல் நிறக் காட்டுக்கோழி மலை அடிவாரங்களில் மூங்கிற் காடுகளிலும், அழிக்கப்பட்டக் காடுகளிலும் தனித்தோ. இணையுடனோ அல்லது சிறு கூட்டமாகவோ காணப்படுகிறது. இது பெரும்பாலும் தென்னிந்தியாவில் மேற்குமலைத் தொடர்ச்சியின் அடிவாரப் பகுதிகளில் உள்ளது. இது மிகவும் ஒதுங்கி வாழும் தன்மையுடையது. இது காலையிலும், மாலையிலும் திறந்த வெளிகளில் உணவு தேடி வெளியே வருகிறது. சிறு சந்தேகம் ஏற்படினும் கழுத்தை நீட்டி, வாலைத் தொங்கவிட்டு, வேகமாக ஓடி ஒளிந்துகொள்கிறது. இது தானியங்களையும். பழங்களையும், விதைகளையும், தளிர்களையும் உணவாகக் கொள்கிறது. காற்றில் உதிர்ந்த ஆல், அத்தி, அரசு பழங்களை விரும்பித் தின்கின்றது. இப்பறவை புழு, பூச்சிகளையும் இரையாகக் கொள்கிறது. மண்மேடு, விழுந்துகிடக்கும் மரம் போன்ற சற்று உயரமான இடத்திலிருந்து சேவல் கூவும். கூவுவதற்கு முன் இது தன் சிறகுகளைப் பக்கங்களில் தட்டும். ஒரு சேவல் கூவுவதைக் கேட்டு சற்றுத் தொலைவிலுள்ள வேறொரு சேவல் கூவும்.

காட்டுக் கோழி புதர்களுக்கிடையில் நிலத்தைப் பரித்து வரண்ட இலைகளையும் சருகுகளையும் வைத்துக் கூடு உண்டாக்குகிறது. இது 4—7 மங்கிய வெண்ணிற முட்டைகளிடுகிறது.

சிவப்புக் காட்டுக் கோழி (Red Jungle Fowl—Gallus gallus) இமயமலை அடிவாரத்தில் உள்ள அடர்த்தியற்றக் காடுகளில் காணப்படுகிறது. மத்தியப் பிரதேசத்தில் சால் மரங்கள் உள்ள பகுதிகளிலும் இது பரவியுள்ளது. சேவலும், பெட்டையும் ஒரே



படம் III—30.1. சாம்பல்நிறக் காட்டுக்கோழி

மாதிரியான தோற்றத்திலுள்ளன. இவைகள், பல்வகைப்பட்ட நம் வீட்டுக் கோழிகளின் மூதாதையர்கள் (முன்னோர்) (Ancestors) ஆகும்.

எங்கள் ஊர் பட்டரமங்கலத்திற் கருகிலுள்ள காட்டில் காட்டுக் கோழிகள் முன்பு ஓரளவிற்கு இருந்தது. இவைகள் காட்டுக் கோழிகள் என்றோ, வீட்டுக் கோழிகள் என்றோ திட்ட வட்டமாகக் கூற இயலாதபடி உள்ளன. எங்கள் கிராம மக்கள் வேண்டுதலின் காரணமாக ஓரளவிற்கு வளர்ந்துள்ள வீட்டுக் கோழிக் குஞ்சுகளைக் காட்டிலுள்ள ஒரு சிறு கோவிலில் ஒவ்வொரு வருடமும் விட்டு வருவார்கள். இக் குஞ்சுகள் வளர்ந்து இனப் பெருக்கம் செய்து, பெருகிவிடுகின்றன. பல தலைமுறைகளாக இவைகள் காட்டில் தன்னிச்சையாக வளர்ந்த காரணத்தால், தோற்றத்தில் காட்டுக் கோழியைப் போன்றே காணப்படுகின்றன.

# 31. மயில்
## (Peafowl)

விலங்கியல் பெயர் : பாவோ கிரிஸ்டேடஸ் (Pavo cristatus)
வரிசை : கேலி.·.பார்மெஸ் (Galliformes)
குடும்பம் : .·.பேஸியானிடே (Phasianidae)

நம் நாட்டு வனப்புமிக்கப் பறவைகளில் மயிலும் ஒன்று. இது இந்துக்களால் வணங்கப்படும் பறவைகளிலொன்று. இது முருகக் கடவுளின் வாகனமாகக் கருதப்படுகிறது. முருகனே மயில் வாகனன் என்று கூறுவதை நாம் அறிவோம். இருப்பினும்



படம் III—31.1. நம் தேசியப் பறவை. ஆண் மயில் :
பருவ காலத்தில் நன்கு வளர்ந்த தோகையுடன் இருப்பதைக் காணலாம்

மாமிசத்திற்காகவும், வண்ணத் தோகைக்காகவும் இது பெருமளவு வேட்டையாடப்பட்டு, இதன் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து

விட்டது. இன்றும் மயில் குஞ்சுகளும், கொல்லப்பட்ட மயில்களும், மயில் தோகைகளும் நகரச்சாலைகளில் விற்பனைக்காக நரிக்குறவர்கள் வைத்திருப்பதைக் காணலாம்.

1960-ல் அகில உலக பறவைப் பாதுகாப்புக்குழு (International council for bird preservation) டோக்கியோவில் கூடி, ஒவ்வொரு நாடும் ஒரு பறவையைத் தேசியப் பறவையாகத் தேர்ந்தெடுத்து, பறவைகளைப் பாதுகாக்கும் உணர்வை மக்கள் உள்ளத்தில் ஏற்படுத்தவேண்டுமென்று அனைத்து நாடுகளையும் கேட்டுக்கொண்டது. அதன்படி இந்திய வன விலங்குக் குழு, மயிலை நம் நாட்டுத் தேசியப் பறவையாகத் தேர்ந்தெடுத்துள்ளது. பர்மாவிலும் இது தேசியப் பறவையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. பல்வகைப் பறவைகளுக்கிடையில் மயிலைத் தேர்ந்தெடுத்திருப்பதிலிருந்து அதன் அழகையும், சிறப்பையும் நாம் அறிவோம். பேரரசர் அலெக்சாண்டர் நம் நாட்டிற்கு வந்தபொழுது, மயிலின் அழகில் மனம் பறிகொடுத்து, அதனை வேட்டையாடக்கூடாதென்று தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டதாக அறிகிறோம். இவ்வாணையை மீறியவர்கள் கடுந் தண்டனைக்குட்பட்டார்கள்.

ஆண் மயிலின் வால் இறகுகள் மிக நீண்டு, தோகையாக வளர்ந்துள்ளன. புகைப்படம் III—31.1. பொதுவாக ஒவ்வொரு இறகின் நுனியிலும் வட்டமான 'கண்' ஒன்றுள்ளது. ஆண் மயில் இத்தோகையை விரித்து ஆடுவது, கண்டு மகிழ்வதற்குரிய இனிய காட்சியாகும். மயில் ஆடுவதைக் கண்டு நாம் மெய்ம்மறந்து நின்றுவிடுவதை, அதைக் கண்டு அனுபவித்தவர்களே உணர முடியும்.

பெண் மயிலுக்குத் தோகையில்லை. பருவகாலத்திற்குப்பின் ஆணில் தோகை உதிர்ந்துவிடுகிறது. புகைப்படம் III—31.2. பெண் மயிலின் நிறம் ஆண் மயிலைக் காட்டிலும் சற்று மங்கியதாக, நிலத்திலும், புதர்களிலும் அடங்கிப் படுத்துக்கொள்ளும்பொழுது எளிதில் கண்டுகொள்ளவியலாத வகையில் காப்பு நிறமாக இருக்கிறது. ஆணுக்கும், பெண்ணுக்கும் தலையில் ''கொண்டை'' இருக்கிறது.

மயில்கள் இலையுதிர்க்காடுகளிலும் மலை அடிவாரங்களிலும், நீர் நிலைகளுக்கருகில் குளிர்ச்சியான பகுதிகளிலும் சிறு கூட்டமாகக் காணப்படுகின்றன. தமிழ்நாட்டில் பல கோவில்களில் சிறப்பாக முருகன் கோவில்களில் இவைகளைக் காணலாம். பக்தர்கள் இவற்றை அங்கு கொண்டுவந்து விட்டுச் செல்கின்றனர்.

இவைகள் அனைத்துண்ணிகள். தானியங்கள், கிழங்குகள், விதைகள், பூச்சிகள், புழுக்கள், பாம்புகள் மற்ற ஊர்வனங்கள் போன்ற அனைத்தையும் தின்கின்றன. இவைகள் காலையிலும், மாலையிலும் காட்டிற்கருகிலுள்ள விளை நிலங்களுக்கு இரைதேடி வருவதுண்டு. அதிகாலையிலும், மாலையிலும் ''ங்ஞாவ், ங்ஞாவ்'' என்ற பெருத்த குரல் கொடுப்பதைக் கேட்கலாம். வனப்புமிக்க இப்பறவைக்கு இதன் குரல் ஏற்றதாயில்லை என டாக்டர் ஸலீம் அலி குறிப்பிடுகிறார். இதன் ஒலி மென்மையான நீண்ட கீதமாக இல்லாதிருப்பினும் அது வாழும் சூழ்நிலைக்கு ஏற்ப அவ்வொலி இருக்கிறது என்பது என் கருத்து. அடர்ந்து குளிர்ந்த சோலை, அமைதியான சூழ்நிலை, அதிகாலை அல்லது அந்திமாலை,



படம் III—31.2. ஆண் மயில்:
பருவ காலத்திற்குப்பின் தோகை உதிர்ந்த நிலையில் இருப்பதைக் காணலாம்

எவ்வித ஒலியும் அற்ற ஏகாந்த நிலை இந்தச் சூழ்நிலையில் இதன் வெண்கல ஒலி பரவி, நாற்புறமும் எதிரொலியுண்டாவதைச் சற்றுத் தொலைவிலிருந்து கேட்பது ஒருவகை இனிமையைத் தரத் தான் செய்கிறது. ஆனால், மயிலின் குரலைக் குயிலின் இன்னிசையுடன் ஒப்பிடும்பொழுதுதான் நம் கருத்து மாறுபடுகிறது.

மயில்கள் பெரும்பாலும் தரையில் உள்ளன. இவைகள் உடலைப் பக்கவாட்டில் ஒடுக்கிப் புதர்களினுள் வேகமாக ஓடித் தப்பிக்கும் திறமை பெற்றவை. ஆபத்து நெருங்கினால் சிறகுகளைப் பலமாக வேகமாக அடித்துச் செங்குத்தாக உயரக்கிளம்பிப் பறந்து செல்கின்றன. நீண்ட தோகையும் சற்று பருத்த உடலும் இருப்பினும் இவைகள் சிரமமின்றிப் பறக்கின்றன. இவைகள்

கணிசமான தொலைவு பறந்து செல்கின்றன. பறக்கும் பொழுது சிறகுகளின் அசைவொலியை நன்கு உணர முடிகிறது.

மயில்கள் உயரமான மரக்கிளைகளில் இரவில் தங்குகின்றன. இவற்றிற்குக் கூரிய கட்புலனும், செவிப்புலனும் உள்ளன.

இவைகள் நிலத்தைப் பரித்துக் குச்சிகளையும் இலைகளையும் கொண்டு புதர்களிடையில் கூடு கட்டுகின்றன. ஒரு அடையில் 3—5 மங்கிய வெண்ணிற முட்டைகளிடுகின்றன.

மயில்களை எளிதில் வீடுகளில் வளர்க்கலாம். இளம் குஞ்சுகள் பிடிக்கப்பட்டு வளர்க்கப்படுகின்றன. மயில் முட்டைகளை வீட்டுக் கோழியில் அடைவைத்து மயில் குஞ்சுகளைப் பெறலாம். மயில் குஞ்சுகளும், கோழிக் குஞ்சுகளும் ஒரே அடையில் பொரித்துக் கோழியால் பராமரிக்கப்படுவதுண்டு. மயில் குஞ்சுகள் பெரிய தாகவும், அவற்றின் ஒலி கோழிக் குஞ்சுகளிலிருந்து மாறுபட்டுச் சீட்டி அடிப்பதுபோல் இருப்பினும், இக் குஞ்சுகளைக் கோழி வேறுபடுத்திப் புறக்கணிப்பதில்லை. வீடுகளில் வளர்க்கும் இளம் மயில் குஞ்சுகளுக்குக் கரையான் உணவாகத் தரப்படுகிறது. வளர்ந்த குஞ்சுகளுக்குத் தானியங்கள் தரப்படுகின்றன.

இளம் மயில் குஞ்சுகள் மனிதர்களுடன் நன்கு பழகிக்கொள் கின்றன. தன்னை வளப்பவர்களை அடையாளம் கண்டுகொள்வ துடன், அவர்கள் செல்லுமிடமெல்லாம் பின்தொடர்ந்து செல்வதை அறியலாம். என் தாய் வளர்த்த மயில் குஞ்சுக ளனைத்தும் அவர் எங்கு சென்றாலும் அவரைப் பின்தொடர்ந்து செல்வதுண்டு. அவரைக் காணாதபோது தாயைக் காணாத குஞ்சு களைப்போல் தவித்துள்ளன. இவ்வளவு பாசத்தோடுள்ள இம் மயில் குஞ்சுகள் வளர வளர, மனிதர்களை விட்டுப் பிரிந்து சென்று விடுகின்றன. இரவில் கூட்டில் தங்காமல் வீட்டுக் கூரைமேலும் மரங்களிலும் தங்குகின்றன. முதிர்ந்த மயில்கள் நம் கட்டுப் பாட்டிற்குப் பணியாமல் தன்னிச்சையாக வாழத் துவங்குகின்றன. சில சமயங்களில் வளர்க்கப்பட்ட வீடுதேடித் தீனி தின்ன வருவ துண்டு.

நாங்கள் வளர்த்த ஆண் மயிலொன்று சிறு குழந்தைகளையும், பெண்களையும் சிறப்பாக முதியோர்களையும் தாக்கிக் கொத்தியது. எங்களூரிலிருந்த மிக முதிய பெண் ஒருவரைக் கண்டதும், அம் மயில் எவ்வளவு தொலைவிலிருப்பினும் ஓடி வந்து அப்பெண்ணைக் கொத்த முயன்றதைப் பலமுறை கண்டு அம் மயிலை விரட்டியிருக் கிறேன். ஏமாந்திருந்த நிலையில் ஆண்களையும் தாக்கியுள்ளது. இத்தகைய குறும்புத்தனத்தாலேயே அம்மயில் அடிபட்டு, ஒரு கண்ணை இழந்தது.

மயில்களில் வெள்ளை இனமொன்று ஜப்பானில் இருக்கிறது. இது நம் நாட்டிற்கும், சிங்களத்திற்கும் கொண்டுவரப்பட்டு வளர்க்கப்படுகிறது.

# 32. ஸாரஸ் க்ரேன்
## (Saras Crane)

விலங்கியல் பெயர் : க்ரஸ் ஆன்டிகான் (Grus antigone)
வரிசை : க்ரூயிஃபார்மெஸ் (Gruiformes)
குடும்பம் : க்ரூயிடே (Gruidae)

ஸாரஸ் க்ரேன் பெரிய பிணந்தின்னி. கழுகின் பருமன் இருக்கிறது. இதன் தலையும், கழுத்தின் மேல்பகுதியும் இறகுகளற்றுச் சிவப்பாகவுள்ளன. இதன் கால்கள் இறகுகளற்றுச் சிவப்பாக மிக நீண்டுள்ளன. இது ஏறக்குறைய ஒரு சாதாரண மனிதனின் உயரமிருக்கிறது.

இப் பறவைகள் இணைகளுடன் பயிர் நிலங்களிலும், நீர்த்தேக்கப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. பருவகாலங்களில் இவற்றுடன் ஒன்று அல்லது இரண்டு குஞ்சுகளுள்ளன. சில சமயங்களில் பல பறவைகள் ஒன்று சேர்ந்து கூட்டமாகக் காணப்படுவதுண்டு. இவைகள் ஆணும் பெண்ணும் இணை பிரியாது. வாழ்நாள் முழுவதும் சேர்ந்து வாழ்கின்றன. இவைகளுக்குக் கிராம மக்களால் ஆபத்தின்மையால் இவைகள் பயமின்றி எல்லாவிடங்களிலும் காணப்படுகின்றன.



படம் II—32.1. ஸாரஸ் க்ரேன்

இவைகள் சற்று சிரமத்துடன் பறக்கத் துவங்குகின்றன. ஆகாயத்தில் வேகமாகப் பறந்து செல்கின்றன. பறக்கும்பொழுது தலையை முன்னும் கால்களைப் பின்னும் நீட்டிச் சீராக, மெதுவாகச் சிறகடித்துப் பறக்கின்றன. இவைகள் நிலத்திலிருக்கும் பொழுதும் பறக்கும் பொழுதும் ஊது கொம்பிலிருந்து கிளம்பும் ஒலி போன்று உரத்தவொலி எழுப்புகின்றன.



படம் III—32,2. சாரஸ் க்ரேன்

இனப்பெருக்கக் காலங்களில் இணைகள் வேடிக்கையான காதல் களியாட்டத்தில் ஈடுபடுகின்றன. இவைகள் ஒன்றையொன்று நோக்கி முன்னோக்கிக் குனிந்தும் சிறகுகளை விரித்தும் உயரக் குதித்தும் களியாட்டம் புரிகின்றன.

இவைகள் அனைத்துண்ணிகள். இவைகள் தானியங்கள், கிழங்குகள், காய் கனிகள், தளிர்கள் போன்றவற்றையும் புழு, பூச்சி, நத்தை, ஓணான், பல்லி, தவளை போன்ற உயிரிகளையும் உணவாகக் கொள்கின்றன. சில சமயங்களில் விதைக்கப்பட்டுள்ள பயிர் விதைகளைப் பொறுக்கித் தின்று உழவர்களுக்குச் சேதம் உண்டாக்கிவிடுகின்றன.

இவைகள் வைக்கோல், புல், நாணல் போன்றவற்றால் நெல் வயல், நீர்த்தேக்க நிலம் ஆகியவற்றில் பெரிய கூடுகளைக் கட்டு கின்றன. மங்கிய பச்சை நிறமுள்ள அல்லது இளஞ் சிவப்புக் கலந்த வெண்மை நிறமுடைய முட்டைகள், பொதுவாக இரண்டு இடுகின்றன. சில சமயங்களில் இம் முட்டைகளில் பழுப்பு அல்லது ஊதா நிறப் புள்ளிகள் காணப்படுகின்றன.

# 33. வெண்மார்பு நீர்க்கோழி
## (White Breasted Waterhen)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | அமெளரோர்னிஸ் ஃபோனிக்யூரஸ் (Amaurornis Phoenicurus) |
| வரிசை | : | க்ருயிஃபார்மெஸ் (Gruiformes) |
| குடும்பம் | : | ராலிடே (Rallidae) |

வெண்மார்பு நீர்க்கோழி சாம்பல்நிறக் கவுதாரி அளவு இருக்கிறது. இதன் வால் கட்டையாக, கரும் பழுப்பு நிறத்திலுள்ளது. இதன் கால்களும் விரல்களும் நீண்டு இறகுகளற்றுக் காணப்படு



படம் III—33.1, வெண்மார்பு நீர்க்கோழி

கின்றன. இதன் முகமும், மார்பும் வெள்ளை நிறத்திலும், நிமிர்த்தி வைக்கப்பட்டுள்ள வாலின் அடிப்பகுதி சிவந்த கருநிறத்திலுமுள்ளன. இது தனித்தோ அல்லது இணையுடனோ ஆறு, குளம், குட்டை ஆகியவற்றின் நீரோரங்களிலுள்ள புதர்களில் காணப்படுகிறது. மழைக் காலங்களில் தேங்கியுள்ள நீர் நிலைகளிலும்

இதைக் காணலாம். இது நீர் நிலையைச் சுற்றி வரும்பொழுது, இதன் வால் அடிக்கடி மேல் நோக்கி அசைவதால் அதன் அடிப் பகுதியின் சிவப்பு நிறம் அடிக்கடி பளிச் பளிச்சென்று தெரிந்து மறைகிறது. இது ஒதுங்கி வாழும் குணமுடையது. ஆனால் இதற்குத் தொல்லை தரவில்லையெனின் இது தோட்டங்களிலும், புல்வெளிகளிலும் பயமின்றி அலைந்து திரியும்.

வெண்மார்பு நீர்க்கோழி, புழு, பூச்சி, நத்தை, விதைகள் போன்றவற்றை உணவாகக் கொள்கிறது. இது இனப்பெருக்கக் காலங்களைத் தவிர மற்றக் காலங்களில் கத்துவதில்லை. இப் பருவத்தில் ஆண் பறவை செடிகளிலமர்ந்து உரக்க ஒலி எழுப்பு கிறது. இது நீருக்கருகில் அடர்ந்த மறைவிடத்தில், நிலத்தில் கூடு கட்டுகிறது. இக் கூடு குச்சிகளாலும், கொடிகளாலும் குழிவான கிண்ணம் போன்று கட்டப்படுகிறது. இது 6-7 முட்டைகளிடுகிறது. இம் முட்டை வெளிர் மஞ்சள் நிறத்திலோ அல்லது வெளிர் சிவப்பு நிறத்திலோ உள்ளது. இம் முட்டையில் செம்பழும்பு நிறக் கோடுகளும், திட்டுக்களும் காணப்படுகின்றன.

# 34. ஊதாநிறக் காணுங்கோழி

## (Purple Moorhen)

விலங்கியல் பெயர் : போர்ஃபைரியோ போர்ஃபைரியோ (Porphyrio porphyrio)
வரிசை : க்ருயி.ஃபார்மெஸ் (Gruiformes)
குடும்பம் : ராலிடே (Rallidae)

ஊதாநிறக் காணுங்கோழி, நம் வீட்டுக் கோழியின் பருமன் இருக்கிறது. இது அழகாக இருப்பினும் உடல் சற்றுக் கட்டற்றுத் தோன்றுகிறது. இதன் கால்களும், விரல்களும் நீண்டு சிவப்பாக வுள்ளன. இப்பறவை ஊதா நிறத்திலிருக்கிறது. தலையின்



படம் III—34.1. ஊதாநிறக் காணுங்கோழி

நெற்றிப்பகுதி இறகுகளற்றுள்ளது. அலகு தடித்துக் குட்டையாகச் சிவப்பாகவுள்ளது. வால் கட்டையாக அடிப்பகுதியில் வெண்மை நிறத்தில் தோன்றுகிறது. இப் பறவை பெருங் கூட்டமாக நீர் நிலைகளுக்கருகிலுள்ள நாணல், கோரை போன்ற புதர்களில் இரை

தேடித் திரிகிறது. இப் பறவைகள் ஒன்றோடொன்று நெருக்கமாகக் கைகோர்த்துக்கொண்டுள்ளதுபோல் கூட்டமாகக் காணப்படுகின்றன. இவைகள் நீரில் மிதந்துகொண்டுள்ள நீர்த் தாவரங்களின் மீதும், தாமரை இலைகளின் மீதும் நடந்து திரிகின்றன. இவைகள் திரியும்பொழுது வாலை அடிக்கடி மேல் நோக்கி விசுக் விசுக்கென உயர்த்துவது குறிப்பிடத்தக்கது.

இப் பறவைகள் தொந்தரவு ஏற்படும் பொழுது ஓடி ஒளிந்து கொள்கின்றன. மிக நெருக்கடியான நிலை ஏற்பட்டாலன்றி இவைகள் பறப்பதில்லை. இவைகள் திறமையாகப் பறக்கக் கூடியவைகளல்ல வெனினும் வேகமாகப் பறந்து செல்கின்றன. இவைகள் பறந்து செல்லும் பொழுது இவற்றின் நீண்ட சிவப்புக் கால்கள் பின்னுேக்கி ஊசலாடிக்கொண்டுள்ளதைக் காணலாம். இவைகள் நெற்பயிர் தளிர்களையும் மற்ற நீர்த் தாவரங்களையும் உட்கொள்கின்றன. இப்பறவைகள் நெற்பயிர்களுக்கு அதிகச் சேதம் விளைவிக்கின்றன. இவைகள் தானியங்களைத் தின்று சேதப் படுத்துவதைக் காட்டிலும், பயிர்களை மிதித்து அழிப்பது மிக அதிகமாக உள்ளது. புழு, பூச்சி, நத்தை போன்றவைகளும் இவற்றின் உணவாகும். இவைகள் பல்வகைக் குரல் எழுப்பு கின்றன. இப் பறவையைக் கிராம மக்கள் விரும்பி உண்கின்றனர்.

நீர்த்தேக்கமுள்ள இடங்களில், நீர்த்தாவரங்களின் மீது வைக்கோல், புற்கள் போன்றவற்ருல் மெத்தென்ற கூடு கட்டு கிறது. ஒரு பறவை சுமார் 3-7 முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் வெளிர் மஞ்சளாகவோ அல்லது வெளிர் சிவப் பாகவோ செம்பழுப்புப் புள்ளிகளுடனே அல்லது நிறக் கரை களுடனே உள்ளன.

காணுங்கோழி (The Indian Moorhen Gallinula chloropus) தமிழ்நாட்டில் வேடந்தாங்கல் புகலரணில் இணையாகவோ அல்லது சிறு கூட்டமாகவோ நீந்தித் திரிவதைக் காணலாம். இது உலகம் முழுதும் பரவியுள்ளது. இது ஒவ்வொரு சமயமும் காலை உந்தி நீந்தும் பொழுது தலையை முன்னேக்கி அசைக்கும். அச்சமயத்தில் வால் மேல் நோக்கி உயரும். இது கருஞ்சாம்பல் கலந்த பழுப்பு நிறத்தில் தோன்றுகிறது.

இது நீரோரத்திலுள்ள புதர்களில் கூடு கட்டுகிறது. இது 5-12 முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் வெளிர் மஞ்சள் நிறத்தில் செம்பழுப்புக் கரைகளுடன் காணப்படுகின்றன.

# 35. பெரிய இந்திய பஸ்டார்டு
## (The Great Indian Bustard)

### வரகு கோழி

விலங்கியல் பெயர் : கோரியோடிஸ் நைக்ரிஸெப்ஸ் (Choriotis nigriceps)
வரிசை : க்ரூயி ஃபார்மெஸ் (Grui formes)
குடும்பம் : ஓடிடிடே (Otididae)

பெரிய இந்திய பஸ்டார்டு (வரகு கோழி) பறவையின் எண்ணிக்கை இன்று மிகவும்குறைந்து விட்டது. பாதுகாக்கப்பட வேண்டிய நம் நாட்டுப் பறவைகளில் ஒன்ருக இதை இந்திய வன விலங்குக் குழு அறிவித்திருக்கிறது. இப்பறவையைப் பாது காக்கும் முறையை யறிதல் வேண்டிய உலக வனவிலங்கு மானியக் குழுவின் திட்டப்படி (World wild life fund project No. 453) திரு ஆர். எஸ். தார்ம குமார் சிங்ஜி இப் பறவையின் தற்சமய நிலைமையை ஆய்ந்துவருகிருர். ஐக்கிய அமெரிக்காவும், இந்திய வேண்டுதல் சங்கமும் (Indian appeal) சேர்ந்து ரூ. 15,000/-ஐ ஆய்விற்காக இவருக்கு அளித்துள்ளன. இராஜஸ்தான் மாநிலத் தின் பெரும் பகுதிகளில் இப்பறவைகள் வெகுவாகக் குறைந்து விட்டன, என இவர் குறிப்பிடுகிருர். கால்நடை மேய்ச்சலாலும், விளை நிலங்களாக மாற்றப்பட்டதாலும் இப் பறவையின் வாழ் விடம் குறைந்துவிடவே, இதன் எண்ணிக்கை குறைய நேர்ந்தது எனக் குறிப்பிடுகிருர். மேலும் அனுமதியின்றி வேட்டையாடப் படுவதாலும் இப் பறவை மிகுதியாகக் குறைந்துவிட்டது. திருட்டு வேட்டைகளில் அதிகம் ஈடுபடுபவர்கள் காவல்துறை அதிகாரி களும் (Police officers) நிலக்கிழார்களுமாவர் என உலக வனவிலங்கு நிறுவனத்தின் இந்தியக் கிளை (World wild life—India) ஓர் அறிக் கையில் குறிப்பிடுகிறது. நம்நாட்டில் படித்தவர்களும், பொறுப் புள்ளவர்களும் வனவிலங்குகளின் அழிவிற்குக் காரணமா யுள்ளனர் என்பது மிக வேதனையும், வெட்கமும் படவேண்டிய தொன்ருகும். இது வேலியே பயிரை மேய்வதற்கு ஒப்பாகும்.

இத்தகைய இழிநிலை இனியாவது நிகழாதிருக்க நாம் ஆவன செய்யவேண்டும். வன விலங்குகள் மட்டுமின்றி நாட்டின் செல்வம் ஒவ்வொன்றையும். ஒவ்வொரு குடிமகனும் தன்னுடைய தைப்போல் பாதுகாக்கவேண்டுமெனத் தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறேன்.

வரண்ட நிலங்கள், குறைவான புற்களுள்ள நிலப்பகுதிகள், முட்காடுகள், விளை நிலங்கள் ஆகியவற்றில் இவை காணப்படு கின்றன. இது நிலத்தில் வாழும் பெரிய பறவைகளிலொன்று. இது ஏறக்குறைய பிணந்தின்னிக் கழுகின் பருமன் இருக்கிறது. இது சுமார் 90 செ.மீ. உயரமும் 15 கி.கிராம் எடையும் இருக்



படம் 35.1. பெரிய இந்திய பஸ்டார்டு

கிறது. இது ஒரு சிறு தீப்பறவையைப் (Ostrich) போல் தோன்று கிறது. இதன் கால்கள் இறகுகளற்றுத் தடித்துள்ளன. இதன் உடல், கால்களின் மீது படுகிடையாக நேர்கோணத்திலுள்ளது போலத் தோன்றுகிறது. இதன் உடலின் முதுகுப்பகுதி இளம் மஞ்சள் நிறத்தில் இடையிடையே சிறுசிறு கருப்புக் கோடுகளுடன் தோன்றுகிறது. இதன் வயிற்றுப்பகுதி வெண்மையாகவும், மார்பின் பின்பகுதி குறுக்காகக் கருப்பு நிறத்திலுமுள்ளன. இது பறக்கும்பொழுது அகன்ற இறக்கைகளின் நுனியில், பெரிய வெண்மையானப் புள்ளி தெரிகிறது. இதன் தலையின் மேற் பகுதி கருப்பாகவும், கழுத்து வெண்மையாகவும் உள்ளன. பெண் பறவை ஆண் பறவையைக் காட்டிலும் சற்றுச் சிறியது.

இப் பறவைகள் ஆங்காங்கே தனித் தனியாகக் காணப்படு கின்றன. சில சமயங்களில் இரண்டு, மூன்று சேர்ந்தும் பிரிந்தும் (Loose party) காணப்படுகின்றன. இவைகள் ஒதுங்கி வாழும் இயல்புடையவை. அதனால் இவற்றின் அருகில் எளிதில் நெருங்கிச் செல்ல இயலாது. இத்தகைய குணம் படைத்தும் வேட்டையாடு பவர்களுக்கு இவைகள் இலக்காவது மிகவும் ஆச்சரியப்படத் தக்க தாகும். இதன் மறைவைத் தவிர்க்கும் மற்றொரு நடவடிக்கையாக இதனை நம் தேசியப் பறவையாகத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று பரிந்துரைத்தவர்களும் உண்டு. இப் பறவை நாடு முழுவதும் பரவியில்லாததினால் அம் மதிப்பு இதற்குக் கிடைக்கவில்லை.

பஸ்டார்டு பருமனாக இருப்பதால் துவக்கத்தில் பறக்கச் சிரமப் படுகிறது. பறந்து மேல்மட்டத்தை அடைந்துவிடின், சீராக நன்கு பறக்கிறது. இது வானில் அதிக உயரத்தில் பறக்காமல் சில மீட்டர் உயரத்திலேயே பறக்கிறது. இது பல்வகைப் பூச்சி களையும், ஊர்வன விலங்குகளையும் (பாம்பையும் சேர்த்து), விளை பயிர்களையும் உணவாகக் கொள்கிறது.

ஆண் பல பேடைகளை (பலதாரத்தன்மை) உடையதால் (Polygamous) இனப்பெருக்கக் காலங்களில் பல பெண்பறவை களுடன் சேர்ந்து வாழ்கிறது. பெண், அடர்த்தியற்றப் புதர்களி னிடையே நிலத்தைப் பரித்துக் குழிவுண்டாக்கி அதில் பொதுவாக ஒன்று, சில சமயங்களில் இரண்டு முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் பழுப்பு நிறப் படலங்களுடன் வெளிர் மஞ்சள் கலந்த பழுப்பு நிறத்தில் காணப்படுகின்றன.

# 36. வெண்கலச் சிறகு ஜகாஞ
## (Bronze Winged Jacana)

### தாமரைக் கோழி

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | மெடோபிடியஸ் இண்டிகஸ் (Metopidius indicus) |
| வரிசை | : | கெராட்ரிஃபார்மெஸ் (Charadriiformes) |
| குடும்பம் | : | ஜகானிடே (Jacanidae) |

வெண்கலச் சிறகு ஜகாஞ (தாமலரக் கோழி) ஏறக்குறைய பழுப்புக் கவுதாரியளவு இருக்கிறது. இது நீர்த் தேக்க இடங்களில் காணப்படும் நீண்ட கால்களையுடைய பறவை. இதன் கால்விரல்கள் மிக நீண்டு நீரிலுள்ள தாவரங்களின் பெரிய (தாமரை போன்ற) இலை மீது எளிதாக நடந்து செல்லும்வண்ணம் உள்ளன. இதன் விரல்கள் நீண்டுள்ளதால் இதன் எடை (கனம்) ஒரே இடத்தில் அழுத்தாமல் பரவலாக விநியோகிக்கப்படுகிறது. மேலும் அசையும் இலைகள் கவிழ்ந்துவிடாமல் நடந்து செல்லும் வகையில் இவ்விரல்கள் உள்ளன. இது இலைகளின் மீது நடந்து சென்று நீர்ப்பூச்சிகள், நத்தை, நீர்த் தாவர வேர், விதை போன்றவற்றைத் தேடி உணவாகக் கொள்கிறது.

இதன் தலை, கழுத்து, மார்பு ஆகிய பகுதிகள் பளபளப்பான கருப்பு நிறத்திலுள்ளன. முதுகும், சிறகுகளும் இளம் பசுமை கலந்த வெண்கல நிறத்திலுள்ளன. வால் இறகுகள் கட்டையாகச் சிவந்த தவிட்டு நிறத்தில் காணப்படுகின்றன. கண்ணின் பின்பகுதியிலிருந்து பிடரி வரையிலும் அகன்ற வெண்மை நிறப் பட்டையொன்று தெளிவாகச் செல்கிறது. முதிர்ச்சியடையாத பறவைகள் பெரும்பாலும் வெண் பழுப்பு நிறத்திலுள்ளன.

தொந்தரவு தராத நிலையில், சிறிதும் பயப்படாது, மனிதர்களுக்கு மிக அருகிலேயே நீர் நிலைகளில் உணவு தேடித் திரிவதைக்

காணலாம். இது நீரில் நன்கு மூழ்கும் (Dive) திறமை மிக்கது. தேவையேற்படின் இது நீந்திச் செல்லும். இது திறமையாகப் பறக்க முடிவதில்லை, கழுத்தையும், கால்களையும் நீட்டிக்கொண்டு



படம் III—36.1. வெண்கலச் சிறகு ஜகாளு

வேகமாகச் சிறகடித்துப் பறக்கிறது. பறக்கும்பொழுது நீட்டி வைக்கப்பட்டுள்ள கால்களிலுள்ள நீண்ட விரல்கள் காண்பதற் கேற்றதாயில்லை. இது சீக்-சீக்-சீக் என்ற கீச்சுக்குரல் எழுப்பு கிறது. இனப் பெருக்கக் காலத்தில் இது அதிகமாகக் கத்துகிறது.

# 37. மணற்கிளரி
## (Common Sandpiper)

விலங்கியல் பெயர் : டிரிங்கா ஹைபோல்யூகோஸ் (Tringa hypoleucos)
வரிசை : கெராட்ரி∴பார்மெஸ் (Charadriiformes)
குடும்பம் : கெராட்ரிடே (Charadriidae)

மணற்கிளரி நீரோரங்களிலும், சேறும் சகதியுமுள்ள இடங்களிலும் காணப்படுகிறது. இது காடையளவு பருமன் இருக்கிறது. உடலின் மேற்பகுதி வெளிர்ப் பசுமஞ்சளும், பழுப்பும் கலந்த நிறத்திலும், வயிற்றுப் பகுதி வெண்மை நிறத்திலும் மார்பின் இரு மருங்கும் அழுக்குப்படிந்த மங்கிய நிறத்திலும் உள்ளன. முன் கழுத்துப் பகுதியில் சில கருப்புக் கீற்றுகள் காணப்படுகின்றன. இது பறக்கும்பொழுது பிட்டத்திலும் வாலிலும் உள்ள



படம் III—37.1. மணற்கிளரி

பழுப்பு நிறமும், சிறகிலுள்ள வெண் கோடுகளும் தெரிகின்றன. கால்களில் இறகுகள் இல்லை.

இது நம் நாட்டிற்கு வலசை வரும் பறவைகளிலொன்று. இது ஐரோப்பாவின் பல பாகங்களிலிருந்தும் இங்கு வருகிறது.

இது ஜூலை-ஆகஸ்டு மாதங்களிலேயே மற்றப் பறவைகளுக்கு முன்பே இங்கு வந்து, மார்ச் மாதம் முதல் தேதி புறப்பட்டுச் சென்றுவிடுகிறது. சேய்ப் பெருக்கம் செய்யாத சில பறவைகள் வருட முழுதும் இங்கு சமவெளிப் பகுதிகளில் தங்கிவிடுகின்றன.

இவைகள் தனித்து வாழ்பவை. தனிப் பறவை நீரோரங்களில் உடலையும், வாலையும் அசைத்துக்கொண்டு ஓய்வு ஒளிவு அற்று ஓடித் திரிவதைக் காணலாம். அப்போதைக்கப்போது ஓடிக் கொண்டே தலையையும், கழுத்தையும் கீழ்நோக்கி உந்துவதையும் காணலாம். தொந்தரவு ஏற்படும்பொழுது "டீ, டீ, டீ" என்ற கீச்சுக் குரலுடன் நீருக்குச் சற்று மேலே, வேகமாகச் சிறகடித்துப் பறந்து செல்கிறது. இது ஓய்வாக இருக்கும்பொழுது "வீட், வீட்" என்ற நீண்ட மெல்லிய ஒலி உண்டாக்குகிறது. ஒவ்வொரு பறவையும் பழக்கப்பட்ட உணவிடத்திலேயே சுற்றித் திரிந்துகொண்டிருக்கும். இது நீரோரத்திலுள்ள புழு, பூச்சி, நத்தை போன்றவற்றைத் தேடித் தின்கிறது.

இது கூழாங்கற் கரையிலும், நீர் சுற்றியுள்ள மேட்டுப் பகுதியிலும், சிறு குழியில் இலைகளை வைத்துக் கூடு கட்டுகிறது. இப் பறவை பொதுவாக நான்கு முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் வெளிர் மஞ்சள் நிறத்திலோ அல்லது சாம்பல் நிறத்திலோ, செம்பழுப்பு நிறப் புள்ளிகளுடனோ அல்லது படலங்களுடனோ உள்ளன.

# 38. வளையச் சிறு ஆள்காட்டி
## (Little Ringed Plover)

விலங்கியல் பெயர் : கெராட்ரியஸ் டூபியஸ் (Charadrius dubius)
வரிசை : கெராட்ரி:பார்மெஸ் (Charadriiformes)
குடும்பம் : கெராட்ரிடே (Charadriidae)

வளையச் சிறு ஆள்காட்டி, காடையைக் காட்டிலும் சிறியது. இதன் உடலின் மேற்பகுதி மணற் பழுப்பாகவும், கீழ்ப்பகுதி வெண்மையாகவும் உள்ளது. இதன் தலை உருண்டையாக அழுத்தமாக இருக்கிறது. அலகு, புறாவினுடையதைப் போன்று குட்டையாகத் தடித்துள்ளது. கால்கள் மெலிந்து இறகுகளற்றுள்ளன. இதன் நெற்றிப்பகுதி வெண்மையாகவும், முன் உச்சித் தலை கருப்பாகவும் உள்ளன. காதை மூடியுள்ள இறகுகளும், கண்களைச் சுற்றியுள்ளவைகளும் கருப்பாக உள்ளன. கழுத்தைச் சுற்றி ஒரு கருப்பு வளையம் இருக்கிறது. இதன் நிறம் இது வாழும் சூழ்நிலையுடன் ஒன்றிவிடுவதால் இதனை எளிதில் கண்டுகொள்ள முடிவதில்லை.


படம் III – 38.1. வளையச் சிறு ஆள்காட்டி

இது இணையாகவோ அல்லது சிறு சிறு கூட்டமாகப் பிரிந்தோ ஏரி, குளம் ஆகியவற்றின் ஈரக் கரையோரங்களிலும், அலை தழுவுகின்ற சேறுள்ள கடற்கரைப் பகுதிகளிலும் காணப்படுகிறது. இது வேகமாக நடந்து செல்கிறது. அப்போதைக்கப்போது திடீரென நின்று உடலை முன் சாய்த்து

உணவுப் பொருள்களைப் பொறுக்குகிறது. இது தன் கால் விரல்களால் சேற்றைத் தட்டிப், பூச்சிகள், சிறு நண்டுகள் போன்றவற்றைக் கலைத்து அவற்றின் குழிகளிலிருந்தும், வளைகளிலிருந்தும் வெளியேற்றிப் பிடித்துத் தின்கிறது.

ஏதாவது சந்தடி ஏற்பட்டு ஒரு பறவை எழுந்து பறக்கத் துவங்கும் முன், பரவலாகவுள்ள மற்றப் பறவைகளும் திடீரென ஒன்றுகக் கிளம்பி அனைத்தும் ஒரு கூட்டமாக வளைந்தும், திரும்பியும் பறந்து சென்று வேறொரு இடத்தில் உட்கார்ந்து விடுகின்றன. அவ்வப்பொழுது இப் பறவைகளின் வயிற்றுப் பகுதி வெண்மையாகப் பளிச்சிடுவதைக் காணலாம். இவற்றின் இறக்கைகளின் நுனி கூர்மையாகவுள்ளன. இவைகள் வேகமாகச் சிறகடித்துத் தரைக்கு மேலே சுமார் 5 மீட்டர் உயரத்தில் பறந்து செல்கின்றன.

இது, பொதுவாக நான்கு முட்டைகளை வரண்ட மணற்கரையில் கூழாங்கற்களுக்கிடையில் இடுகிறது; முட்டைகள் அவற்றின் சூழ்நிலைக்கேற்றவாறு இருப்பதால், அவற்றைக் கண்டு கொள்வது எளிதன்று.

# 39. உருண்டைவிழி ஆள்காட்டி
(Goggled Plover)

## கல் குர்லியூ (Stone Curlew)

விலங்கியல் பெயர் : புரினுஸ் ஈடினமஸ் (Burhinus oedicnemus)
வரிசை : கெராட்ரி∴பார்மெஸ் (Charadriiformes)
குடும்பம் : புரினிடே (Burhinidae)

உருண்டை விழி ஆள்காட்டி (கல்குர்லியூ) ஏறக்குறைய நம் வீட்டுக் கோழிப் பருமன் இருக்கிறது. இதற்கு நீண்ட கால்களுள்ளன. இதன் தலை உருண்டு சற்றுப் பெரியதாகவுள்ளது. இதன் கண்கள் உருண்டு பிதுங்கிக்கொண்டுள்ளது போலத் தோன்று



படம் III—39.1. உருண்டைவிழி ஆள்காட்டி

கிறது. இதன் கால்கள் இறகுகளற்றது; முழங்கால்கள் பெரியன, மஞ்சள் நிறமுடையன. இதன் இறக்கையின் மேல் உட்பகுதியில் இரு குறுகிய வெண் பட்டைகளும், கரும் இறக்கைகளின் நுனியில் அகன்ற வெண்மைப் பகுதியுமுள்ளன.

உருண்டை விழி ஆள்காட்டி, புதர்களும், முட்செடிகளுமுள்ள திறந்த பகுதிகளிலும், கூழாங்கற்களுள்ள வரண்ட ஆற்றங்கரைகளிலும் காணப்படுகிறது. இப் பறவை சில சமயங்களில் சாதாரண இலையுதிர்க் காடுகளிலும், கிராமங்களுக்கருகிலுள்ள மாந்தோப்புக்களிலும் இருக்கிறது. இது இணையாகவோ அல்லது 4–5 சேர்ந்தோ உள்ளது. இப் பறவை அந்தி வேளைகளிலும், இரவிலும் வெளி வருகிறது. ஏதாவது சந்தடி ஏற்படின் குறு அடி எடுத்து வைத்து வேகமாகச் செல்கிறது. செல்லும்பொழுது கழுத்தை உடலுக்குச் சமமாகப் படுகிடையில் வைத்துத் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு ஓடுகிறது. ஒரு புதரையோ, கல்லையோ அடைந்ததும் உடலை நிலத்தில் பதியவைத்துக் கழுத்தை நீட்டிப் பதுங்கிப் படுத்துக்கொள்கிறது. ஆனால் சந்தேகப்பட்டதைப் பார்த்துக்கொண்டே படுத்திருக்கும். இப் பறவையின் நிறம் வாழுமிடத்துடன் ஒன்றிவிடுவதால், இது இருப்பதைக் கண்டு கொள்ள முடிவதில்லை.

உருண்டை விழி ஆள்காட்டி புழு, பூச்சி, நத்தை சிறு ஊர்வனங்கள் போன்றவற்றை இரையாகக் கொள்கிறது. இப் பறவை எழுப்பும் ''பிக், பிக், பிக், பிக்''......''பிக்-விக், பிக்-விக்'' என்ற ஒலியைக் காலையிலும், மாலையிலும், இரவு நேரங்களிலும் கேட்கலாம்.

இப் பறவை வரண்ட ஆற்றங்கரையிலும், மாந்தோப்பிலும், வரண்ட நிலத்திலும் கூடு கட்டுகிறது. இக் கூடு புதரிலோ, புற்களினிடையோ அல்லது கற்களினிடையோ சிறு குழிவாகப் பரிக்கப் பட்டிருக்கும். பொதுவாக இரண்டு முட்டைகளை வெளிர் மஞ்சள் நிறத்திலோ அல்லது பசு மஞ்சள் நிறத்திலோ இடுகிறது. இம் முட்டைகளில் பழுப்பு நிறப் படலங்களுள்ளன. கற்களுக்கிடையிலுள்ள முட்டைகளை எளிதில் கண்டுகொள்ள இயலாது.

# 40. பழுப்புத்தலை கல்

## (Brown Headed Gull)

விலங்கியல் பெயர் : லாரஸ் ப்ருன்னிஸெபாலஸ் (Larus brunnicephalus)
வரிசை : கெராட்ரிஃபார்மெஸ் (Charadriiformes)
குடும்பம் : லாரிடே (Laridae)

பழுப்புத்தலை கல், நம் காட்டுக் காகத்தைக் காட்டிலும் சற்றுப் பெரியது. உடலின் மேற்பகுதி பழுப்பு நிறத்திலும் அடிப்பகுதி வெண்மை நிறத்திலுமிருக்கின்றன. கோடைக் காலத்தில் தலை,



படம் III—40.1. பழுப்புத்தலை கல்

காப்பித்தூள் போன்ற பழுப்பு நிறத்தில் காணப்படுகிறது. இப் பறவை குளிர் காலத்தில் நம் நாட்டிலிருக்கும்பொழுது, இதன் தலை மங்கிய வெண்மையாகத் தோன்றுகிறது. சில சமயங்களில் இதன் காதுகளுக்குப் பின் பிறை வடிவமான கருப்பு நிறக் கோடு செங்குத்தாகக் காணப்படுகிறது. இப் பறவைக்குஞ்சின் வால் வெண்மையானது; ஆனால் நுனி கருப்பாகவுள்ளது. இப் பறவை

கடற்கரையோரங்களில் அதிகமாகக் காணப்படுகிறது. இது உள் நாட்டு நீர் நிலைகளில் அதிகம் காணப்படுவதில்லை. இது செப் டம்பர்-அக்டோபர் மாதங்களில் நம் நாட்டிற்கு வந்து ஏப்ரல் மாதக் கடைசியில் சென்றுவிடுகிறது. இப் பறவை கடற்கரை யோரங்களிலுள்ள செம்படவர் சேரி, துறைமுகம், கப்பலின் மேல் தளம் போன்ற இடங்களில் பெருமளவு காணப்படுகிறது. பழுப் புத்தலை கல் படகுகளிலிருந்து எறியப்பட்ட மீன், கப்பல்களி லிருந்து கழித்து எறியப்பட்ட உணவுப் பண்டங்கள் போன்ற வற்றை உணவாகக்கொள்கிறது. இதனால் இது கழுகுடனும், கருடனுடனும் உணவிற்காகப் போட்டிப் போட வேண்டியிருக் கிறது. இது நீரில் படிந்து உணவுப் பண்டங்களைப் பொறுக்கு கிறது. உள் நாட்டில் புழு, பூச்சிகள், காய்கனிகள் போன்ற வற்றையும் உணவாகக் கொள்கிறது. இது பல்வகை ஒலி எழுப்பு கிறது.

இந்திய எல்லைக்குள் இது உயர்ந்த பகுதியான லடாக்கில் ஏரிகளுக்கருகில் சேய்ப்பெருக்கம் செய்கிறது. இது நீர்த் தாவரங் களைக் கொண்டு எளிய கூடு கட்டுகிறது. 2-3 முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் பசும் வெண்மை முதல் வெளிர் மஞ்சள் நிறம் வரை உள்ளன. கருப்பு அல்லது செம்பழுப்பு நிறக் கோடுகளும் கறைகளும் முட்டை மீது காணப்படுகின்றன.

# 41. இந்திய டெர்ன்
## (Indian Whiskered Tern)

விலங்கியல் பெயர் : க்லியோடோனியாஸ் ஹைப்ரிடா (Chliodonias hyb-rida)
வரிசை : கெராட்ரி∴பார்மெஸ் (Charadriiformes)
குடும்பம் : லாரிடே (Laridae)

இந்திய டெர்ன், மாடப்புறு அளவு இருக்கிறது. இதன் உடல் மெலிந்துள்ளது. இதன் பளபளப்பான சாம்பல் நிறத் தோற்றம் காண்பதற்கு மிக வனப்பாகத் தோன்றுகிறது. இதன் வால் சற்றுப்பிரிந்து காணப்படுகிறது. இதன் அலகு சிவப்பாகவோ



படம் III—41.1. இந்திய டெர்ன்

அல்லது கருஞ்சிவப்பாகவோ உள்ளது. இதன் கால்கள் மிகக் குட்டையாகவும், விரல்கள் விரலிடைப் படலத்தால் இணைக்கப் பட்டுமுள்ளன. இது சிறகுகளை மடித்து உட்கார்ந்திருக்கும் பொழுது சிறகுகளின் நுனி வாலிற்குப் பின் மிக நீண்டுள்ளன. இனப் பெருக்கக் காலமான கோடைக் காலத்தில் ஆணிலும் பெண்ணிலும் தலை கருமையாக மாறுகிறது. மேலும் வயிற்றுப்

பகுதியும் சற்றுக் கருமை நிறமடைகிறது. இது சதுப்பு நிலத்திலும், வயல் வெளிகளிலும், கடற்கரையோரச் சேற்றுப் பகுதிகளிலும் முன்னும் பின்னும் பறந்து கொண்டிருப்பதைக் காணலாம். இது பறக்கும்பொழுது அலகும் கண்களும் கீழ்நோக்கி இரையைத் தேடிக்கொண்டேயிருக்கின்றன. அப்போதைக்கப்போது கீழே திடீரென இறங்கி நண்டு, மீன், பூச்சி, தலைப் பிரட்டைப் போன்ற வற்றை இரையாகப் பிடித்துத் தின்கிறது. இது மீன்படகு களுக்குச் சென்று அங்கு கழித்து எறியப்பட்ட மீன் குஞ்சுகளைப் பொறுக்கித் தின்கிறது.

இந்திய டெர்ன் பெரும்பாலும் பறந்துகொண்டோ அல்லது கரையில் ஓய்வாக உட்கார்ந்துகொண்டோ இருப்பதைக் காண லாம். நீரில் திறமையாக நீந்தக் கூடியதாயிருப்பினும், நீரில் இறங்குவதில்லை. இந்திய டெர்ன் பறந்துகொண்டே "கிரீக்", "கிரீக்" என்ற ஒலியை உண்டாக்குகிறது.

இந்திய டெர்ன் காஷ்மீரிலும், மற்ற வட இந்தியப் பகுதி களிலும் சேய்ப்பெருக்கம் செய்கிறது. இது சருகுகளைக் கொண்டு ஒரு வட்டமான கூடு கட்டுகிறது. இக் கூடு நீரில் பாதி மூழ்கி யுள்ள செடிகளில் கட்டப்படுகிறது. இது இரண்டு அல்லது மூன்று முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் பசுமையாகவோ, நீல நிறமாகவோ அல்லது பழுப்பாகவோ உள்ளன. இம் முட்டை களில் ஆழ்ந்த அல்லது மங்கிய பழுப்பு நிறக் கோடுகளும் கறை களும் காணப்படுகின்றன.

# 42. பச்சைப் புரு
## (Common Green Pigeon)

| | | |
|---|---|---|
| விலங்கியல் பெயர் | : | ட்ரிரோன் ஃபோனிகோப்டெரா (Treron phoenicop-tera) |
| வரிசை | : | கொலம்பிஃபார்மெஸ் (Columbiformes) |
| குடும்பம் | : | கொலம்பிடே (Columbidae) |

நம் நாட்டில் பல இனப்பச்சைப் புருக்கள் உள்ளன; அவற்றின் கால்கள் சிவப்பு நிறமாகும். ஃபோனிகோப்டெரா இனப் பச்சைப் புருவின் கால்கள் மஞ்சள் நிறமாகவுள்ளன. இப்புரு எல்லா



படம் III—42.1. பச்சைப் புரு

விடங்களிலும் பரவியுள்ளது. இது காடுகளிலும், அடர்ந்த மரங்களுள்ள பரந்த வெளிகளிலும், கிராமங்களுக்கருகிலும், நகரங்களுக்கருகிலும் காணப்படுகிறது. இது பழங்களையே உணவாகக்

கொள்வதால் பொதுவாக ஆல், அரசு, அத்தி போன்ற மரங்களில் வாழ்கிறது. இது நிலத்திற்கு வருவது மிக அரிது. ஆபத்து நேருகின்ற சமயங்களில் இலையோடு இலையாகச் சலனமற்று மறைந்துவிடுகிறது. பச்சைப் புறாவின் மாமிசம் விரும்பி உண்ணப் படுவதாலும், மருத்துவத்திற்கும் பயன்படுவதாகக் கருதப்படுவ தாலும் இதனை மிகுதியாக வேட்டையாடி வருகின்றனர். பச்சைப் புறா மறைந்துவிடாமல் காப்பாற்றப் படவேண்டும்.

இது நம் வீட்டுப்புறா அளவு இருப்பினும் சற்றுத் தடித்த உடல் கொண்டது. இதன் உடலில் மஞ்சள், கரும் பச்சை, வெளிர் பழுப்பு நிறங்களும், இறக்கைகளிலும், தோள்களிலும் வெண் புள்ளிகளும், கருமை நிற இறக்கைகளின் குறுக்காக மஞ்சள் நிறப் பட்டையொன்றும் உள்ளன. பெண் புறாவில் இந்நிறங்கள் எடுப் பாகக் காணப்படுவதில்லை. பொதுவாக இதன் நிறம், வாழும் சூழ்நிலையுடன் ஒன்றித் தக்கபாதுகாப்பைத் தருகிறது.

பச்சைப் புறாக்கள் விரைந்து பறக்கக் கூடியவைகள். இவைகள் பகல் நேரங்களில் பழ மரங்களுக்குப் பறந்து சென்று மரங்களின் உச்சியில் அமர்ந்து பழங்களைத் தின்கின்றன. இவைகள் காலை யிலும் மாலையிலும் இறகுகளை விரித்து வெய்யிற் காய்கின்றன.

பச்சைப் புறா இலைகளின் மறைவில் குச்சிகளால் கூடு கட்டு கிறது. பொதுவாக இரண்டு பளபளப்பான வெண்ணிற முட்டை களிடுகிறது.

# 43. மணிப்புறு
## (Spotted Dove)

விலங்கியல் பெயர் : ஸ்ட்ரெப்டோபீலியா சைனென்சிஸ் (Streptopelia chinensis)
வரிசை : கொலம்பிஃபார்மெஸ் (Columbiformes)
குடும்பம் : கொலம்பிடே (Columbidae)

*மணிப்புறு, மாடப்புறு(கொலம்பாலிவியா)வைக் காட்டிலும்*




படம் III—43.1. (மேலே) மணிப்புறு. (கீழே) தவிட்டுப்புறு

சிறியது. இதன் உடலின் மேல்பகுதியில் இளஞ் சிவப்புக் கலந்த பழுப்பு நிறமும், சாம்பல் நிறமும் வெண் புள்ளிகளுடன் காணப் படுகிறது. இதன் கழுத்தின் பின்பகுதியில் வெண்புள்ளிகள் கொண்ட கருப்பு நிறம் கட்டங் கட்டமாகக் காணப்படுகிறது. மணிப்புறு இணையாகவும், சிறு கூட்டமாகவும் மரங்களுள்ள பரந்த பகுதிகளில் வாழ்கிறது. இது விளைநிலங்களிலும் காணப்படுகிறது. இது சிறு குச்சிகளால் கூடு கட்டி இரு முட்டைகளிடுகிறது.

# 44. தவிட்டுப் புரு
## (Red Turtle Dove)

விலங்கியல் பெயர் : ஸ்ட்ரெப்டோபீலியா ட்ராங்க்யுபாரிகா (Streptopelia tranquebarica)
வரிசை : கொலம்பிஃபார்மெஸ் (Columbiformes)
குடும்பம் : கொலம்பிடே (Columbidae)

(படம் III—43,1.ல் கீழ் இருப்பது)

தவிட்டுப்புரு பரந்த நிலங்களிலும் விளை நிலங்களிலும் காணப்படுகிறது. மற்றப் புரு இனங்களைக் காட்டிலும் தவிட்டுப் புரு மிகக் குறைவாயுள்ளது. மேலும் இப்புரு மனிதனையொட்டிக் காணப்படுவதில்லை. தவிட்டுப் புரு "குருகுர், குருகுர்" என்ற ஒலி உண்டாக்குகிறது. இதன் கூடு குச்சிகளால் மரக்கிளையில் கட்டப்படுகிறது. இது இரு வெண்ணிற முட்டைகளிடுகிறது.

மணிப் புருவும், தவிட்டுப் புருவும் வேட்டைப் பறவைகள். இவற்றின் மாமிசம் சுவையாக இருப்பதால் இவற்றை விரும்பி உண்கிறார்கள். இவைகள் பிடிக்கப்பட்டு நகரங்களில் விற்பனைக்குக் கொண்டு வரப்படுதைக் காணலாம். இவற்றின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து வருகிறது. இவற்றைப் பிடிப்பவர்கள் எளிய முறையில் பிடிக்கின்றனர். முன்பெல்லாம் வேட்டைக் காரர்கள் எங்கள் ஊர் பட்டரமங்கலத்திற்கு ஒவ்வொரு வருடமும் காற்றுக் காலத்தில் வந்து இப்புருக்களைப் பிடித்து விற்பனைக்கு எடுத்துச் செல்வார்கள். அவர்கள் புருக்களைப் பிடிக்கக் கையாண்ட முறையைச் சுருக்கமாக இங்குக் காண்போம்.

எங்கள் ஊரில் ஜூன், ஜூலை மாதங்களில் காற்று மிக அதிகம். இக் காலத்தில் புஞ்சை நிலங்களில் பயிர்கள் இல்லாத தினால் காற்றின் வேகம் மிக அதிகமாக இருக்கும். புருக்கள் காற்றை எதிர்த்து உயரப் பறக்க முடியாமல் மிகத் தாழ்வாக

நிலத்தையொட்டிப் பறக்கின்றன. மேலும் இவைகள் வேலியை யொட்டி காற்றிற்கு மறைவாக மறுபுறத்தில் பறக்கின்றன. இதனால் காற்று இவற்றின் மீது அதிகம் தாக்குவதை இவைகள் தவிர்த்துக்கொள்கின்றன. வேட்டையாடுபவர்கள் இதனைப் பயன்படுத்திப் புறாக்களைப் பிடித்தனர். உணவிற்காக அலைந்து திரியும் புறாக்கள் மாலை நேரங்களில் கூட்டங் கூட்டமாகப் பொது வாகக் காற்று அதிகம் தாக்காத வேலிகளையடுத்துத் தாழ்வாகப் பறந்து செல்லும். புறாக்கள் பறந்து வரும் வழியினைக் கண்டு, வலையின் ஒரு முனையை வேலியில் கட்டிச் சற்றுத் தொலைவில் மறு முனையைப் புறா பிடிப்பவர் வைத்துக்கொண்டு ஒரு மறைவின் பின் உட்கார்ந்துகொள்வர். புறாக்கள் கூட்டமாக வலையை நெருங்கும் பொழுது வலையை நிலத்திலிருந்து மேலே தூக்கி விரித்துப் புறாக் களைப் பிடித்துவிடுவர்.

# 45. கொண்டலாத்தி

## (Hoopoe)

விலங்கியல் பெயர் : உபுபா இபோப்ஸ் (Upupa epops)
வரிசை : கொராஸிஃபார்மெஸ் (Coraciiformes)
குடும்பம் : உபுபிடே (Upupidae)

கொண்டலாத்தி மானிறமுள்ள (இள மஞ்சள்) நம் நாட்டு வனப்புமிக்கப் பறவைகளிலொன்று. இது மைனு அளவு இருக்கிறது. இதன் முதுகு, இறக்கைகள், வால் ஆகிய பகுதிகளில் கருப்பு வெளுப்புப் பட்டைகள் வரிக்குதிரைக்குள்ளதைப் போன்று காணப்படுகின்றன. இதன் தலையில் மடக்கவும், விரிக்கவும் கூடிய



படம் III—45.1. கொண்டலாத்தி

விசிறி போன்ற கொண்டை இறகுகள் உள்ளன. இதன் அலகு மெலிந்து நீண்டு சற்று வளைந்துள்ளது. கொண்டலாத்தி இணையாகவோ அல்லது சிறு கூட்டமாகவோ காணப்படுகிறது. இது கிராமங்களையும், நகரங்களையும் அடுத்த பரந்த நிலங்களிலுள்ள

மரங்களிலும், தோப்புக்களிலும், புல்வெளிகளிலும், தோட்டங்களிலும் மிகுதியாகக் காணப்படுகிறது. இது தன் அலகைச் சிறிது திறந்தவண்ணம் நிலத்தில் மண்ணைக் கிளரிக்கொண்டும், உதிர்ந்த இலைகளைப் புரட்டிக்கொண்டும் இரை தேடி அங்குமிங்கும் நடந்தும் ஓடியும் திரிவதைக் காணலாம். மண்ணைக் கிளரும் சமயத்தில் கொண்டை (இறகுகள்) பின்னோக்கி மடிந்துகொள்கிறது. அபாயமோ, அதிர்ச்சியோ ஏற்படும்பொழுது கொண்டை விசிறி போன்று விரிந்துகொள்கிறது. இது எழுந்து இங்குமங்குமாகப் பறந்து சிறிது தொலைவு சென்று மீண்டும் நிலத்தில் உட்கார்ந்துவிடுகிறது. இச்சமயத்தில் கொண்டை மீண்டும் விரிந்துகொள்கிறது.

கொண்டலாத்தி உண்டாக்கும் பல்வகை ஒலிகளில் ''ஊபூ, ஊபூ'' என்னும் குரல் குறிப்பிடத்தக்கது. இது விட்டுவிட்டு சில சமயங்களில் சுமார் 10 நிமிட நேரம் கத்தும். இது கத்தும் பொழுது அலகைக் கீழ் நோக்கி மார்புடன் சேர்த்துவைத்துக் கொள்கிறது. சில சமயங்களில் நாய் குரைக்கும்பொழுது அதன் தலை அசைவது போல், இது தன் தலையை முன் அசைத்துக் கத்துகிறது. இச்சமயத்தில் அவ்வப்பொழுது கொண்டை விரிந்து மடங்குவதைக் காணலாம்.

இது பயிர்களுக்குச் சேதம் விளைவிக்கும். புழு, பூச்சிகள், இளவுயிரிகள் (Larva) போன்றவற்றை உணவாகக் கொள்வதால் விவசாயிக்குப் பயனுடைய பறவையாக உள்ளது. இது மரப் பொந்து, கற்சந்து, சுவர் சந்து ஆகியவற்றில் இறகு, மயிர், புல் ஆகியவற்றைக்கொண்டு சாதாரண கூடு கட்டுகிறது. இக் கூடு மிக அருவெருப்பான வாசனையுடையது. 5 அல்லது 6 வெண்ணிற முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் நாளடைவில் அழுக்குப் படிந்த நிறத்தையடைகின்றன.

# 46. மலையாள மலைமொங்கன்
## (Malabar Pied Horn Bill)

விலங்கியல் பெயர் : ஆந்த்ரகோஸெரஸ் கோரநாடஸ் (Anthracocerus coronatus)
வரிசை : கொராஸிஃபார்மெஸ் (Coraciiformes)
குடும்பம் : புஸிரோடிடே (Bucerotidae)

மலைமொங்கன் காண்பதற்கு விநோதமான பறவை. இதன் அலகு, கொம்பு போன்று வளைந்து பெரியதாய் மஞ்சள் கருப்பு



படம் III—46.1. மலையாள மலைமொங்கன்

நிறங்களுடன் உள்ளது. இவ்வலகின் மேல் பக்கவாட்டில் ஒடுங்கிய தலைக் கவசம் போன்ற உறுப்பு ஒன்று இருப்பது குறிப்

பிடத்தக்கது. இப்பறவை கழுகிற்கும் சற்றுப் பெரிதாகக் கருப்பும் வெளுப்புமான நிறத்திலிருக்கிறது. வாலின் நீண்ட அகன்ற கருப்பு இறகுகளின் வெளிப்பகுதி வெண்மையாகவுள்ளன. பெண் பறவையில் கண்ணைச் சுற்றியுள்ள தோல் வெண்மையாக இறகு களற்று உள்ளது.

மலைமொங்கன் மரங்கள் நிறைந்த பகுதிகளில் வாழ்கிறது. இது பழந்தின்னிப் பறவை. இது சிறப்பாக ஆல், அத்தி, அரசு போன்ற மரங்களிலும் மற்றப் பழமரங்களிலும் அதிகம் காணப் படுகிறது. இதன் முக்கிய உணவு பழமாயினும் பறவைக் குஞ்சு களையும், ஊர்வனவற்றையும் சில சமயத்தில் பிடித்துத் தின்கிறது. இது கூட்டமாகக் காணப்படுகிறது. இவைகள் மரத்திற்கு மரம் பறந்து செல்லும்பொழுது, ஒரு பறவையைப் பின்தொடர்ந்து செல்வதுபோல் மற்றப் பறவைகள் செல்கின்றன. இவைகள் துவக் கத்தில் வேகமாகச் சிறகடித்துப் பறந்து, பின் சற்று தூரம் சறுக்கி வளைவாகச் செல்கிறது. இவைகள் உரத்த கரகரப்பான ஒலி எழுப்புகின்றன.

இவைகளின் கூடு தனித்தன்மைப் பெற்றுள்ளது. மரப் பொந்தைத் தன் எச்சத்தால் பூசி, பின் பெண்பறவையை அதனுள் விட்டு வழியை அடைத்துவிடுகிறது. ஒரு சிறு துவாரம் மட்டும் விடப்படுகிறது. இத் துவாரத்தின் வழியாக அடை காக்கும் பெண் பறவைக்கு, ஆண் தீனி கொண்டுவந்து கொடுக் கிறது. முட்டைகள் பொறித்துக் குஞ்சுகள் வெளிவந்த பின், சுவரைத் தகர்த்துப் பெண்பறவை வெளிவருகிறது. இரு பறவை களும் சேர்ந்து உணவு தேடிக் குஞ்சுகளைப் பராமரிக்கின்றன. இவைகள் மார்ச்-ஜுன் மாதங்களில் சேய்ப் பெருக்கம் செய் கின்றன. இவைகள் 2-4 வெண்ணிற முட்டைகளிடுகின்றன.

# 47. மஹ்ராட்டா மரங்கொத்தி
## (Mahratta Woodpecker)

விலங்கியல் பெயர் : பிகோய்டெஸ் மஹ்ராட்டென்ஸிஸ் (Picoides mahrattensis)
வரிசை : பிஸிஃபார்மெஸ் (Piciformes)
குடும்பம் : பிசிடே (Picidae)

மரங்கள் நிறைந்த அமைதியான இடத்திற்குச் சந்தடியின்றிச் செல்லும்பொழுது "டக், டக்" என்ற ஒலியை மிகத் தொலைவிலிருந்தே கேட்க முடியும். இவ்வொலியின் திசையறிந்து மெதுவாகச் சென்று பார்த்தால் மரங்கொத்திப் பறவை மரத்தின் பட்டையைத் தன் அலகால் தட்டித் துளைப்பதைக் காணலாம். மரங்கொத்திப் பறவைகள் பூச்சிகளைத் தின்பவைகள். இவைகள் மரங்களைத் துளைக்கும் பூச்சிகளையும், இளவுயிரிகளையும் தின்பதால் மரங்களின் பாதுகாப்பிற்குப் பெரிதும் உதவுகின்றன. மரங்களைத் துளைத்துப் பூச்சிகளைப் பிடிக்க இவற்றின் அலகுகள் உளி போன்ற அமைப்பிலும், நாக்கு நீண்டு முட்களைக் கொண்ட நுனியுடனும் உள்ளன.



படம் III—47.1. மஹ்ராட்டா மரங்கொத்தி

மஹ்ராட்டா மரங்கொத்தி ஒரு புல்புல் பருமன் இருக்கிறது. இது இலையுதிர்க்காடுகளிலும் மாந்தோப்புக்களிலும், முட்புதர்காடு களிலும் காணப்படுகிறது. இதன் அலகு நீண்டு உறுதியாகக் கூர்மையாகவுள்ளது. இதன் வால் ஆப்புப் போன்று விரைப்பாக வுள்ளது. இதன் முதுகுப் பகுதியில் கருப்பு, வெளுப்புப் புள்ளிகள் சீரற்றுப் பரவலாக (ஒழுங்கற்று) உள்ளன. கழுத்துப்பகுதி பழுப்புக் கலந்த மஞ்சளாகவும் கொண்டைப் பகுதி இளஞ்சிவப் பாகவும் (Scarlet) உள்ளன. வயிற்றுப்புறம் வெண்மையாக இருக் கிறது. மார்புப் பகுதியிலும் வாலின் அடிப் பகுதியிலும் இளஞ் சிவப்புப் படலங்களும் உள்ளன. பெண் பறவையின் தலை உச்சி இளஞ்சிவப்பாக இல்லை.

மரங்கொத்திப் பறவைகள் இணைஇணையாகக் காணப்படு கின்றன. இணை மரத்திற்கு மரம் பறந்து சென்று அடி மரத்தில் அமர்ந்து பட்டையை அலகால் தட்டியும் பிளவுகளை உற்றுப் பார்த்தும், சுற்றிக்கொண்டோ அல்லது நேராகவோ மேல்நோக்கி ஏறுகிறது. இது தன் விரைப்பான வாலை மரத்தில் அழுத்தமாகப் படியவைத்துக்கொள்வதால் கீழே நழுவிவிடாமலிருக்க ஏதுவா கிறது.

இது அளவான உயரத்தில் நைந்துள்ள மரத்தைத் தன் அலகால் கொத்திப் பொந்து செய்து கூடு அமைக்கிறது. இது பொதுவாக மூன்று முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் உருண்டையாகப் பளபளப்பான வெண்ணிறத்தில் உள்ளன.

# 48. மைனா
(Common Myna)

## நாகண வாய்ப் புள்

விலங்கியல் பெயர் : அக்ரிடோதெரஸ் ட்ரிஸ்டிஸ் (Acridotheres tristis)
வரிசை : பேஸெரிஃபார்மெஸ் (Passeriformes)
குடும்பம் : ஸ்டர்னிடே (Sturnidae)

மைனாவைப் பொதுவாக நாம் அனைவரும் அறிவோம். இது தவிட்டுப் புறாவைக் காட்டிலும் சற்றுச் சிறியது. இது சுமார் 23 செ.மீட்டர் நீளமிருக்கிறது. இதன் உடல் கரும் பழுப்பு நிறமாக



படம் III—48.1. மைனா (நாகண வாய்ப்புள்)

உள்ளது. இதன் தலை கருப்பாகவும், கால்களும், அலகும், கண்களைச் சூழ்ந்துள்ள பகுதியும் ஆழ்ந்த மஞ்சள் நிறமாகவும் உள்ளன. இதன் சிறகுகளிலுள்ள வெண்மை நிறம் பறக்கும்

பொழுது நன்கு புலப்படுகிறது. காடுகளிலும் கிராமங்களிலும் நகரங்களிலும் காணப்படுகிறது.

இணையாகக் காணப்படுகிறது. மேய்ச்சல் நிலத்தில் கால்நடைகளுக்கருகில் இருப்பதைக் காணலாம். கால்நடைகளின் சந்தடியால் கலைக்கப்பட்டப் பூச்சிகளைப் பிடித்துத் தின்கிறது. இப்பறவைகள் பல ஒன்று சேர்ந்து நீர்த் தேங்கியுள்ள நிலத்தில் உட்கார்ந்து மண்புழு, மற்றப் புழு பூச்சிகள் போன்றவற்றைத் தேடித் தின்கின்றன. மழைக்காலத்தில் வெளியில் பறக்கும் கரையான்களைப் பிடித்துத் தின்ன இவைகள் கூட்டங் கூட்டமாக ஒன்று சேர்வதுண்டு. மேலும் ஆல், அரசு, அத்தி போன்ற மரங்களில் இவைகள் கூட்டமாகப் பழங்களைத் தின்றுகொண்டிருப்பதைக் காணலாம். உழுது கொண்டுள்ள நிலத்தில் இவைகள் ஏர்களின் பின் தொடர்ந்துசென்று உழுசால்களில் கிடைக்கும் புழு, பூச்சிகளைத் தின்கின்றன. இவைகள் பல ஒன்று சேர்ந்து காக்கைகளும், கிளிகளும் உள்ள மரங்களிலேயே இரவில் தங்குகின்றன. கிராமங்களிலும், நகரங்களிலும், காக்கை, சிட்டு, புறு போன்று இவைகளும் காணப்படுகின்றன. இவைகள் எழுப்பும் பல்வேறு வகையான ஒலியை நாம் அறிவோம்.

மைனு மரப்பொந்து, சுவர்ச் சந்து, வீட்டுக் கூரை ஆகிய இடங்களில் கூடு கட்டுகிறது. இது காகிதம், வைக்கோல் இன்னும் மற்றக் குப்பைக்கூளங்கள் ஆகியவற்றால் கூடு கட்டுகிறது. இது பளபளப்பான நான்கு அல்லது ஐந்து நீல நிற முட்டைகளிடுகிறது.

# 49. கதம்பநிற மைனு
## (Pied Myna)

விலங்கியல் பெயர் : ஸ்டர்னஸ் கோண்ட்ரா (Sturnus contra)
வரிசை : பேஸெரிஃபார்மெஸ் (Passeriformes)
குடும்பம் : ஸ்டர்னிடே (Sturnidae)

கதம்ப நிற மைனுவில் கருப்பும் வெண்மையும் மாறிமாறிக் காணப்படுகின்றன. இதன் அலகு இளஞ் சிவப்பும் மஞ்சளும் கலந்துள்ளது. இதன் கண்களைச் சுற்றி இறகுகளற்றச் சிவப்பு



படம் III—49.1. கதம்பநிற மைனு

நிறத் தோல் இருக்கிறது. இது இந்தியாவின் வடக்குப் பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் பரவியுள்ளது.

கதம்ப நிற மைனுக்கள் கூட்டம் கூட்டமாக விளை நிலங்களிலும் கிராமங்களுக்கருகிலும் உள்ளன. இவை தோட்டங்களிலும் சில சமயம் காணப்படுகின்றன. நீர் நிறைந்துள்ள நிலங்களில் மண்புழு, வெட்டுக்கிளி போன்றவற்றைப் பிடித்துத்

தின்கின்றன. இவைகள் அகன்ற இலைமரங்களில் தங்குகின்றன. இவைகள் பூச்சிகளையும் பழங்களையும் உணவாகக் கொள்கின்றன. இவைகள் மற்ற இன மைனாக்களுடன் சேர்ந்து கூட்டமாக, நீர் நிலைகளுக்கருகில் மேய்கின்ற கால்நடைகளுக்கருகிலிருந்து பூச்சிகளைப் பிடித்துத் தின்கின்றன. மேலும் இவைகள் கிராம, நகர்ப்புற ஓரங்களிலுள்ள குப்பைக் கூளங்களிலும் உணவு தேடுவதுண்டு.

மாமரம் போன்ற மரங்களின் உயர் கிளைகளில், குச்சிகள், இலைகள், புற்கள், குப்பைக்கூளங்கள் ஆகியவற்றால் மைனா உருண்டையான கூடு கட்டுகிறது. மூன்று அல்லது நான்கு கூடுகள் ஒரே மரத்தில் காணப்படுவதுண்டு. நான்கு அல்லது ஐந்து முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் நீல நிறத்தில் பளபளப்பாக உள்ளன.

# 50. கருந்தலை ஓரியோல்
## (Blackheaded Oriole)

### காஞ்சனப் புள்

விலங்கியல் பெயர் : ஓரியோலஸ் ஸேந்தார்னஸ் (Oriolus xanthornus)
வரிசை : பேஸெரிஃபார்மெஸ் (Passeriformes)
குடும்பம் : ஓரியோலிடே (Oriolidae)

கருந்தலை ஓரியோல் (காஞ்சனப் புள்) மைனா அளவு இருக்கிறது. இது மரங்களில் வாழும் பறவை. இதன் தலை, கழுத்து, முன்மார்பு ஆகிய பகுதிகள் ஆழ்ந்த கரு நிறத்திலுள்ளன. இக் கருமை நிறம் இறக்கைகளிலும், வாலிலும் காணப்படுகிறது.



படம் III—50.1. காஞ்சனப் புள்

பொதுவாக இதன் உடல் பொன் மஞ்சள் நிறமாகும். பெண் பறவையின் தலை மங்கிய கருப்பு நிறத்திலிருக்கிறது. இதன் இளஞ்சிவப்பு அலகும், சிவப்புக் கண்களும் குறிப்பிடத்தக்கவை

களாகும். இளம் பறவைகளின் நெற்றியில் மஞ்சள் நிறமும் தலையில் மஞ்சள் கோடுகளுமுள்ளன.

கருந்தலை ஓரியோல் தனித்துக் காட்டுப்பகுதிகளில் காணப் படுகிறது. இது ஒதுங்கி வாழும் குணம் படைத்திருப்பினும், அகன்றஇலை மரங்களுள்ள தோட்டங்களிலும் காணப்படுகிறது. பல்வகை இனிய ஒலிகளை உண்டாக்குகிறது. பெரும்பாலும் ஆல், அத்தி, அரசு, வாழைப்பழங்கள் போன்றவற்றை உணவாகக் கொள்கிறது. பூச்சிகளையும் தின்கிறது. மேலும் இலவம் பூக்களி லுள்ள தேனையும் குடிக்கிறது.

இது நார்களால் கிண்ணம் போன்ற கூடு கட்டுகிறது. இது நிலத்திலிருந்து சுமார் 4-10 மீட்டர் உயரமுள்ள மரத்தில் இலைகள் நிறைந்த இரு கிளைகளுக்கிடையில் கூட்டைக் கட்டுகிறது. இது இரண்டு அல்லது மூன்று முட்டைகளிடுகிறது. இம் முட்டைகள் இளஞ்சிவப்புக் கலந்த வெண்மை நிறமாக உள்ளன. இம் முட்டைகளில் கருப்பு அல்லது செம்பழுப்பு நிறப் புள்ளிகள் காணப்படுகின்றன. இது பலமுறை ஒரே மரத்தில் கூடு கட்டுவ துண்டு.

# மேற்கோள் நூற்பட்டியல்
# (BIBLIOGRAPHY)

## BOOKS & BOOKLETS


1. Ali, Salim and Laeeq Futehally (1970), **'Common Birds'**, National Book Trust of India.
2. Ali, Salim (1971), **'The Book of Indian Birds'**, Bombay Natural History Society, Bombay.
3. Bates, Capt. R. S. P. (1931) **'Birds life in India'**, Bombay Natural History Society.
4. Black, John D. (1954) **'Biological Conservation'**, Megraw-Hill.
5. Bourliere, Francois, (1955) **'The Natural History of Mammals'**, Harrop & Co. Ltd.
6. Carrington, Richard (1959) **'Elephants'**, Basic Books, Inc., New York.
7. Gee, E. P. (1969) **'The Wild life of India'**, Collins Fontana Books.
8. Issued by the Chief Conservator of Forest of Tamil Nadu **'Mudumalai. The Wild Life Sanctuary in Madras State, (Now Tamil Nadu)'**.
9. Krishnan, M. (1960) **'The Vedanthangal Sanctuary for Water Birds'**, Issued by the Madras (now Tamil Nadu) State Forest Department.
10. Krishnan, M. (1967) **'The Jungle and backyard'**, Ministry of Information and Broadcasting, New Delhi.

11. Prater, S. H. (1971) **'The Book of Indian Animals'**, Bombay Natural History Society, Bombay.

12. Reader's Digest Association. (1970) **'The Living World of Animals'.**

13. Report of the Expert Committee of Indian Board for Wildlife. (1970) **'Wild Life Conservation in India'**.

14. World Wild Life-India-Indian National Appeal. (1971) **'The Tiger must be saved'**, News Letter No. 4 June/July 1971.

## ARTICLES

1. Arjan Singh. (1971) **'Wild Life in India'**, The Indian Express. October 1 & 2, 1971.

2. Express News Service. (1971) **'Grazing threat to Wild life'**, The Sunday Standard. December 12, 1971.

3. Futehally, Zafar (1971) **'Natural Principles of Land Use'**, The Indian Express. July 24, 1971.

4. Mallinson, Jeremy, J. C. (1971) **'The Pigmy Hog (Sus salvanius (Hodgson) in Northern Assam'**, J. Bombay nat. Hist. Soc. Vol. 68 No. 2 August, 1971.

5. Mallinson, Jeremy, J.C. (1971) **'A note on the Hispid Hare'**, (Caprologus hispidus (Pearson 1939). J. Bombay nat. Hist. Soc. Vol. 68 No. 2 August, 1971.

6. Neelkant, K. (1963) Peacock—**'Our National Bird'**, The Hindu Sunday Weekly Magazine. March 3, 1963.

7. Badsha, M. A. (1961) **'A City of Flamingoes'**, The Hindu Sunday Weekly Magazine. May 12, 1961.

8. Badsha, M. A. (1961) **'Choice of a National Bird'**, The Hindu Sunday Weekly Magazine. July 16, 1961.

9. Badsha, M. A. (1961) **'Wild life must be preserved'**, The Hindu Sunday Weekly Magazine. October 3, 1961.

10. Badsha, M. A. (1961) **'Migration of Birds in Madras State'**, The Hindu Weekly Magazine (Sunday). December 17, 1961.

11. Badsha, M. A. (1971) **'The Enchanting Worldof Birds'**, The Hindu Sunday Weekly Magazine. October 3 1971.

12. Satyamurthi, S. T. (1965) **"The 'Thevangu' of South India"** The Hindu Sunday Weekly Magazine. August 8, 1965.

13. Sumati K. Sampemane. (1971) **'The Tree People'**, Science Today. June, 1971.

## FOR FURTHER REFERENCE

I. Chaturvedi, M.D. ('68) **'The Felines'**, National Book Trust, India.

II. Krishnan, M. ('71 & '72) **'An ecological Survey of the larger Mammals of Peninsular India'**, J. Bombay Nat. Hist. Soc. Vol. 68 (3), 69 (1) & 69 (2) & (3).

III. Sankhala, Kailash, ('73) **'Wild beauty'**, National Book Trust, India.

# கலைச்சொல் அகராதி

அ

| | |
|---|---|
| அச்சுறுத்தல் | — Alarm |
| அழுகிய பொருட்களைத் தின்பவை | — Scavenger |
| அறிவியல் முறை | — Scientific method |

ஆ

| | |
|---|---|
| ஆக்ஸிஸ் ஆக்ஸிஸ் | — Axis axis (chital) |
| ஆலா | — Tern |
| ஆற்றுக் குருவி | — Tern |

இ

| | |
|---|---|
| இபெக்ஸ் | — Ibex |
| இயற்கைச் சமன்நிலை | — Balance of Nature |
| இயற்கை மூலப் பொருட்கள் | — Natural resources |
| இயல் பூக்கம் | — Instinct |
| இலையுதிர்க் காடு | — Deciduous forest |
| இலையுதிர்க் காலம் | — Autumn |
| இளஞ் சிவப்பு | — Pink |
| இளம் பழுப்பு | — Drab |
| இளவுயிர் | — Larva |
| இறக்கை | — Wing |
| இனப்பெருக்க இடம் | — Breeding ground |
| இனம் | — Species |

ஈ

| | |
|---|---|
| ஈக்ரெட் | — Egret |

உ

உடும்பு — Varanus monitor
உட் பிராந்தியம் — Sub-region
உணவிடம் — Feeding ground
உள்நாட்டு வலசை — Local migration
உள்ளினம் — Sub-species

ஊ

ஊலாக் — Hoolock (Hylobates hoolock)
ஊன் உண்ணி — Carnivorous

எ

எலிபஸ் மேக்சிமஸ் — Elephus maximus
எல்லை ஏற்படுத்துதல் — Territory
எளிதில் ஆவியாதல் — Volatile

ஒ

ஓரியண்டல் மண்டலம் — Oriental region

க

கசிவு — Ooze
கஸ்தூரி மான் — Musk deer (Moschus moschiferous)
கடமான் — Sambar
கடமை (சாம்பர்) — Samber
கணக்கெடுப்பு — Census
கபோதம் — Pigeon
கம்பளம் (மென் மயிர்) — Wooly
கரு சுமக்கும் காலம் — Gestation
கருடன் — Brahming kite
கருப்புக் கவுதாரி — Black patridge
கலிஜிஃ பீசண்ட் — Kalij pheasant (Lophura leucomelana)
கழுதைப் புலி — Hyaena-Hyaena hyaena
கழுத்துப் பிடரி — Crest, nap

கனிதரும் காலம் — Autumn
கன்னப்பை — Cheek pouch

கா

காட்டுக் கோழி — Jungle fowl (Gallus sonnoratii)
காட்டுப் பன்றி — Boar (sus scrofa)
காட்டு முயல் — Hare (Lepus nigricollis)
காட்டெருமை — Wild buffalo
காணும் மாடம் — Observation tower
காரகால் — Caracal
கார்மொராண்ட் — Cormorant
காஷ்மீர் மான் — Kashmir stag (cervus elaphus hanglu)

கி

கிரஸ்டேசியன் — Crustacean
கிலுகிலுப்பு — Rattle

கீ

கீரி — Mongoose
கீற்றுகள் — Streaks

கு

குடும்பம் — Family
குத்துவாள் — Dagger
குத்தெலும்பு — Keel
குரொகொடைலஸ் பாலஸ்டிரிஸ் — Crocodylus palustris -(crocodile)
குரைக்கும் மான் — Barking deer (Muntiaus muntjak)
குளிர் காலம் — Winter
குள்ளம் பன்றி — Pygmy Hog (Sus salvanius)
குழு — Committee

கூ

கூதிர் காலம் — Autumn
கூழைக் கடா — Pelican

கெ

| | |
|---|---|
| கெஸெல் | — Gazelle |

கே

| | |
|---|---|
| கேல்லஸ் சொன்னெரடி | — Gallus sonnoratii–Jungle fowl |

கொ

| | |
|---|---|
| கொண்டை | — Crest |
| கொரால் | — Goral (Naemorhedus goral) |

கோ

| | |
|---|---|
| கோக்லாஸ் | — Koklas |
| கோடுகள் | — Streaks |
| கோடைக் காலம் | — Summer |
| கோரைப் பற்கள் | — Canine teeth |

கௌ

| | |
|---|---|
| கௌர் | — Gour-Bos gaurus |

ச

| | |
|---|---|
| சதுப்பு நிலம் | — Swamp |
| சதுப்பு மான் | — Swamp deer (cervus duvauceli) |
| சமன் நிலை | — Balance |
| சமவெளி | — Plain |
| சருகுமான் | — Mouse deer |
| சலசலப்பு | — Rattle |
| சலுகை | — Advantage |
| சஸ் சால்வேனியஸ் | — Sus salvanius (Pygmy Hog) |
| சஸ் ஸ்குரோபா | — Sus scrofa (Boar) |

சா

| | |
|---|---|
| சாம்பல் தாரா | — Grey duck |
| சாம்பல் நிறப் பெலிக்கன் | — Grey pelican |
| சாம்பல் நிறம் | — Grey colour |

சி

சிங்கக் கூட்டம் — Pride of lions
சிபியோடைட்ஸ் இண்டிகா — Sypheotides indica.
சிரோ — Scrow (capriconis sumathrensis)
சிவப்புக் காட்டுக் கோழி — Red jungle fowl (Gallus gallus)
சிறகு — Wing
சிறுத்தை — Leopard (Panthera pardus)
சிற்றினம் — Race

சு

சுண்டெலி மான் — Mouse deer (Tragulus memina)

சூ

சூழ்நிலைக்கேற்பத் தழுவுதல் — Adaptation
சூழ்நிலையியல் — Ecology
சூழ்நிலை — Environment

செ

செங்கரு நிலம் — Violet
செந்தவிட்டு நிறம் — Chestnut colour
செம்மஞ்சள் — Orange colour
செர்வஸ் இலாபஸ் ஹாங்கிலு — Cervus elaphus hanglu
செர்வஸ் டுவௌசெலி — Cervas duvauceli

சே

சேய்ப்பெருக்க இடம் — Breeding ground
சேய்ப்பெருக்கப் பழக்கங்கள் — Breeding habits

சை

சைபீரியன் கிரேன் — Siberian crane

சோ

சோலைகள் — Sholas

டா

| | |
|---|---|
| டாஹர் | — Tahr-Hemitragus jemeahicus |

டெ

| | |
|---|---|
| டெட்ரவேஃகேலஸ் இமாலயன்சிஸ் | — Tetraogallus himalayensis |

த

| | |
|---|---|
| தடிப்பு | — Ridge |
| தட்ப வெப்பம் | — Climate |
| தரிசு நிலம் | — Barren ground |
| தலைப் பிரட்டை | — Tadpole |

தா

| | |
|---|---|
| தாங்கல் | — Buffer |
| தாடை | — Chin |
| தாமரைக் கோழி | — Bronze winged jacana |
| தாவர உண்ணி | — Herbivorous |

தி

| | |
|---|---|
| திட்டுத் திட்டாக | — Blotch |
| திறந்த வாயான் | — Open billed stork |

தீ

| | |
|---|---|
| தீவிரமான | — Dynamic |

து

| | |
|---|---|
| துணைக் கண்டம் | — Sub-continent |

தே

| | |
|---|---|
| தேசிய வனம் | — National park |
| தேன் அடை | — Honey comb |

தொ

| | |
|---|---|
| தொண்டுப்பட்டி | — Bound |

தோ

| | | |
|---|---|---|
| தோட்டி | — | Scavenger |

ந

| | | |
|---|---|---|
| நத்தைக் கொத்தி நாரை | — | Open billed stork |

நா

| | | |
|---|---|---|
| நாரை | — | Stork |
| நான்கு கொம்பு மான் | — | Tetraceros quadricornis |

நி

| | | |
|---|---|---|
| நிலைத்த | — | Static |

நீ

| | | |
|---|---|---|
| நீரில் நடக்கும் பறவை | — | Wadding bird |
| நீரில் மூழ்குதல் | — | Dive |
| நீரையடுத்துள்ள பறவைகள் | — | Water side birds. |
| நீர்க் காக்கை | — | Cormorant |
| நீர் நாய் | — | Lutra lutra |
| நீர்ப் பதன் | — | Humid |
| நீர்ப் பறவைகள் | — | Water birds |
| நீல்கை | — | Nilgai |

நெ

| | | |
|---|---|---|
| நெமோரிடஸ் கொரல் | — | Naemorhedus goral |

நோ

| | | |
|---|---|---|
| நோய்க்கிருமி கொல்லி | — | Pesticide |

ப

| | | |
|---|---|---|
| பசுமை மாறுக்காடு | — | Ever green forest |
| பசு மஞ்சள் | — | Olive |
| பஞ்சுருட்டான் | — | Bee-eater |
| படகெலும்பு | — | Keel |
| படர்க் கொடி | — | Creeper |
| படுகிடையாக | — | Horizontally |

பரட்டைத்தலைக் குரங்கு — Bonnet monkey (Macaca radiata)
பராமரிப்பு — Manage
பரவுதல் — Dispersal
பலதார முறை — Polygamous
பழுப்புக் கொம்பலகி — Grey horn bill (Tockus birostris)
பறக்கும் பல்லி — Flying lizard
பனிச் சிறுத்தை — Snow leopard (Panthera uncia)
பனிச் சேவல் — Snow-cock (Tetracogallus himalayensis)
பனிப் புறு — Snow pigeon (columba leuconata)
பன்றி மான் — Hog deer (Axis poreinus)

பா

பாதுகாப்பு — Conservation
பாந்திரா அன்சியா — Panthera uncia (snow-leopard)
பாந்திரா பார்டஸ் — Panthera pardus (Leopard)
பாந்திரா லியோ — Panthera leo (Lion)

பி

பிடரி மயிர் — Crest, mane
பிணந்தின்னிக் கழுகு — Vulture
பிராந்தியம் — Region
ஃபிளமிங்கோ — Flamingo

பு

புகலரண் — Sanctuary
புபாலஸ் புபாலிஸ் — Bubalus bubalis- (Wild buffalo)
புறு — Dove
புவியமைப்பு — Geographical
புள்ளி அலகு தாரா — Spot billed duck
புள்ளி அலகு பெலிக்கன் — Spotted billed pelican
புள்ளிமான் — Chital (Axis axis)
புனுகுப் பூனை — Civet cat (Vivericula indica)

பூ

| | |
|---|---|
| பூநாரை | — Flamingo |

பெ

| | |
|---|---|
| பெரினியல் பகுதி | — Perineal region |
| பெலிக்கன் | — Pelican |
| பெலிகேனஸ் பிலிபென்சிஸ் | — Pelicanus philippensis |

பே

| | |
|---|---|
| பேரினம் | — Genus |
| பேலியார்டிக் மண்டலம் | — Paleartic region |

பொ

| | |
|---|---|
| பொட்டுப் பொட்டான | — Blotch |
| பொன் லங்குர் | — Golden langur |

ம

| | |
|---|---|
| மங்கலான பழுப்பு | — Drab |
| மங்கிய மஞ்சள் நிறம் | — Buff |
| மஸ்டில்லா சைபீரிகா | — Mustela sibirica (Weasel) |
| மணற் குன்று | — Sand dune |
| மண்டலம் | — Zone |
| மந்தையாக | — Gregarious |
| மயக்க மருந்து | — Tranquilizer |
| முகடு | — Crest |
| மலைப்பாம்பு | — Python |
| மழித்து விட்டது போல | — Rounded |
| மறைதல் | — Extinct |

மா

| | |
|---|---|
| மாசு படுத்துதல் | — Pollute |
| மாறுத பசுமைக் காடு | — Ever green forest |
| மாறி வரும் பகுதி | — Transitional zone |
| மாறுபாடுகள் | — Modifications |

மி

| | |
|---|---|
| மிதவெப்பக் காடு | — Temperate forest |

மு

முக்கிளியான் — Grebe
முட்கால் கோழி — Spur fowl (Galloperdix spadicea)
முட்புதர்க் காடு — Scrub jungle
முதலை — Crocodile
முதுவேனிற் பருவம் — Summer
முள் எலி — Mole
முள்ளம் பன்றி — Porcupine (Hystrix indica)
முண்டியாகஸ் முண்ட்ஜாக் — Muntiacus muntjak (Barking deer)

மூ

மூஞ்சி — Muzzle, snout
மூஞ்சூரு — Schrew

மே

மேற்பார்வை — Supervision

மொ

மொஸ்சஸ் மொஸ்சிபெரஸ் — Moschus moschiferous (Musk deer)

மோ

மோனல் ஃபெஸன்ட் — Monal pheasant (Lophophorus impejanus)

ரெ

ரெசின் — Resin

ரை

ரைனோசரஸ் — Rhinocerus

ல

லங்குர் — Langur

லி

லிபஸ் நிக்ரிகோலிஸ் — Lepus nigricollis

வ

| | | |
|---|---|---|
| வகுப்பு | — | Class |
| வகை | — | Class |
| வகைப் படுத்துதல் | — | Classification |
| வகைப்பாடு | — | Classification |
| வடிமண் | — | Alluvial |
| வண்டல் மண் | — | Alluvial |
| வரகு கோழி | — | The great Indian bustard |
| வரிசை | — | Order |
| வலசை | — | Migration |
| வல்லுநர் | — | Expert |
| வல்லூறு | — | Falcon |

வா

| | | |
|---|---|---|
| வாரியம் | — | Board |
| வாழிடம் (வாழ்விடம்) | — | Habitat |
| வாழ்க்கைச் சுழல் | — | Life cycle |

வி

| | | |
|---|---|---|
| விரலிடைப் படலம் | — | Web |
| விவெர்ரிகுலா இண்டிகா | — | Viverricula indica (civet cat) |

வீ

| | | |
|---|---|---|
| வீசெல் (Weasel) | — | Mustela sibirica |

வெ

| | | |
|---|---|---|
| வெண்கலச் சிறகு ஜெகானா | — | Bronze winged jacana |
| வெண்கல நிறம் | — | Bronze |
| வெளிரிய | — | Pale |
| வெளுத்த | — | Pale |
| வெறுமையான | — | Barren |

வே

| | | |
|---|---|---|
| வேங்கை | — | Cheetah |
| வேட்டைப் பறவை | — | Game bird |

# தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

சென்னை-600031



## தமிழில் பயில்பவர்க்குக் கல்லூரிப் பாட நூல்கள்

(Tamil Medium Books for Colleges)

இதுவரை 606 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன



மேலும், விரைவில் வெளிவருபவை

| | | | |
|---|---|---|---|
| பொறியியல் | — | 43 | நூல்கள் |
| சட்டம் | — | 19 | ,, |
| மருத்துவம் | — | 9 | ,, |
| இயற்பியல் | — | 27 | ,, |
| வேதியியல் | — | 21 | ,, |
| தாவரவியல் | — | 17 | ,, |
| விலங்கியல் | — | 7 | ,, |
| கணிதம் | — | 19 | ,, |
| வணிகவியல் | — | 30 | ,, |
| பொருளாதாரம் | — | 21 | ,, |
| புவியியல் | — | 12 | ,, |
| வரலாறு | — | 36 | ,, |
| மனையியல் | — | 2 | ,, |
| தத்துவம் | — | 5 | ,, |
| உளவியல் | — | 4 | ,, |
| புள்ளியியல் | — | 2 | ,, |
| கல்வி | — | 3 | ,, |
| நிலப் பொதியியல் | — | 3 | ,, |
| அரசியல் | — | 25 | ,, |

கிடைக்குமிடம் :

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனக் கிடங்கு

(கல்லூரிக் கல்வி இயக்குநர் அலுவலகச் சுற்றுக்குள்)

கல்லூரிச் சாலை, நுங்கம்பாக்கம்,

சென்னை-600006.

கல்லூரிப் பாடநூல்களுக்கு 20% கழிவு வழங்கப்படும்.